# கவுரவத்தைக் கொடுக்கக் கூடிய துணிகள் —

## டெட்டினால் சலவை செய்யப்பட்டதே

- டெட்டினால் சலவை செய்யப்பட்ட துணிகள் பிரகாசமாகத் தோற்றமளிக்கும்.
  டெட்டின் சிறந்த சுத்திகரிப்புச் சலவை உங்களுடைய ஆடைகளைப் புத்தம்புதியதுபோல் பிரகாசிக்கச்செய்கிறது.
- டெட்டினால் சலவை செய்யப்பட்ட துணிகள் மிக வெண்மையாகத் தோற்றமளிக்கும்.
  டெட் ஆடைகளைச் சுத்தமாகவும், பிரகாசமாகவும் வெளுக்கும் சிறந்த பரிசுத்தகாரணி. டெட்டினால் துவைக்கப்பட்ட துணிகளுடன் நீலத்தையோ அல்லது வெண்மையாக்கும் பொருளையோ சேர்க்கவேண்டிய தேவையில்லை. காரணம் கண்கவரும் வெண்மையைத்தரும் பொருள் டெட்டில் அடங்கியுள்ளது.
- டெட்டினால் சலவை செய்தல் என்பது நவீன முறையில் சலவை செய்யப்படுவது என்பது பொருள்.
  வெந்நீரிலும், வெண்ணீரிலும் டெட்டை உபயோகித்து நன்கு சலவை செய்யலாம். டெட் அபரிமிதமாக நுரை தருகிறது. காட்டன், ஸில்க், ரேயான், கம்பளி [illegible] அல்லது கலர்த்துணிகள்—எல்லாவிதமான ஆடைகளுக்கும் டெட்டைத் தாராளமாக உபயோகிக்கலாம்.




டெட் வெண்மையாகவும் பளபளப்புடனும் சலவை செய்கிறது.

Shilpi Swm 21 TAM

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்—1.

## எங்கள் நினைவில் என்றும் வாழும்



அண்ணல் உயர்திரு

# நா. ஆறுமுகம் பிள்ளை

அவர்களின்

## முதல் ஆண்டு மறைவு நினைவு நாள்

காரைக்குடி தங்கபஸ்பம் புகையிலை, அருணகிரி விலாஸ் சியக்காய் பவுடர் பாக்டரி முதலிய நிறுவனங்களின் ஸ்தாபகர். இறையன்பும், நிறை வாழ்வும் கொண்டவர். ஏராளமான தர்மப் பணிகளுக்கு ஈந்தவர். எல்லோரது நினைவிலும் நீங்காது நிலைத்து வாழ்பவர்.

அன்னாரது முதல் ஆண்டு மறைவு நினைவு நாளன்று எங்கள் மனமார்ந்த அஞ்சலி.

என். ஆறுமுகம் பிள்ளை ஸன்ஸ்
காரைக்குடி.

பிலவ, பங்குனி 12

# கல்கி

மார்ச் 25, 1962



## பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| ஏமாற்றுவதைவிட்டுவிட வேண்டும் | (தலையங்கம்) | ... | 5 |
| இது முறைதானா? | ... | ... | 6 |
| கசப்பான உண்மை | ... | ... | 7 |
| காணாமல் போன கடிதங்கள் | கொக்கி | ... | 9 |
| மணிபல்லவம் | நா. பார்த்தசாரதி | ... | 13 |
| கல்லறையா, கோயிலா? | அ. தமிழ்மாறன் | ... | 23 |
| பவழத் தீவு | வாண்டுமாமா—ரமணி | ... | 26 |
| திருமூலர் தவமொழி | ராஜாஜி—சோமு | ... | 31 |
| படித்துப் பாருங்கள் | ... | ... | 35 |
| நந்தவனம் | சோமு | ... | 38 |
| மில்லர் பாதிரியார் | கதிர் | ... | 47 |
| பாசத்தின் பரிசு (நாடக விமரிசனம்) | காந்தன் | ... | 49 |
| வாழ்க்கை எனும் விளையாட்டு | ஜ. சாமிநாதன் | ... | 50 |
| புதுவெள்ளம் | அகிலன் | ... | 59 |
| மணி என்ன? | ஏ. எஸ். சுந்தரராஜன் | ... | 66 |
| பித்துக்குளி | பா. தண்டபாணி | ... | 73 |
| சிரிப்பும் அழுகையும் | கே. மித்ரா | ... | 80 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



சிகரெட்டின் விலை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு தரமும் உயர்வு என்ற கருத்து பற்பலரிடம் உண்டு. இது எப்போதுமேயோ, எல்லா விஷயங்களிலுமேயோ உண்மையாகிவிடுவதில்லை. ஏனென்றால், அத்தகைய விலையில் மிகப் பெரும் பங்கு பற்பலவான வரிகளுக்கே போய்ச் சேருகின்றன.

# புகையிலையின் வரலாறு... 10

Panama

20

CIGARETTES

RUPEE

# பனாமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**



பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 710 TM

Greats' Advtg.



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 34

# ஏமாற்றுவதை விட்டுவிட வேண்டும்

நடந்த தேர்தல் சம்பவங்களைக் கவனித்த பின்னர் காங்கிரஸ் கட்சிக்கு ராஜாஜி ஒரு சிறிய ஆலோசனை கூறியுள்ளார்.

காங்கிரஸ் கட்சி தனது பெயரை "சோஷலிஸ்டு"க் கட்சி என்று மாற்றிக்கொள்ள வேண்டும் என்பதுதான் அவர் கூறும் யோசனை.

ஜனநாயகம் செழிப்புற்று வளரவேண்டும் என்ற ஆசையாலும், எப்போதும் ஒரே கட்சி ஆட்சி புரிந்துகொண்டே போனால் எதேச்சாதிகாரத்தில்தான் முடியும், அதைத் தவிர்க்க வேண்டும் என்ற ஆர்வத்தினாலும், இந்த ஆலோசனையைச் சொல்லுகிறார் ராஜாஜி. நியாயத்தின் பேரிலும், நீதியின் பேரிலும் நம்பிக்கை வைத்து இந்த ஆலோசனையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறுகிறார்.

இந்த யோசனையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளுமானால் பல விதங்களில் நன்மை ஏற்படும். முதலாவது நன்மை காங்கிரஸ் தனது உண்மை ரூபத்தில் செயல்படும். தேசத்துக்கு விடுதலை சம்பாதித்துத் தந்த கூட்டம் காங்கிரஸ். அதற்கும் சோஷலிஸத்துக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. சுதந்திரம் கிடைத்த பின்னர்தான் சோஷலிஸ சமுதாயக் கொள்கையை வைத்துக்கொண்டு, திட்டங்களை வகுத்துக் காங்கிரஸ் கட்சி ஆட்சி புரிந்து வருகிறது. எனவே, கொள்கைக்குத் தகுந்த பெயர் இருப்பதுதான் நியாயம்.

இரண்டாவது, இவ்வாறு சரியான பெயரை வைத்துக் கொண்டால் இந்நாட்டு மன்னர்கள் என்று போற்றப்படும் மக்களுடைய மனத்தில் தெளிவு பிறக்கும். மக்கள் மனத்தைப் பலவிதங்களில் குழப்பி வருகிறது காங்கிரஸ் கட்சி. நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கித் தந்த பழைய காங்கிரஸ்தான் தற்போது ஆட்சிபுரியும் காங்கிரஸ் என்று பொருளற்ற ஒரு குழப்பம் மக்களைக் காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவு தரச் செய்கிறது. இந்த மயக்கம் காங்கிரஸின் பெயர் மாறுதலால் அகன்றுவிடும்.

ஆளும் கட்சியும் அரசாங்கமும் ஒன்றே; இது வேறு அதுவேறு அல்ல என்று ஏற்படுத்தியுள்ள குழப்பம் மற்றொன்று. உயர் பீடங்களிலிருந்து மண்டலக் கமிட்டி வரையில் உள்ள காங்கிரஸ்காரர்கள் இந்த எண்ணத்தை மக்கள் மனத்தில் இப்போது ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஜனநாயகமும், எதேச்சாதிகாரமும் ஒன்று என்ற குழப்பமும் இதேபோலத்தான். ஜனநாயகம் என்ற பெயரால் எதேச்சாதிகாரம் நடைபெறுகிறது என்ற நிலைமையை மக்கள் உணரவொட்டாது குழப்பம் உண்டாக்கப்பட்டிருக்கிறது. இந்நிலை மாற வேண்டும்.

பொது ஜனங்கள் சோஷலிஸக் கொள்கைகளை ஆதரிக்கிறார்கள் என்றால், அதை நன்கு உணர்ந்து கொண்டு 'சோஷலிஸ்டு' கட்சிக்கு வாக்கு அளிக்கலாம். இல்லாவிடில் மாற்றுக் கட்சிகளுக்கு வாக்கு அளிக்கலாம். ஒரு கொள்கையை ஆதரிப்பதாக நினைத்துக் கொண்டு மாற்றுக் கொள்கைகளுடைய கட்சிக்கு வாக்களித்தது இந்தத் தேர்தலில் வெகுவாகக் காணப்பட்ட அனுபவம்.

ஜனநாயகத்தில் நம்பிக்கை இருந்தால், காங்கிரஸ் கட்சி ராஜாஜி சொல்வதை ஏற்க வேண்டும்.

சோஷலிஸத்தில் நம்பிக்கை இருந்தால் தைரியமாகப் பெயரை மாற்றிக் கொள்ள வேண்டும். ஏமாற்றுவதை விட்டுவிட வேண்டும்.

# இது முறைதானா?

கலவரம் ஏதுமின்றி, குழப்பம் ஒன்றுமில்லாது ஒரு வாரத்துக்குள் இருபது கோடி வாக்காளர்கள் உள்ள இந்தியா முழுவதிலும் அமைதியாகப் பொதுத் தேர்தல் நடந்ததற்குச் சந்தோஷப்பட வேண்டியதுதான். ஆனால் எவ்வளவு அமைதியாகத் தேர்தல்கள் நடைபெற்றனவோ அதே அளவுக்கு நேர்மையாகவும் நடைபெற்றிருந்தால் இன்னும் அதிகமாகச் சந்தோஷப்பட்டிருக்கலாம். தேர்தல் காலத்தில் வாக்குப் பதிவு செய்யும் இடங்களில் சர்க்கார் அதிகாரிகளால் ஆட்சியாளர்களுக்கு அதிகச் சலுகையும் மற்றவர்களுக்கு எதிர்ப்புக்களும் இருந்ததாகப் பல இடங்களிலிருந்து செய்திகள் வருகின்றன. உதாரணத்துக்காக இரண்டு தேர்தல் முடிவுகளை மட்டும் இங்கே குறிப்பிடலாம். ஒன்று பஞ்சாப் பிரதமர் ஸர்தார் பிரதாப் ஸிங் கெய்ரானின் வெற்றி. 37 வோட்டுக்கள் வித்தியாசத்தில் இவர் வெற்றி பெற்றார். வோட்டுக்களை மறுபடியும் எண்ணவேண்டும் என்று 37 வோட்டுகளால் தோல்வியுற்றதாகச் சொல்லப்பட்ட அபேட்சகர் கேட்டுக்கொண்டார். சாதாரணமாகக் குறைந்த வித்தியாசத்தில் வெற்றி தோல்வி ஏற்படும் போதும், வாக்குப் பதிவுகளின் மொத்த எண்ணிக்கை பல ஆயிரக்கணக்கில் போகும்போதும், இம்மாதிரி மறுஎண்ணிக்கை கோரிக்கைகளை ஏற்பது தான்முறை. ஆனால் பஞ்சாப் பிரதமர் போட்டியிட்ட இடத்தில் அவருக்கு எதிராகத் தோல்வியுற்ற அபேட்சகரின் இந்தக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டு விட்டது.



திரு என். தாண்டேகர்

உத்தரப் பிரதேசம், கோண்டாத் தொகுதி லோக சபைத் தேர்தல் மற்றொன்று. இத்தேர்தலில் முதல் கணக்கெடுப்பில் சுதந்திரக் கட்சி அபேட்சகர் திரு என். தாண்டேகர் சுமார் 1500 வோட்டுகள் வித்தியாசத்தில் காங்கிரஸ் அபேட்சகர் திரு ராமரதன் குப்தாவைத் தோல்வியுறச் செய்தார். முடிவுகள் அறிவிக்கப்பட்ட பின்னர் பெரும் பணக்காரரான தோல்வியுற்ற அபேட்சகர் திரு ராமரதன் குப்தா அவர்கள் மறு எண்ணிக்கைக்கு மனுப் போட்டார். வித்தியாசம் 1500 வோட்டுக்களாக இருந்தாலும் மனு ஏற்றுக் கொள்ளப்பட்டது. மறு எண்ணிக்கையில் 498 வோட்டுகள் காங்கிரஸ் அபேட்சகர் திரு ராமரதன் குப்தாவுக்கு அதிகமாகக் கிடைத்திருக்கிறது என்று கணக்கிட்டுப் பிறகு அவர் வெற்றி பெற்றதாகவும், திரு தாண்டேகர் தோல்வியுற்றதாகவும் அறிவிக்கப்பட்டு விட்டது.

இங்கே கவனிக்க வேண்டியது ஒரு குறிப்பிட்ட அபேட்சகர் வெற்றி பெற்றார் என்பதோ தோல்வியடைந்தார் என்பதோ அல்ல. ஒரு தொகுதியில் மறு எண்ணிக்கைக் கோரிக்கை யேற்கப் பட்டதும் மற்றொரு தொகுதியில் இக்கோரிக்கை ஏற்கப் படாததும் ஏன் என்பதுதான்.

கோண்டா தொகுதியில் முதல் எண்ணிக்கையில் ஒரு அபேட்சகருக்கு 1500 வோட்டுகள் சாதகமாக இருந்தன. ஆனால் மறு எண்ணிக்கையின் போது சுமார் 500 வோட்டுகள் அவருக்கு பாதகமாக மாறிவிட்டது. அதாவது சுமார் 2000 வோட்டுக்கள் தவறாகக் கணக்கிடப்பட்டிருக்கிறது என்றாகிறது. இதே மாதிரி தவறுதல் பஞ்சாப் பிரதமர் போட்டியிட்ட தொகுதியில் ஏன் ஏற்பட்டிருக்கக் கூடாது? மறு எண்ணிக்கைக் கோரிக்கையை ஏற்பதிலும், நிராகரிப்பதிலும் நேர்மையான நடைமுறை இல்லை என்பதையே இது எடுத்துக் காட்டுகிறது.



திரு பிரதாப்ஸிங் கெய்ரான்

# கசப்பான உண்மை

சமீப காலம் வரையில் திட்டக் கமிஷனின் உப தலைவராக இருந்த வி.டி கிருஷ்ணமாச்சாரியார் சென்ற வாரம் ஓர் உண்மையை வெளியிட்டார். விவசாய உற்பத்தி சம்பந்தப்பட்ட வரையில் திட்டங்களின் பலன்கள் திருப்தியளிக்கவில்லை என்றும், திட்டமிட்டுச் செயலாற்றும் எல்லா நாடுகளிலுமே, அவை ருஷ்யா, சீனுவாக இருந்தாலும் சரி, இந்தியாவாக இருந்தாலும் சரி, விவசாய உற்பத்தி எப்போதும் கவலை தரும் அம்சம் என்று கூறியுள்ளார். மேலும் நடைமுறையில் உருக்குத் தொழிற்சாலையைக் கூட வெற்றிகரமாக நடத்திவிடலாம், ஆனால் விவசாயத்தில் உற்பத்திப் பெருக்கைச் சாதிப்பது கஷ்டமானது என்று அவர் தெரிவித்தார்.

இந்தியா சுயராஜ்யம் பெற்றது முதலாகக் கடந்த பதினைந்து ஆண்டுகளில் வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட உணவு தான்யங்கள், பருத்தி ஆகியவற்றின் மொத்த மதிப்பு 1900 கோடி ரூபாய் என்றும் இதில் 900 கோடி ரூபாய் மதிப்புள்ள பொருள்களை அந்நியச் செலாவணி கொடுத்தே தருவிக்க வேண்டியிருந்தது என்றும் அவரது பேச்சிலிருந்து தெரியவருகிறது.

சர்க்காரில் பணியாற்றி உயர் மதிப்பைப் பெற்ற அறிஞர் இந்த உண்மையை வெளியிட்டிருப்பது காங்கிரஸுக்குக் கசப்பாகவே இருக்கும்.

கூட்டுப் பண்ணை நடவடிக்கைகள், உச்சவரம்புச் சட்டங்கள், உபரி நிலங்களுக்கு நியாயமான நஷ்டஈடு கொடுக்காமல் பறிமுதல் செய்யும் முறைகள், அனுபவம், அறிவு, வசதி முதலியவை படைத்த விவசாயிகளிடமிருந்து நிலங்களைப் பிடுங்கி, பயிர்த் தொழில் செய்ய வசதியில்லாதவர்களுக்கு அளித்தல், விவசாயிகளிடையே வாழ்க்கையில் நிச்சயமற்ற தன்மையை ஏற்படுத்திவிட்ட கொள்கைகள் ஆகிய இந்தக் குறைகள் அனைத்தும் ஆளும் கட்சியின் சோஷலிசச் சமுதாயக் கொள்கையில் அடங்கியவை. இந்தக் கொள்கைகளைத் தக்கவாறு மாற்றிக் கொள்ளாத வரையில் விவசாய உற்பத்தித் துறையில் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏற்படாது.

---

இதர ராஜ்யங்களில் எல்லாம் ஒரு பெரிய மந்திரி சைன்யமே உருவாகிக் கொண்டிருக்கும்போது, தமிழகத்தில் ஒன்பதே பேர்களடங்கிய மந்திரி சபை அமைக்கப்பட்டிருப்பதை மகிழ்ச்சியுடன் வரவேற்றுப் புதிய அமைச்சர்களின் படத்தையும் இங்கே வழங்குகிறோம். திரு ஆர். வெங்கட்ராமன், ஸ்ரீமதி ஜோதி வெங்கடாசலம், சென்னை கவர்னர் திரு விஷ்ணுராம் மேதி, முதன் மந்திரி திரு காமராஜ். திரு எம். பக்தவத்சலம், திரு கக்கன், ஜனுப் மஜீத். திரு ராமையா, திரு நல்ல சேனுபதி சர்க்கரை மன்ருடியார், திரு பூவராகன்.



# பரீட்சைக்குப் படிக்கிறார்கள்!

**அவள் :**

இந்தப் பரீட்சை தேறியபின்
சந்தைக் கடைநிகர் புவிவாழ்வில்
வந்த வரன்களைக் கைகூப்பி
வாசற் கதவோரம் சிறுநேரம்
சுந்தர இளைஞர்கள் பலபேரைச்
சோர விழித்திருட்டுக் களவாடி
எந்த மனைக்கோ(நாளை) விளக்காவாள்
இந்த விளக்கிலின்(று) படிக்கின்றாள்.

**அவன் :**

சித்திரை வெயில் மறந்து
நிரைப்பட நினைப் பிழந்து
பத்திரிகை நாவல் தொடர்கின்ற
பலகதைகள் இவை துறந்து
சித்தம் பரீட்சைத் தவமாகி
செய்கை படிப்புப் பசியாகிப்
பெற்றவர் கனவு பாசாகப்
பிள்ளைகள் ஆடும் போராட்டம்.

# திருப்பழனத்தில் ஒரு திருப்பணி

தமிழகத்தின் நெற்களஞ்சியம் என விளங்கும் தஞ்சையில் சிறந்த சிவதலங்களுள் ஒன்றான திருப்பழனம் மிகத் தொன்மை யானது. அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்க வாசகர் ஆகிய சைவ சமயாசாரியர்களின் தெய்வத் தமிழ்ப் பாடல் பெற்ற திவ்வியத் தலம். திருநாவுக்கரசர்பால் க னி வு ம் கசிவும் கொண்டு அவரையே வழிபடு தெய்வமாக மதித்து வணங்கி வந்த அப்பூதி அடிகள் நாயனார் வாழ்ந்ததும் திருப்பழனத்தை அடுத்த திங்களூரில்தான். நாயனார், நாவுக்கரசருக்கு நல்லமுது செய்து வைக்கும் நற்பணியில் ஈடுபட்டிருக்கும் தருணத்தில் அவர் மகனை அரவம் தீண்டியது. அதனை மறைத்து, கடுகளவு கண்ணீரும் விடாமல், சிவனடியார் சேவை தடைப்படுமே என அஞ்சியிருந்த காலையில் நாவுக்கரசர் பெருமான் "ஒன்று கொலாம்...." என்று தொடங்கும் விடந்தீர்த்த பதிகம் பாடி அப்பூதி அடிகளின் குமாரனை உயிர்ப்பித்ததும் திருப்பழனத் தலத்தில்தான்.

"வேதம் ஓதி வெண்ணூல் பூண்டு
வெள்ளை எருதேறிப்
பூதஞ்சூழப் பொலிய வருவார்
புலியின் உரிதோலார்
நாதா எனவும் நக்கா எனவும்
நம்பா என நின்று
பாதந் தொழுவார் பாவந்தீர்ப்பார்
பழன நகராரே."

என்று திருஞானசம்பந்தப் பெருமான் பக்திச் சுவை தனி சொட்டச் சொட்டத் திருப்பழனத் திருத்தலத்தில் உறையும் சிவபெருமானைப் பாடிப் பரவியுள்ளார்.

"சொன்மாலை பயில்கின்ற
குயிலினங்காள் சொல்லீரே
பன்மாலை வரிவண்டு
பண் மிழற்றும் பழனத்தான்
முன்மாலை நகுதிங்கள்
முகிழ்விளங்கு முடிச் சென்னிப்
பொன்மாலை மார்ப னென்
புதுநலம் உண்டிகழ்வானோ"

என்ற அப்பர் பெருமானின் தீந்தமிழ்ப் பாடல், பாடுவோர் நாவில் என்றும் நின்று தித்திக்கும் சுவையுடையது.

அத்தகைய பெருமை வாய்ந்த திவ்வியத் தலத்தின் முக்கியமான மகோற்சவம் சப்த ஸ்தான உற்சவம். அவ்வமயம் திருப்பழனத்து ஆபத்சகாய ஈசுவரனையும், பிரஹந்நாயகியையும், பல்லக்கில் எழுந்தருளச் செய்து சப்த ஸ்தல யாத்திரை செய்வது தொன்று தொட்டு நடைபெற்று வரும் பிரசித்திபெற்ற திருவிழாவாகும். மேற்படி பல்லக்கு சமீபத்தில் பெருகிய வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டு விட்டதால், புதிதாக ஒரு பல்லக்கு செய்ய வேண்டியிருக்கிறது. அந்தத் திருப்பணிக்கு ரூ. 15,000 ஆகும் என மதிப்பிடப்பட்டிருக்கிறது. ஆஸ்திகப் பெருமக்கள் தங்களால் இயன்ற பொருளுதவியைச் செய்து இப்புனித கைங்கரியத்தை நடத்தி வைத்துப் பிறை சூடிய பெருமானின் திருவருளுக்குப் பாத்திரராக வேண்டுகிறோம்.

நல்ல காரியங்களை நாளைக்கென்று தள்ளிப் போடுவது சரியல்லவே! இத்தெய்வத் திருப்பணியில் ஈடுபட விரும்புவோர் உடனே தங்கள் நன்கொடையை அனுப்பக் கோருகிறோம். வருகிற சித்திரை மாதம் 8-ந் தேதி சப்த ஸ்தான உற்சவம் வருகிறது. அதற்குள் அந்தத் திருப்பல்லக்கு திருப்பணி பூர்த்தி பெற்றுவிட வேண்டும் என்பதைப் பரமன் அடியார்கள் நினைவிற் கொள்ள வேண்டும்.

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:

ராஜாஸ்ரீ கோவிந்த ராவ் ஜீவாஜீ மோத்தே ராவ்சாஹிப், பரம்பரை தர்மகர்த்தா, ஸ்ரீ ஆபத்சகாயேசுவர ஸ்வாமி தேவஸ்தானம், திருப்பழனம், திருவையாறு வழி, தஞ்சை ஜில்லா.

# நீகோ

## ஜெர்மிஸைடல் சோப்

## ஒரு பார்க்-டேவிஸ் தயாரிப்பு

உங்கள் சருமத்தைச் சுத்தமாகவும் ஆரோக்கியத்துடனும் வைத்துக் கொள்ளவும், பருக்கள், கருநிறப் படைகள், வேர்க்குரு மற்றும் இதர சாதாரண சரும நோய்களின்றி இருக்கவும் உதவுகிறது. தவறாமல் தலைமயிரைச் சுத்தம் செய்ய உபயோகித்து வரின், நெக்கோவின் கிருமிநாசக நுரை வழுக்கை ஏற்படாமலிருக்க ஒரு நல்ல பாதுகாப்பாக இருக்கும். நிரூபணமான மதிப்பையுடைய கிருமிநாசக சோப்பான நீகோ உங்களுக்கு மும்மடங்கு நன்மையளிக்கிறது— சுத்தமாக்க, நோய்கிருமி பரவாமல் தடுக்க, பாதுகாக்க, உதவுகிறது. தினமும் உங்கள் சருமத்திற்குத் தேவையான கவனத்தை செலுத்துங்கள்.







தினசரி உபயோகத்திற்கான ஆதி கிருமிநாசக சோப்



# காணாமல் போன கடிதங்கள்

கொக்கி

## கோழிமுட்டையும் குருஷேவும்

சோவியத் பிரதமர் காம்ரேட் குருஷேவ் அவர்களுக்கு, ஒரு பாப்பா வகுப்புப் பையன் எழுதிக் கொண்டது:

குருஷேவ் மாமா! நான் பள்ளிக்கூடத்தில் பாப்பா வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறேன். கோழி முட்டையைப் பற்றி நீங்கள் போன வாரம் பேசினதாக என் அண்ணு கூறினுர். இப்போது உங்கள் தேசத்தில் கோழி முட்டை நிறைய கிடைக்கவில்லையாம். 1980-ம் வருஷத்திலிருந்து உங்கள் தேசத்தில் ஆளுக்கு முழுசாக ஒரு கோழி முட்டை கொடுக்க முடியும் என்றும் கூறினீர்களாம். இதற்காகத் தேசத்தில் செழிப்பு உண்டாக எல்லாரும் முயல வேண்டும் என்றும் கூறினீர்களாம். ஏன், குருஷேவ் மாமா! உங்களுக்கெல்லாம் ஆளுக்கொரு கோழி முட்டை கொடுத்தால் போதுமா? பாருங்கள், எங்கள் வாத்தியார் எனக்குத் தினம் இரண்டு மூணு கோழி முட்டையாவது கொடுப்பார். அவர் நல்லவர்; எனக்கு எல்லாரையும் விட ஒரு கோழி முட்டை அதிகம் கொடுக்கவில்லையோ, நான் அழுவேன் என்று அவருக்குத் தெரியும். ஆகையால் அவரை வரச் சொல்லி ஊரிலும் எல்லாருக்கும் நிறைய கோழி முட்டை கொடுக்கச் சொல்லுங்களேன். உங்கள் ஊர்களில் சாக்குக் கட்டிகளுக்கா பஞ்சம் இருக்கும்! என் அண்ணு, 'அங்கே ஏதோ 'பொருளாதாரமாம்' அது சரியில்லே' என்கிறுன். அது என்னவோ தெரியாது எனக்கு. உங்களுக்கு வேணுமானுல் சொல்லுங்கள். எங்கள் வாத்தியாரை வரச் சொல்லி எல்லாருக்கும் போதும் போதும்னு சொல்கிற வரைக்கும் கோழி முட்டைகள் கொடுக்கச் சொன்னுல் அவர் கொடுப்பார். அவர் நல்லவர். வேணுமானுல் கலர்க் கோழி முட்டை கூடக் கொடுப்பார்.

இப்படிக்கு,
பாப்பா வகுப்புப் பையன்

## செல்லாத வோட்டு

பொறுப்புள்ள தலைவர்களுக்கு, ஒரு செல்லாத வாக்காளர் எழுதிக் கொண்டது:

இந்தத் தேர்தலில் ஏராளமாக வாக்குச் சீட்டுகள் செல்லாமல் போய்விட்டதே யென்று நீங்கள் வருத்தப் பட்டிருக்கிறீர்கள். காங்கிரஸில் உள்ள புள்ளிகள் மட்டும் இதைப்பற்றி உள்ளூற மகிழ்வதாகத் தெரிகிறது. நாங்களும் செல்லக் கூடிய முறையில் வோட்டுப் போட்டிருந்தால் தங்களின் நிலைமை என்னவாகி யிருக்கும் என்பது அவர்களுக்குத் தெரியும்.

என் வரையில், என்னிடம் வாக்குச் சாவடியில் கொடுத்த சீட்டில் முத்திரையைப் பெயர் மீது குத்துவதா, அல்லது ஓரங்களில் குத்துவதா என்பது, திரைக்குப் பின்னுல் வாக்குப் பதிவு செய்யப் போனதும் ஒன்றும் விளங்காமற் போய் விட்டது. கடைசியில் தலையா வாலா என்றுகூடப் புரியாத பென்சில் முத்திரையை ஏதோ ஓர் இடத்தில் தேய்த்து விட்டு என் நெற்றியிலும் ஒன்று வைத்துக் கொண்டு வெளியே வந்தேன். என் சகோதர வாக்காளர்களில் சிலர் திரைக்குப் பின் சென்றதும், சுவரில் முத்திரை வைத்தார்கள் என்று நான் கேள்விப் பட்ட போது, 'அவர்களுக்கு நான் எவ்வளவோ மேல்' என்று இக்கால சம்பிரதாயப்படி எனக்கு நானே ஒரு பாராட்டு விழா நடத்திக் கொண்டேன்.

போகட்டும், அடியேன் செல்லாத வாக்காளர்களின் சார்பில் ஒரு சிறு யோசனை கூறுகிறேன். கடைகளில், நோட்டுக்கள் செல்லவில்லை யென்றுல், அதை வாங்கிக் கொண்டு நல்ல நோட்டுக்களைக் கொடுப்பதில்லையா? அதே மாதிரி செல்லாத வோட்டுக்களுக்குப் பதிலாகப் புது வோட்டுக்களை எங்களிடம் கொடுத்து ஏன் வாக்குப் பதிவு செய்து கொள்ளக் கூடாது? யார் யார் செல்லாத வாக்காளர்கள் என்பதைக் கண்டு பிடிப்பதும் மிகச் சுலபமாச்சே! வோட்டுச் சீட்டு நம்பரைக் கொண்டு அதைப் போட்டவர்களின் விலாசத்தைத் தான் எளிதில் கண்டு பிடித்து விடலாமே! இந்தத் தடவை நடந்த தேர்தலிலேயே இது ஒரு பெரிய பகிரங்கமான அரசியல் புரட்டாயிற்றே!



ஏதோ ஒரு செல்லாத வாக்காளன் எழுதினன் என்று இந்தக் கடிதத்தைக் குப்பையில் போட்டு விடாதீர்கள். அடுத்த தேர்தலுக்குள் எங்கள் பலம் பெருகி, செல்லாத அபேட்சகர் ஒருவரையே தேர்தலில் நிறுத்தி வெற்றியும் பெறச் செய்து, சட்டசபைகளில் எங்களை இப்போது அலட்சியம் செய்தது பற்றிக் கேள்வி மாரி பொழிவோம்.

இப்படிக்கு,
ஒரு செல்லாத வாக்காளர்

பி. கு.: 'செல்லாத' அபேட்சகர் என்றதும் பெரும்பாலான காங்கிரஸ் அபேட்சகர்களைப்போல் வெற்றி பெற்றாலும் சட்டசபைக்கும், பார்லிமெண்டுக்கும் செல்லாமலே இருந்து விடுவோமோ என்று நினைக்க வேண்டாம்.

**ஆந்திர பலூன்**

மாஜி ஆந்திர முதன் மந்திரி திரு சஞ்சிவய்யாவுக்கு, புளியாந்தோப்பு, பத்தாயிரம் 'பட்டம்' அறுந்த காத்தாடி எழுதிக் கொண்டது.

ஆந்திர ராஜ்ய முதன் மந்திரி திரு சஞ்சிவ ரெட்டிகாரு மந்திரி சபை அமைத்து, மந்திரிமார்களின் திவ்விய முகங்கள் பத்திரிகைத் தாள்களில் பிரசுரமாகி, அதன் மைகூடக் காயவில்லை. அதற்குள் தாங்கள் திரு ரெட்டியார் மந்திரி சபையை அமைத்த முறைபற்றி இப்படி வெறுத்துக் கட்டியிருக்க வேண்டாம்.

''மந்திரி சபை சரிவர ஜனநாயக ரீதியில் அமையவில்லை. காங்கிரஸ் அக்கிராசனப் பதவி வகித்த சஞ்சிவரெட்டியார் இப்படிச் சொல்வார் என்று நான் நினைக்க வில்லை. காங்கிரஸ் கொள்கைகளை அவர் காற்றில் பறக்க விட்டு விட்டார்!'' என்று கூறிவிட்டீர்கள். துணிவாகக் கருத்து வெளியிடும் தங்கள் மனப்பான்மையை நான் மிகவும் பாராட்டுகிறேன். ஆனால் தங்கள் குற்றச்சாட்டில் ஒரு தவறு இருப்பதை மட்டும் சுட்டிக் காட்டலாம் என்று எண்ணுகிறேன்.

காங்கிரஸ் கொள்கையே, கொள்கைகளைக் காற்றில் பறக்க விடுவதாகத் தானே இருந்து வருகிறது. இந்த அடிப்படைக் கொள்கையை அநுசரித்துத் தான் மாஜி காங்கிரஸ் அக்கிராசனதிபதியும் இப்போது முதன்மந்திரியாகப் பதவி ஏற்றிருப்பவருமான திரு சஞ்சிவ ரெட்டிகாரு அவர்கள், கொள்கைகளில் முக்கியமான எதையாவது காற்றில் பறக்க விட்டிருக்கலாம். தேர்தல் பலூனைப்போல இதற்காகத் தாங்கள் இப்படிக் கோபமடைந்திருக்கக் கூடாது.

இப்படிக்கு
'காத்தாடி'

# 10. கருணை வெள்ளம்

**ப**சித்துக் கிடந்த புலி இரை கண்டு பாய்வது போல் பாய்ந்து திரும்பிய பெருநிதிச் செல்வரின் கண்களில் முதல் காட்சியாகத் தென்படும்படி தன் தாயின் ஓவியத்தைக் காட்டினான் இளங்குமரன். படுத்திருந்த கட்டிலுக்கு அருகில் காலின் பலத்தினாலும் ஊன்றுகோலின் பலத்தினாலும் தளர்ந்தும் தயங்கியும் நின்ற அவர் வியப்பும் அச்சமும் மாறி மாறித் தெரியும் கண்களால் அந்த ஓவியத்தைப் பார்த்தார். எந்தப் பெண்ணுடைய கண்களின் அழகைத் தான் அடைய முடியாமல் பல ஆண்டுகளுக்கு முன் அமுதசாகரன் என்ற கவி தன்னை ஏமாற்றினானோ அதே கண்களை இப்போது மீண்டும் இந்த ஓவியம் தனக்குக் காட்டுவதை உணர்ந்தார் அவர்.

'இந்த மயக்கும் விழிகளில் என்னை நோக்கி மலர்ந்திருக்க வேண்டிய கனிவு அப்படி மலராமற் போனதால் தான் அன்று என் மனத்தில் குரோதம் பிறந்தது. அந்தக் குரோதம் ஏற்கெனவே பல வகையில் கொடியவனாயிருந்த என்னை இன்னும் கொடிய அரக்கனாக மாற்றியது. உள் நெருப்பாக வீழ்ந்து விட்ட தீய உணர்ச்சிகள் இன்னும் என்னுள் எங்கோ கனன்று கொண்டிருக்கின்றன. இல்லாவிட்டால் இந்தப் பிள்ளையை இப்போது எதிரே காண்கிற நிலையிலும் என் நினைவுகள் இப்படிக் கொதிப்பதற்குக் காரணமில்லையே?" என்று தனக்குள் விரைந்து எழும் எண்ணங்களோடும் அந்த எண்ணங்களின் மாறுபட்ட சாயல்கள் சிறிதும் தெரியாத முகத்தோடும் நின்றார் பெருநிதிச் செல்வர். அப்படி நின்றபோது அவருடைய செவிகளில் மறுபடியும் நியாயத்தின் குரலாய் இளங்குமரனுடைய பேச்சு எதிரேயிருந்து ஒலிக்கத் தொடங்கியது:

"இதோ இந்த ஓவியங்களையும் பாருங்கள். இவர்களையெல்லாம் உங்களுக்கு நினைவிருக்கும் என்று எண்ணுகிறேன். நினைவில்லாவிட்டால் நினைவுபடுத்துவதற்காகவே நான் வந்திருக்கிறேன் என்று நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்" எனக் கூறியபடியே தன் தந்தை அமுதசாகரருடைய ஓவியத்தையும், தாய் மாமனான காலாந்தக தேவருடைய ஓவியத்தையும் அவர் முன்பு காட்டினான் இளங்குமரன். அந்த விநாடி வரை அவன் முகத்தில் சிரிப்புக் குன்றவில்லை. ஆனால் எதிரே நின்று கொண்டு அவற்றையெல்லாம் பார்க்கும் போது அவருக்கோ பதில் பேச நா எழாமல் உள்ளேயே கட்டுண்டு அடங்கிப் போய்விட்டாற் போலிருந்தது. நகைவேழம்பருடைய சாவுக்குப் பின்பு அருவான மறவனும் அவனு



டைய தோழனும் தன்னைப் புறக்கணித்து விட்டுச் சென்றதிலிருந்து உலகமே தனக்கு முன் இருண்டு போய் அவநம்பிக்கைகள் சூழ்வதுபோல் பிரமை கொண்டு தளர்ந்து படுத்த படுக்கையாகியிருந்தார் அவர். இவ்வளவு காலம் கொடுமைகளும், சூழ்ச்சியும் செய்வதற்குக் காரணமாகத் தன் மனத்தில் இறுகிப் போயிருந்த உணர்வுகள் இப்போது எதற்கோ உடைந்து தளர்ந்து விட்டாற் போல அவருக்கே அச்சமாகவிருந்தது. ஏதோ ஒரு வழியில் ஏதோ ஒரு காரணத்துடன் மூச்சு இரைக்கும்படி ஓடத் தொடங்கிய கால்கள் அந்த முடிவு தெரியாத வழியின் மேல் ஒரு குறிப்பிட்ட இடத்துக்குச் சென்றவுடன் நெஞ்சத் துடிப்பின் வேகத்தைத் தாங்கிக் கொள்ள முடியாத தளர்ச்சியாலோ, இனிமேலும் ஒரு முடிவும் தெரியாத இந்த வழியில் தொடர்ந்து எதற்காகப் போவது என்று மலைப்பதனாலோ அப்படியே சோர்ந்து நின்று விடுவதைப் போன்று தமது பயங்கரமான வாழ்க்கையில் மேலே என்ன செய்வதெனத் தோன்ற முடியாத மலைப்போடு வழி தெரியாமல் இன்று மயங்கி நின்றார் பெருநிதிச் செல்வர்.

'இன்று இந்த முன்னிரவுப் போதில் இளங்குமரன் எனக்கு முன்பு இப்படிச் சிரித்துக்கொண்டே வந்து நிற்பதற்குப் பதில் ஆறாத சினத்துடன் உருவிய வாளும் கையுமாக என் எதிரியாக வந்திருந்தால் கூட நான் பயமின்றி நிமிர்ந்து நின்றிருப்பேன். இப்படிச் சிரித்துச் சிரித்து இந்தப் பொறுமையையும் நிதானத்தையுமே ஆயுதங்களாகக் கொண்டு என்னைக் கொல்கிறானே இந்தப் பிள்ளை?' என்று எண்ணி அந்தப் பொறுமையாலும், நிதானத்தாலும் கூடத் தாக்கப்பட்டவராய்த் தளர்ந்துபோய் நின்றார் அவர்.

தனக்கு முன்னால் அவருடைய தொடர்ந்த மௌனத்தையும் திகைப்பையும் கண்டு உணர்ந்த இளங்குமரன் தன் வசமிருந்த ஓவியங்களையும் சுவடிகளையும் ஒரு புறமாக வைத்து விட்டு இன்னும் அருகில் நெருங்கிச் சென்று அவரோடு பேசினான்:

''ஐயா! நீங்கள் ஏன் இப்படி வாய் திறந்து மறுமொழி கூறாமல் எனக்கு முன் திகைத்து நிற்கிறீர்கள்? நான் ஏழை. என் கைகளில் இப்போது ஆயுதங்கள் இல்லை. மனத்தில் கோபமும் இல்லை. என் குடும்பத்தின் இணையற்றதொரு தலைமுறையைச் சேர்ந்த முன்னோர்களின் உயிர்களையும், செல்வங்களையும், நம்பிக்கைகளையும், நீங்கள் அழித்து நிர்மூலமாக்கியிருக்கிறீர்கள். அப்படியிருந்தும் உங்களை மலர்ந்த முகத்தோடும் சிரித்த வாயோடும் சந்திக்க வேண்டுமென்று தான் ஆசையாயிருக்கிறது எனக்கு. இந்த மாளிகைக்குள்ளே இன்று நான் நுழையும்போது உங்கள் காவலாளிகள் நீங்கள் நோயுற்றுப் படுத்த படுக்கையாயிருப்பதாகக் கூறினார்கள். உங்களுக்கு வந்திருக்கும் நோய் எதுவோ அதற்காகவும் நான் அநுதாபப்படுகிறேன்.''—

''உன்னுடைய அநுதாபத்துக்காக நான் ஏங்கித் தவித்துக்கொண்டு கிடக்கவில்லை. நீ இங்கிருந்து உடனே வெளியேறிப் போய்விடு. நீ இங்கே தாமதித்து நின்றால் உன் உயிரே என் நோய்க்கு மருந்தாக வேண்டுமென்று கூட நான் ஆசைப்பட நேரலாம். இப்படிச் சிரித்துக் கொண்டு என் கண்களுக்கு முன் நிற்காதே. இந்தச் சிரிப்பு என்னை என்னவோ செய்கிறது. நான் கொலைக்கு அஞ்சாதவன். சில நாட்களாக என் மனமும் ஒரு நிலையில் இல்லை. நான் எந்தக் கணத்தில் எப்படி மாறுவேன் என்று சொல்வதற்கும் முடியாது. மறுபடியும் நான் கொலைகாரனாவதற்கு வாய்ப்பளிக்காதே. வந்த வழியே திரும்பிப் போய்விடு.''

அவருடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு இளங்குமரன் முன்னிலும் நிறைவாகச் சிரித்தான். சிரித்துக்கொண்டே முகத்துக்கு முகம் சந்திக்க முடிந்த அண்மையில் இன்னும் அவரை நெருங்கி நின்று கொண்டு மறுமொழி கூறினான்:—

''ஐயா! இப்போது எனக்குப் புரிந்து விட்டது. உங்களுக்கு வந்திருக்கும் நோய் என்னவென்று நான் விளங்கிக் கொண்டேன். செய்த தீவினைகள் பழுத்து அவற்றின் விளைவை அநுபவிக்கும் காலம் வரும்போது மனிதர்களுக்கு இந்தத் தவிப்பு ஏற்படத்தான் செய்யும். 'சில நாட்களாக உங்கள் மனம் ஒரு நிலையில் இல்லை' — என்பதை நீங்களே ஒப்புக் கொள்ளுகிறீர்கள். ஆனால் உங்கள் மனம் ஒரு நிலைப் படாத தன்மை இப்போது சில நாட்களாக மட்டும் உங்களைப் பற்றியிருப்பதாய் நீங்கள் நினைப்பதுதான் தவறு. தொடக்கத்திலிருந்தே உங்கள் மனத்துக்கு அந்த நிலையில்லாத் தன்மை உண்டு என்று தான் நான் நினைக்க முடிகிறது. ஒரு நிலைப்பட்ட மனம் உங்களுக்கு இருந்திருந்தால் தொடக்க நாளிலிருந்தே நீங்கள் வேறு விதமாக வாழ்ந்திருக்க முடியும். தான் மட்டும் வாழ ஆசைப்படுகிற மனிதர்களும் இந்த உலகத்தில் இருக்கிறார்கள். எல்லாரும் வாழ ஆசைப்படுகிற சான்றோர்களும் இந்த உலகத்தில் இருக்கிறார்கள். பிறரை அழித்துக் கொண்டே தான் மட்டும் வாழ ஆசைப்படும் விலங்குக் குணம் பெற்றவர்களும்

இருக்கிறார்கள். இந்த மூன்றாவது வகை மனிதர்களுக்கு இக் குணமே நாளுக்கு நாள் வெளிப்படாத நோயாய்ப் பெருகி உள்ளுக்குள்ளேயே வளர்கிறது. இந்த நோய் முற்றி இதை வளர்த்துக் கொண்டவன் தன்னுடைய நியசக்திகள் எல்லாம் தனக்குப் பயன்படாமல் ஒவ்வொன்றாய்த் தன்னைக் கைவிடுகின்றன என்பதை உணரும்போது தன் முன் தனக்கு எதிரே அது வரை தெரிந்து கொண்டிருந்த உலகமே இருண்டு போய் விடுகிறதாக எண்ணி மலைக்கிறான். இந்த இருளில் சிக்கிக் கொண்டவர் யாராயிருந்தாலும் பரிதாபத்துக்குரியவர். உங்களைச் சுற்றி இப்போது சூழும் இருள் அத்தகையது. இப்போது இந்த இருளில் நீங்கள் தவிப்பதைப் பார்த்து உங்கள் பகைக் குலத்தின் கடைசிக் கொழுந்தாகிய நான் மகிழ்ச்சியும் பூரிப்பும் அடைந்து கொண்டிருக்கிறேனோ என்று நீங்கள் என் மேல் சந்தேகப் படலாம். அப்படிச் சந்தேகப் படுவதும் மனித இயற்கைதான். ஆனால் என்மேல் அந்தச் சந்தேகம் உங்களுக்கு வேண்டாம். உங்கள்மேல் கூட நான் கருணை காண்பிக்க முடியும். உங்களைப் பகைமையின் எல்லையாகக் குறி வைத்துக் கொண்டு குமுறுவதற்குப் பதில் என்னால் எவ்வளவு அநுதாபப்பட முடியுமோ, அவ்வளவு அநுதாபத்துக்கும் உங்களையே எல்லையாக்கிக் கொண்டு நான் கருணை வெள்ளமாய்ப் பெருகி அதில் நீங்களும் மூழ்கி எழுவதற்கு இடமளிக்க முடியும். நீங்கள் என் தந்தையை இந்த மாளிகையின் நிலவறையில் துடிக்கத் துடிக்கக் கொன்றிருக்கிறீர்கள். என் தாயின் இனிய நினைவுகளும், மங்கல நம்பிக்கைகளும் அழிவதற்கும் அவள் இறப்பதற்கும் காரணமாயிருந்தீர்கள். என்னுடைய தாய்மாமன் காலாந்தக தேவரை ஏமாற்றி அழைத்துப் போய்க் கொலை செய்து விட்டு அவர் எனக்கு அணிவிக்கக் கொண்டு வந்திருந்த நவரத்தின ஐம்படைத் தாலியையும் பிறவற்றையும் கொள்ளையடித்தீர்கள். என்னையும் எனக்குப் பாதுகாப்பாயிருந்து வளர்த்த அருட்செல்வ முனிவரையும் பலமுறை கொன்று விட முயன்றீர்கள். இப்போது இன்று இந்த நிலையிலும் என்னைக் கொன்று விடுவதாகப் பயமுறுத்துகிறீர்கள். என் குலத்து முன்னோர்களைக் கொன்றாற்போலவே என்னையும்கூட உங்களால் கொன்று விட முடியும். ஆனால் 'நாம் இன்னாரைக் கொன்றோம்'—என்று ஒவ்வொரு நாளும் உங்கள் மனச்சாட்சியின் ஞாபகக் குரல் இடைவிடாமல் உங்களுக்குள்ளே ஒலித்துக் கொண்டிருக்குமே அந்த ஒலியை உங்களால் ஒரு போதும் கொல்ல முடியாதே?....''

இவற்றைக் கேட்டுப் பெருநிதிச்செல்வரின் உடல் நடுங்கியது. உடம்பு முழுவதும் பாதாதி கேசபரியந்தம் தீப்பற்றி எரிவது போல் வெம்மைப் பட்டு வேர்த்தது. எதிரே வந்து நின்று கொண்டு நியாயத்தைப் . பேசுகிறவனுடைய சொற்களை ஒவ்வொன்றாகப் புறப்பட்டுப் பாய்ந்து துளைக்கும் அம்புகளாக வந்து தாக்கித் தன்னை வீழ்த்தி விட்டாற் போல ஒரு கையால் நெஞ்சை அழுத்திக் கொண்டு தளர்ந்து போய்ப் பின்னால் சிறிது சிறிதாக நகர்ந்து கட்டிலில் அமர்ந்தார் அவர். அமர்ந்தபடியே மற்றொரு கையிலிருந்த ஊன்றுகோலை நெஞ்சருகே கொண்டுபோய் இரண்டு கைகளும் நடுங்கிடப் பிடியைத் திருகி அந்த ஐம்படைத் தாலியையெடுத்து இளங்குமரனுக்கு முன்னால் வீசி எறிந்தார்.

தரையில் மின்னல் விழுந்து நெளிவதைப் போலத் தனக்கு முன் வீழ்ந்து கிடந்த அந்தப் பொருளைப் பார்த்தான் இளங்குமரன். அலட்சியமாக அந்தப் பொருளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே அவன் நின்றபோது அதை அவனுக்கு முன் வீசி எறிந்ததைவிட வேகமாகச் சொற்களை வீசி எறிவதுபோல் குமுறிக் குமுறிப் பேசலானார் அவர்:—

''உன்னுடைய தாய்மாமனிடமிருந்து நான் கொள்ளையடித்து விட்டதாக நீ சொல்லிக் குறைப்பட்டுக் கொள்கிற பொருளை இதோ உன் காலடியில் தூக்கி எறிந்து விட்டேன். இதை எடுத்துக் கொண்டு போய் விடு. என்னுடைய கோபத்தை வளர்க்காதே. நான் மிகவும் பலவீனமான நிலையிலிருக்கிறேன். எப்படி நடந்து கொள்வேனென்று எனக்கே தெரியாது! சந்தர்ப்பம் மறுபடி என்னைக் கொலைகாரனாக்கி விட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.''

''உங்களுடைய கோபத்தைப்பார்த்து எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. ஏனென்றால் இந்தவிதமான கோபம் கோழைகளுக்குத்தான் சொந்தமானது. யாரிடம் தவிர்க்க முடியாத காரணத்துக்காகக் கோபப்பட வேண்டுமோ அங்கே கூட அந்தக் கோபத்தை இழந்து விட்டு நிற்கவும் சிரிக்கவும் பக்குவமான வீரனால் முடியும். எல்லாவற்றுக்கும் பிடிவாதமாக முயல்வதைப் போலவே எல்லா ஆசைகளையும் விட்டுவிடுகிற தைரியமும் வீரனுக்கு இருக்க வேண்டும். நான் இப்போது உங்களுக்கு முன்னால் வந்து நிற்பது என்னுடைய செல்வங்களை உங்களிடம் இருந்து மீட்டுக் கொண்டு போவதற்காக அன்று. எப்படி வாழக் கூடாதோ அப்படி நீங்கள் இதுவரை வாழ்ந்துவிட்டீர்கள். இதற்காக உங்களைப் பாராட்ட முடியாது. ஆனால் மன்னிக்கலாம். மன்

ளிக்க முடியும். அளவுக்கு மீறிய வறுமையைப் போல நீங்கள் கொடுமையையும் துரோகமும், சூழ்ச்சியும் புரிந்து சேர்த்திருக்கும் அளவுக்கு மீறிய செல்வமும் உங்களைச் சார்ந்துள்ள நோய்தான். நோயாளிகள், துன்பப்படுகிறவர்கள், ஏழைகள் ஆகியோர் மேல் எல்லாம் சிறு பிள்ளைப் பருவத்திலிருந்தே எனக்கு நிறைய அநுதாபம் உண்டு. இலஞ்சி மன்றத்திலும், உலக அறவியிலும் உள்ள நோயாளிகளுக்காக நான் என் மனத்தின் உள்ளேயே அநுதாபப்பட்டு அழுவதுண்டு. அப்படி உங்களுக்காகவும் நான் அநுதாபப்பட்டு அழ முடியும். இதோ ஒரு கணம் இப்படி என் பக்கமாகத் திரும்பித் தலை நிமிர்ந்து பாருங்கள்... என்னுடைய உறவுகளையும், செல்வங்களையும் உங்களுடைய துரோகத்துக்கும் கொடுமைக்கும் சிறிது சிறிதாக இழந்து பறிகொடுத்து விட்ட நான் அப்படி இழந்துவிட்ட உண்மையைத் தெரிந்து கொண்ட பின்னும் உங்களுக்கு முன்னால் உங்களைவிட நிம்மதியோடும், நிதானத்தோடும் சிரித்துக் கொண்டு நிற்க முடிகிறது. நீங்களோ இவ்வளவு பெரிய மாளிகையில் எவ்வளவு என்று கணித்துச் சொல்ல முடியாத அவ்வளவு செல்வத்தைச் சேர்த்து ஆண்டு கொண்டிருந்தும் இப்போது எனக்கு முன்னால் நிம்மதியும் நிதானமும் இழந்து தோன்றுகிறீர்கள். உங்களைப் பார்த்து நான் கோபப்பட ஒன்றுமில்லை. ஆனால் இரக்கப் படுவதற்கும் கருணை கொள்வதற்கும் உங்களிடம் நிறையப் பலவீனங்கள் இருக்கின்றன..." என்று சொல்லிக் கொண்டே வந்த இளங்குமரனை மேலே பேச விடாமல் செய்யும் ஆத்திரத்தோடு துள்ளி எழுந்து பின்னால் பிடித்துத் தள்ளிவிட முயன்றார் பெருநிதிச் செல்வர். அவருடைய கைகள் அவனை நோக்கி மேலெழுந்து ஓங்கின.

ஆனால் அவர் அப்படிச் செய்வதற்கு ஆத்திரத்தோடு கைகளை ஓங்கிக்கொண்டு நின்றபோது அந்தக் கைகள் இரண்டும் அதே நிலையில் மரத்துப் போனாற்போல் தயங்கிட அவர் செயலிழக்கும்படி செய்யவல்ல கம்பீர ஆகிருதி ஒன்று அந்தக் கூடத்துக்குள் புயல் புகுந்தது போலப் பிரவேசித்தது.



"நிறுத்து! இளங்குமரனுக்கு இந்த மாளிகையில் ஏதாவது நேர்ந்தால் உன்னுடைய குலத்தையே பூண்டோடு அழித்து விடுவேன். இந்தப் பெரிய நகரத்தையே என் கைகளால் ஆட்டிப் படைக்கிற வலிமை இருந்தும் நான் இவ்வளவு காலமாக எதற்கும் வைரம் கொண்டு குமுறியதில்லை. என்னைப் போன்றவர்களின் கோபத்துக்கு எவ்வளவு சக்தி உண்டு என்று நானே நிரூபித்துக் காட்ட வேண்டிய காலம் வந்து விட்டதுபோலிருக்கிறது" என்று எரிமலையாகக் கொதித்துப் பேசும் சொற்களோடு நீலநாகமறவர் மணிமார்பன் பின் தொடர அங்கு வந்து நின்றார்.

சோழ நாட்டிலேயே பெரிய வீரராகிய நீலநாகர் அங்கு வந்து நின்றதைக் கண்ட போது பெருநிதிச் செல்வரின் உணர்வுகள் ஒடுங்கின. கண்களுக்கு முன்னால் உலகம் இன்னும் அதிகமாக இருண்டுபோவது போல் தோன்றியது. அந்தத் தோற்றத்தை நிமிர்ந்து பார்க்கக் கூசிக் கொண்டு கீழே குனிந்து தரையைப் பார்த்தார் அவர்.

"தம்பீ! இந்த மனிதனிடம் வாயினால் பேசி நியாயம் கேட்டுப் பயனில்லை. கைகளால் பேச வேண்டும். எவ்வளவு பாவங்களைச் செய்யக்கூடாதோ அவ்வளவு பாவங்களைச் செய்து விட்டு மேலும் செய்வதற்குப் பாவங்களைத் தேடிக் கொண்டிருக்கிறவன் இவன்" என்று சொல்லிக் கொண்டே தனக்கு அருகில் வந்த நீலநாகரை இளங்குமரன் அவ்வளவாக மகிழ்ச்சியோடு வரவேற்கவில்லை. உள்ளடங்கிய மௌனத்தோடு

சில விநாடிகள் அசையாமல் நின்ற பின் ஒரு காலத்தில் தனக்கு வீரத்தைக் கற்பிக்கும் ஆசிரியராக இருந்த அந்தப் பெருவீரரை நோக்கி இளங்குமரன் இப்போது ஒரு கேள்வி கேட்டான்:–

''ஐயா! யாருடைய துணையுமில்லாமல் நம்முடைய பகையை நாமே தனியாக எதிர் கொள்ளலாம் என்று திடமான எண்ணத்தோடு புறப்பட்டு வந்திருக்கிற வீரனுடைய பெருமிதம் உயர்ந்ததா, இல்லையா?''

''உயர்ந்தது மட்டுமில்லை! இணையில்லாமல் உயர்ந்தது. அப்படிப்பட்ட வீரமுள்ளவர்கள் தங்களைப் பெருமைப் படுத்திக் கொள்வதோடு தங்களைச் சார்ந்துள்ள வீரம் என்னும் குணத்தையே பெருமைப் படுத்துகிறார்கள், இளங்குமரா!''

''மிகவும் நல்லது ஐயா! அத்தகைய தன்னம்பிக்கை வாய்ந்த வீரன் தன் எதிரியைத் தான் மட்டும் சந்திக்க வேண்டிய களத்தில் தனக்குத் துணையாக எவரேனும் பின் தொடர்வதைப் பொறுத்துக் கொள்ள முடியுமோ?''

நீலநாகர் இந்தக் கேள்விக்கு மறுமொழி கூற முடியாமல் அப்படியே அயர்ந்து போய் நின்று விட்டார். மேல் நோக்கி ஏறிட்டுப் பார்த்துக் கொண்டிருந்த அவருடைய பார்வை கூசித் தாழ்ந்தது. இளங்குமரனிடமிருந்து இப்படி ஒரு கேள்வியை அவர் எதிர்பார்க்கவே இல்லை. இதனால் சுட்டிக் காட்டப்படுகிற குற்றம் தன்னுடையது என்பதை உணர்ந்தபோது அவருக்கு மிகவும் நாணமாயிருந்தது. அப்போது இளங்குமரனுக்கு அவர் கூறிய மறுமொழிச் சொற்கள் ஒலி குன்றித் தன் தவற்றைத் தானே அங்கீகரித்துக் கொண்டது போன்ற தொனியோடு வெளிப்பட்டன.

''தம்பீ! என்னைப் பொறுத்துக்கொள். நான் உனக்குத் துணையாயிருக்க வேண்டுமென்ற ஆவலோடு இங்கே வந்ததை நீ இப்படி உன் பெருமைக்குக் குறைவாக நினைப்பதாயிருந்தால் என்னைப் பொறுத்துக் கொள். பிறர் மேல் நமக்குள்ள மிகுதியான வெறுப்பினால் சில வேளைகளில் நாம் தவறு செய்து விடுவதைப் போலவே பிறர் மேல் நமக்குள்ள அதிகமான அன்பினாலும் சில தவறுகளைச் செய்து விடுகிறோம். உன் மேலுள்ள அன்பின் மிகுதியால் உனக்கு இங்கே என்னென்ன கெடுதல் நேருமோ என்று எண்ணிக் கொண்டு நான் பின் தொடர்ந்தேன். மேலும் எந்தவிதமான ஆயுதமும் இல்லாமல் பசித்துத் தளர்ந்த உடம்பும் உணர்வுகள் நெகிழ்ந்த மனமுமாக நீ இங்கே புறப்பட்டதாக மணிமார்பன் என்னிடம் வந்து கூறினான். அவன் என்னிடம் வந்து கூறிய சூழ்நிலையும் என்னை ஆத்திரமடையச் செய்து விட்டது.''

''உங்களுடைய அன்புக்கும் பாசத்துக்கும் நான் நிறைந்த நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன். இந்தப் பெருமாளிகைச் செல்வரை வெற்றி கொள்வதற்கு நான் ஆயுதங்களோடுவரவில்லையே என்று நீங்கள் கவலைப்பட்டு எனக்குத் துணையாக என்னைப் பின் தொடர்ந்திருக்க வேண்டியதில்லை; எனக்கு நான் இவரிடம் பேச முடிந்த சொற்களை விடப் பெரிய ஆயுதங்கள் வேறு எவையும் இருக்க முடியாது.. என்னை எதிர்ப்பதற்கு என் சொற்களை விடப் பெரிய வேறு ஆயுதங்கள் எவையும் இவரிடமும் இருக்க முடியாது....''

''உயிரை அழிப்பதில் சொற்களைக் காட்டிலும் விரைந்து முயலும் இயல்பு ஆயுதங்களுக்கு இருப்பதைக் கண்கூடாகக் காண்கிறோமே தம்பீ?''

''ஒப்புக் கொள்கிறேன். ஆனால் என் நாவிலிருந்து பிறக்கும் நியாயமான சொற்களுக்கு மறுமொழி சொல்ல முடியாதவரை இவர் எனக்குத் தோற்றுப் போய்க் கொண்டிருப்பதாகத் தான் அர்த்தம். இவர் வேண்டுமானால் என் உடம்பை அழிக்கலாம். ஆனால் அப்படி அழித்தோம் என்ற நினைவைத் தன் மனத்திலிருந்து என்றுமே இவரால் அழிக்க முடியாது. இந்த நிலையில் நீங்கள் எனக்குச் செய்கிற பெரிய துணை என்னை இவரோடு தனியே விடுவதுதான். இவரை என்னுடைய எதிரி என்று நான் நினைக்கவில்லை. என் வாழ்க்கையிலேயே நான் இதுவரை அநுதாபம் கொள்ள நேர்ந்தவர்களை எல்லாம் விட அதிகமாக அநுதாபம் கொள்ளுவதற்கு உரியவர் இவர் என்றுதான் எண்ணுகிறேன். என்னுடைய இந்தப் பரந்த அநுதாபத்தைச் சான்றாண்மை எனக்குத் தந்திருக்கிறது. இதை இவர் மேல் நான் செலுத்த முடிவதற்குத் தடையாக உங்கள் வரவு எனக்குத் தோன்றுகிறது.''

''என்னை மன்னித்து விடு. நான் இங்கே உனக்கு அத்தகைய தடையாக நிற்க விரும்பவில்லை'' என்று கூறிவிட்டு மறுபடியும்இளங்குமரனுடைய முகத்தை ஏறிட்டுப் பார்ப்பதற்குக் கூசியவராக மணிமார்பனையும் கைப்பற்றி இழுத்துக்

கொண்டு நீலநாகர் அங்கிருந்து வேகமாக வெளியேறினார். எவ்வளவுக்கு ஆவேசமாகவும் ஆத்திரமாகவும் அவர் அந்த மாளிகைக்குள் நுழைந்தாரோ அவ்வளவிற்குத் தளர்ந்து துவண்டு குனிந்த தலையோடு திரும்பிச் சென்று கொண்டிருந்தார். இந்த நிகழ்ச்சியால் தன் தந்தைக்குச் சமமான அந்தப் பெரு வீரரின் மனம் புண்பட்டிருக்குமோ என்று உள்ளூற வருந்தினாலும் அப்பொழுது தான் நிற்கும் சூழ்நிலையில் இதைத் தவிர வேறு எதுவும் செய்வதற்கில்லை என்று மனத்தைத் தேற்றிக் கொண்டவனாகத்தான் எதிர்க்க விரும்பாத எதிரியின் பக்கம் பார்த்தான் இளங்குமரன். முகத்தை வேறுபுறமாகத் திருப்பிக் கொண்டு நின்றிருந்தார் பெருநிதிச் செல்வர். இளங்குமரன் சிரித்துக் கொண்டே நிதானம் மாறாத குரலில் அவரைக் கேட்டான்:—

''இப்போது இங்கிருந்து வெளியேறிச் செல்கிறீரே: இந்த ஆலமுற்றத்துப் பெரியவர் குறுக்கிட்டிரா விட்டால் நீங்கள் என்னைக் கீழே பிடித்துத் தள்ளியிருப்பீர்கள். அப்படித் தள்ளி விட்ட பின்பு இன்னும் கொடுமையாக ஏதேனும் செய்து என்னை அழிக்கவும் முயன்றிருப்பீர்கள் அல்லவா? இப்போதும் உங்கள் முயற்சிக்குப் பழுதில்லை. நான் தனியாகத்தான் உங்கள் முன் நிற்கிறேன். எந்தவிதமான கோபதாபங்களும் இல்லாமல், நீங்கள் அதிகபட்சமாக எனக்குச் செய்ய முடிந்த பெருங் கொடுமை எதுவாயிருந்தாலும் அதற்கு என்னை இலக்காக்கிக் கொள்ளத் துணிந்துதான் நிற்கிறேன். உங்களுக்குத் தோன்றுவதைச் செய்யலாம்.''

இளங்குமரனின் இந்தச் சொற்களைக் கேட்டு அவர் அவன் பக்கமாகத் திரும்பினார். அவ்வாறு திரும்பிய போது அவர் முகம் வெளிறினாற் போலப் பயந்து தோன்றியது. கண்கள் கலங்கிச் சிவந்திருந்தன. உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. முகத்திலும் கழுத்திலும் வேர்த்துப் பெருகியிருந்தது. பிச்சை கேட்பது போல் ஒடுங்கி நலிந்த குரலில் அவனருகே வந்து மன்றாடினார் அவர்:—

''தயை கூர்ந்து நீ என் எதிரே நிற்காமல் போய் விடு! உன்னைப் பார்ப்பதற்குப் பயமாயிருக்கிறது. உன் கண்களின் பார்வை கணத்துக்குக் கணம் நெருப்பாகி என்னைச் சுடுகிறது. உன்னுடைய சொற்கள் என்னைக் கொல்வதற்கு முன் உன் பார்வையே கொன்று விடும் போல் இருக்கிறது. நான் என் வாழ்வில் இப்படிப்பட்ட எதிரியை இதுவரை சந்தித்ததில்லை. என் மனம் உன் முன்னால் பதறி நடுங்குகிறது. எனக்குள்ளே ஏதோ நெருப்பு மூண்டதுபோல் பற்றி எரிகிறது. நீ சொல்லியது உண்மைதான். எப்படி வாழக் கூடாதோ அப்படி நான் வாழ்ந்து விட்டேன். இப்படி வாழ்ந்து விட்டதைப் பாராட்ட முடியா விட்டாலும் மன்னிக்க முடியும் என்று நீ சொல்கிறாய். ஆனால் உன்னுடைய மன்னிப்பை ஏற்றுக் கொள்ள எனக்குத் துணிவில்லை. நான் மன்னிப்பதற்குக் கூடத் தகுதியற்றவன். நீ என் மேல் அநுதாபம் செலுத்துவது உண்மையானால் எனக்கு ஓர் உதவி செய். இந்த உதவியைத் தவிர வேறு எதையும் இனி மேல் நீ எனக்குச் செய்ய முடியாது.''

''சொல்லுங்கள். உங்களுக்கு நான் என்ன உதவி செய்ய வேண்டும்?''

''பெரிதாக ஒன்றும் செய்ய வேண்டாம். என்னுடைய செல்வமும், பீடும் போய் விட்டால் இந்தப் பெரிய நகரத்தில் அரசனிலிருந்து ஆண்டி வரை என்னை யாரும் மதிக்க மாட்டார்கள். ஏனென்றால் செல்வம் ஒன்றைத் தவிர என்னை மதிப்பதற்குரிய வேறு நிலையான காரணங்களை நான் பெறவில்லை. இந்தச் செல்வங்கள் என்னை விட்டுப் போகும்போது நானும் உலகத்தை விட்டுப் போய்விட வேண்டும். இனிமேல் நான் வாழக் கூடாது. நல்ல நண்பர்களும், நல்ல குணங்களும் இருந்திருந்தால் நான் இப்படியெல்லாம் கெட்டுப் போயிருக்க மாட்டேன். இவ்வளவு பாவங்களுக்கு அதிபதியாகவும் ஆகியிருக்க மாட்டேன். பூர்வ புண்ணியம் உள்ளவர்களுக்குத் தான் நல்ல குணங்களும் நல்ல நண்பர்களும் வாய்ப்பார்கள் போல் இருக்கிறது. எனக்கு அவை யெல்லாம் கொடுத்து வைக்க வில்லை. நான் பிறவியிலேயே கெட்டவன். உன் தாயின் அழகை அடைய முடியாமல் ஏமாற்றம் அடைந்த போது அந்தச் சிறிய ஏமாற்றத்தைக் கூடத் தாங்கிக் கொள்ள இயலாமல் மேலும் மேலும் கெட்டவனாக மாறினேன். சுற்றியிருந்தவர்கள் என்னைக் கொடிய வழியிலேயே தூண்டி விட்டு விட்டார்கள். இனி நான் மாற முடியாது. ஆனால் சாக முடியும்.

என்னைத் துடிக்கத் துடிக்கக் கொன்று பழி வாங்க வேண்டிய நீயோ என் முன்



ளுல் வந்து சிரித்துக் கொண்டு நிற்கிருய். என் மேல்கூட அநுதாபப்படுவதாகச் சொல்கிருய். என்னுடைய இந்தச் செல்வங்கள் உனக்குப் பெரியனவையாகத் தோன்ற வில்லை. நீ உன் மனத்தையே செல்வமாக வளர்த்துக் கொண்டிருக்கிருய். இருப்பினும் நீ ஒன்று செய்ய வேண்டும். என்னைக் கொன்று விட்டு இந்தச் செல்வங்களை யெல்லாம் உனக்குரியவையாக்கிக்கொண்டு நீவாழ வேண்டும். நானே என்னைக் கொன்று கொள்ள முடியும். ஆனல் அதற்கும் எனக்கு உறுதியான மனம் வாய்க்கவில்லை. உன்னுடைய பரிசுத்தமான கண் பார்வை, சத்தியமயமான சொற்கள்; எதிரியையும் வசப்படுத்தி விடும் புன்னகை இவற்ருலேயே நீ என்னை முக்கால் பகுதி கொன்று விட்டாய். மீதமிருக்கும் கால் பகுதியையும் உன் கைகளாலேயே நீ அழித்துவிடு! கடைசி வேளையில் நான் மனம் மாறி உனக்குத் தோற்றுப் போக ஆசைப்படுகிறேன். உன்னைப் போன்று தூய்மையான மனம் உள்ளவன் என்னை வெற்றி கொள்ள அநுமதித்து நான் தோற்பதனுல் வருகிற பிறவியிலாவது எனக்குப் புண்ணியம் வாய்க்கும். இதோ நீ என்னைக் கொன்று கொள். என்னை வென்று கொள்'' என்று கதறிக் கொண்டே பொறியற்ற பாவை போல் தளர்ந்து அவனுக்கு முன் முழந்தாள்களை மண்டியிட்டுக் கொண்டு அமர்ந்தார் அவர்.

அவருடைய சொற்களைக் கேட்டு இளங்குமரன் கைகட்டி நின்று கொண்டு நகைத்தான். அவர் நிலையைக் கண்டு பரிதாபமாயிருந்தது அவனுக்கு. இந்த மாறுதலை வியந்துகொண்டே அவருக்கு மறுமொழி கூறினுன் அவன்:

''ஐயா! பிறரை வென்றுவிட வேண்டும் என்ற ஆசைகூடத் துறவிக்கு இருக்கக் கூடாது. வெற்றிக்கும் ஆசைப்படாத மனம்தான் துறவியின் செல்வம். அந்தச் செல்வம் தோல்வியினுலும் குறையாது. உங்கள் மனத்தில் இவ்வளவு காலமாக இப்படிக் கொடுமை செய்து வாழக் காரணமாக நின்ற பலம் எது என்று பரிசோதனை செய்து பார்க்க மட்டும்தான் நான் விரும்பினேன். உங்களை வெல்லவும் கொல்லவும் நான் விரும்பவில்லை. வெற்றியைக்கூட என்னுல் விட்டுக் கொடுக்க முடியும். அப்படிப் பல முறை என் வாழ்வில் நேர்ந்திருக்கிறது.

முருந்தபட்டர் என்ற ஞானி எனக்கு அறிவில் தோற்றுப் போக ஆசைப்பட்டார். உங்கள் மகள் சுரமஞ்சரியும், வீரசோழிய வளநாடுடையார் மகள் முல்லையும் எனக்குக் காதலில் தோற்றுப் போக ஆசைப்பட்டார்கள். இன்று நீங்கள் எனது சொற்களுக்குத் தோற்றுப்போய் விட்டதாகச் சொல்கிறீர்கள். இப்படித் தற்செயலாக நேரும் தோல்விகளை அங்கீகரித்துக் கொள்வதே வெற்றியாகி விடுமோ என்று வெற்றி அகங்காரத்துக்குப்பயந்துகொண்டிருக்கிறேன் நான். எல்லா ஆசைகளையும் விட்டு விடுகிற தைரியமும் வீரனுக்கு வேண்டுமல்லவா? யாரை அதிகமாக வெறுக்க வேண்டுமோ அவர்கள் மேல் கூட அன்பு செய்யத் துணிந்துவிட வேண்டும். அந்த நிலைதான் கருணையின் இறுதி எல்லை. உங்கள் பாவங்களை நீங்களே உணர்கிறீர்கள். அந்த உணர்ச்சி மாறுதலை வாழ்த்துகிறேன். அவ்வளவு போதும் எனக்கு. நான் வருகிறேன்'' என்று அவரை வாழ்த்தி விட்டு மாபெரும் தியாகியாய் அவன் அங்கிருந்து வெளியேற முற்பட்டான். ஆனல் அவன் அந்தக் கூடத்திலிருந்து வெளியேறி மாளிகையின் பிரதான வாயிலைக் கடப்பதற்குள் கண்ணீரும் கம்பலையுமாய்ச் சுரமஞ்சரி ஓடி வந்து அவனுடைய வழியை மறித்துக் கொண்டு விட்டாள்.

# 11. பரிவு பெருகியது

கார்காலத்து மலைச் சிகரத்தின் இருபுறமும் மேகங்கள் படிந்தாற் போல் சுரமஞ்சரியின் நெற்றியின் மேல் இருபுறமும் சுருண்டு குழன்று சரிந்திருந்த கருங் கூந்தல் கவர்ச்சி மிகுந்த அவள் முகத்துக்குச் சோகமயமானதோர் அழகைத் தந்து கொண்டிருந்தது. ஊற்றுக் கண்களைப் போல் அவளுடைய விழிகளில் நீர் பெருகிற்று. பட்டின் மென்மையும், பவழத்தின் செம்மையும் பொருந்திய அவள் இதழ்கள் அப்போது அவனிடம் பேசுவதற்குச் சொற்களைத் தேடித் துடிப்பதுபோல் துடித்துக் கொண்டிருந்தன. நிலாவிலிருந்து தளிர்த்த தளிர்கள் போல் மென்மையாகவும் பொன்னிற் கொழுந்து முளைத்தாற் போல் கவரும் நிறமுடையனவாகவும் இருந்த அவள் கைவிரல்கள் வணங்குகிற பாவனையில் அவனை நோக்கிக் குவிந்தன. அந்த ஆற்ருமையை அந்தத் தவிப்பைக் கண்டும் காணுதது போல எப்படிக் கடந்து மேலே தன் வழியில் போவதென்று புரியாமல் இளங்குமரன் தயங்கி நின்ருன். உலகத்திலுள்ள பரிசுத்தமான பூக்கள்

எல்லாம் எதிரே வந்து நிற்கும் அவளுடைய உடம்பிலிருந்து மணப்பது போல் ஒரு நறுமணம் சூழ்ந்து கொண்டு கிளர்வதை இளங்குமரன் உணர்ந்தான். அந்தப் பரிமள நறுமணம் வலையைப் போல் தன்னைப் பிணித்துவிட முயன்ற வேளைகளை ஒவ்வொன்றாக நினைத்துக் கொண்டு நன்றாகத் தலை நிமிர்ந்து நிர்ப்பயமாக அவள் கண்களைச் சந்தித்தான். பின்பு வேண்டினான்:

''என்னுடைய வழியை எனக்குவிடு.''

''விட்டு விடுகிறேன். ஆனால் அப்படி விடுவதற்கு முன் எனக்கு உங்களிடமிருந்து ஒன்று தெரிந்து கொள்ள வேண்டும். இந்த வழியில் நானும் உங்களோடு சேர்ந்து நடந்து வர அநுமதி அளியுங்கள். அதற்கு மனம் இல்லாவிட்டால் இதே வழியில் விழுந்து சாவதற்காவது ஒப்புக் கொள்ளுங்கள். இப்படி இந்த வழியில் விழுந்து இறந்து போனால் அடுத்த பிறவியிலாவது நீங்கள் நடந்து போகிற பாதையில் புல்லாக முளைத்து உங்கள் பாதங்களில் மிதிபடுவேன். இல்லை. இல்லை. புல்லாக முளைத்தாலும் யாராவது வேரோடு பறித்தெறிந்து விடுவார்கள். கல்லாகவே கிடந்து உங்கள் கால்களில் மிதிபட வேண்டும் நான். உங்கள் கால்கள் என் மீது மிதிபடுகிற ஒவ்வொரு முறையும் அகலிகை மேல் இராமன் திருவடி பட்டதும் நிகழ்ந்தது போல எனக்கு உயிர் வர வேண்டும். உங்கள் பாதங்கள் என் மேல் படாத நேரங்களில் மறுபடி நான் உயிரற்ற கல்லாகிவிட வேண்டும்.''

''உன் ஆசை விநோதமானதாயிருக்கிறது. சாவதை விட உயர்ந்த இலட்சியம் ஏதாவது உன் வாழ்க்கையில் உனக்கு இருக்க வேண்டும்.''

''அப்படி ஓர் இலட்சியம் எனக்கும் இருக்கிறது. ஆனால் அந்த இலட்சியத்துக்குப் பொருளானவருக்கு என்னைக் காண்பதற்கே அலட்சியமாயிருக்கும் போது நான் வாழ்ந்துதான் என்ன பயன்? உலகத்துக்கெல்லாம் அநுதாப மழை பொழிகிற அந்தக் கருணை முகில் என்னுடைய விருப்பத்துக்கு மட்டும் வறண்டு போகக் காரணமென்னவென்று புரியாமல் தவிக்கிறேன் நான்.''

''உனக்குப் புரியாமல் நீ தவிப்பதற்கெல்லாம் நான் எப்படி மறுமொழி கூற முடியும்?''

''இந்தத் தவிப்பு உங்களிடமிருந்து பிறந்தது. உங்களோடு இணைந்து நிறைந்து விடக் காத்திருப்பது. உங்களுடைய புறக்கணிப்புக்கு அப்பால் - சாவைத் தவிர இந்தத் தவிப்புக்கு வேறு மருந்தில்லை.''

''நான் யாரையும் புறக்கணிக்கவில்லை! என் வழியில் தடையாக நிற்க வேண்டாமென்று மட்டும் சொல்லுகிறேன்....''

அவனோடு மேலே பேசுவதற்குச் சொற்கள் கிடைக்காமல் கண்ணீர் பெருகும் விழிகளோடும் வணங்குவதற்காகக் கூப்பிய கைகளோடும் நின்றாள் சுரமஞ்சரி. எதிரே போவதற்கு முந்திக் கொண்டு நிற்கிற அவனுடைய கண்களையும், தோள்களையும் பார்த்து இத்தனை காலமாக அவற்றை எண்ணி அவற்றுக்காகவே தவம் செய்துவந்த தன்மனத்தின் நம்பிக்கைகள் தளரப் பெருமூச்செறிந்தாள். கப்பல் கரப்புத் தீவில் இருண்ட மழை நாள் ஒன்றில் இந்தக் காவியநாயகனின் பொன் நிறத் தோள்கள் மீது தலை சாய்த்து உறங்க முயன்ற வேளை நினைவு வந்தது அவளுக்கு. அந்த விநாடியை வாழ்த்திக் கொண்டு தான் இத்தனை காலமாக அவள் வாழ்ந்திருக்கிறாள்.

ஒவ்வொன்றாய்த் தளர்ந்து கொண்டிருந்த தன் நம்பிக்கைகளை விட்டு விடாமல் இளங்குமரனுடைய பாதங்களுக்கு முன் பூமாலை சரிவது போல் முழந்தாளிட்டு அமர்ந்து கொண்டு அவள் பேசலானாள்:—

''இப்போது இந்த உணர்ச்சி மயமான வேளையில் உங்கள் பாதங்களில் இடுவதற்கு வேறு பூக்கள் என்னிடம் இல்லை. என் உயிரையே பூவாகக் கருதிக் கொண்டு உங்கள் பாதங்களில் அர்ப்பணம் செய்வதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை. உங்களோடு இணைந்து விடும் ஒரே இலட்சியத்துக்காகத்தான் இந்த உயிரும் இந்த நினைவுகளும் எஞ்சித் தவித்துக் கொண்டிருக்கின்றன. உங்களோடு இணைவதற்கு முடியாத உயிர் வாழ்க்கை எனக்கு இனி வேண்டியதில்லை. என்னுடைய இந்த உயிரைப் போக்கிக் கொள்ளுமுன் என் மனத்தின் இந்தக் கணத்தில் தவிக்கிற தவிப்பு ஒன்றை உங்களிடம் வெளிப்படையாகக் கேட்டுத் தெரிந்து கொண்டு விட வேண்டும்....''

அவளுடைய தவிப்பு, கண்ணீர், வேதனை எல்லாவற்றையும் கண்டும் தயங்கி நின்றான் இளங்குமரன். முதல் முதலாக இந்தப் பெண்ணிடமிருந்து ஓவியன் மணிமார்பன் மடல் கொண்டு வந்த போதும் கப்பல் கரப்புத் தீவில் நெகிழ்ந்த உணர்ச்சியோடு இவள் நெருங்கி நின்ற போதும் தன் மனத்தில் தாழம்பூ மணம் பரப்பிய வேளைகளை நினைத்துக் கொண்டான். தன்னையே அந்தப் பெண்ணுக்கு ஆளக் கொடுப்பதைத் தவிர வேறு எந்த மருந்தினாலும் தணிக்க முடியாத அவள் வேதனையைக் கண்டு அவன் மனமும் அநுதாபப்பட்டது. ஆனால் இத்தனை காலம் வளர்த்த மனத்தை ஒரு பெண்ணின் அழகுக்கு

விட்டுக் கொடுப்பதா என்று ஓர் எண்ணம் தயங்கியது; தடுத்தது. அவனுள்ளே இப்படி இந்த மனப் போராட்டம் நடந்து கொண்டிருந்தபோது அவள் அவனைக் கேட்டாள்:—

''உங்களைச் சந்தித்த நாளிலிருந்து, நான் உங்களுக்காகச் சிறிது சிறிதாகத் தோற்றுப் போய்க் கொண்டிருக்கிறேன் என்பதை நீங்கள் அறிவீர்களா?''

''இருக்கலாம். ஆனால் உன்னை வெற்றி கொள்ள முயன்றதாகவோ வென்றதாகவோ எனக்கு நினைவில்லையே?''

''இது ஒரு விசித்திரமான தோல்வி! இந்தத் தோல்வியை எப்படி நிரூபிப்பதென்று எனக்குத் தெரியவில்லை. நான் பெண். பேதைத் தன்மை நீங்காதவள். அநுதாபத்துக்குரியவள். பிறர் மேல் அநுதாபப்படும் மனம்தான் பெரிய செல்வம் என்று நீண்ட நாட்களுக்கு முன்பு நாளங்காடிக் கூட்டத்தில் அந்தத் தொழு நோய் முதியவனைக் காப்பாற்றும் போது நீங்களே கூறினீர்களே? அந்தவிதமான அநுதாபத்துக்கு நான் மட்டும் பாத்திரமாக முடியாதவளா? நானும் ஒரு நோயாளிதான். எனக்கு வந்திருக்கிற நோய்க்குப் பெயர் ஆசை, வேட்கை, காதல் என்று எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். இந்த நோய்க்கு மருந்தாவதற்குக் கூசிக் கொண்டு நீங்கள் மேலே நடந்து போகத்தான் விரும்புகிறீர்களானால், உங்களைத் தடுக்கும் ஆற்றல் எனக்கில்லை. ஆனால் இந்தக் கடைசி விநாடியிலும் நான் துணிவாக இன்னொரு காரியம் செய்ய முடியும். வேறொரு விதத்தில் முயன்று உங்கள் அநுதாபத்துக்கு — நானும் பாத்திரம்தான் என்பதை நிரூபிக்க முடியும்!''

''அது எப்படியோ?''

''சொல்கிறேன். உலகத்தில் மிகவும் துன்பமான முயற்சி நம்மிடம் அன்பு செலுத்தாதவர் மேல் நாம் உயிரையே வைத்து அன்பு செய்து தவிப்பதுதான். நீங்கள் அந்தக் கூடத்தில் என் தந்தையோடு பேசிக் கொண்டிருந்தவற்றையெல்லாம் கதவோரமாக ஒதுங்கி நின்று நானும் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். இறுதியாக நீங்கள் அவரிடம் சொல்லிய வார்த்தைகளைமீண்டும் உங்களுக்கு நினைவூட்டுகிறேன். 'யாரை அதிகமாக வெறுக்கிறோமோ அவர்கள் மேல் கூட அன்பு செய்யத் துணிய வேண்டும். அதுதான் கருணையின் இறுதி எல்லை' என்று கூறினீர்களா, இல்லையா?''

''கூறினேன். ஆனால் உன்னை நான் வெறுக்கவும் இல்லை; விரும்பவும் இல்லை. உன்னைப்போல் பேரழகு வாய்ந்த பெண்கள் இந்த உலகத்தில் பலர் இருக்கிறார்கள். இந்த அழகிலும் நான் உன் பெருமையைக் காணவில்லை. உன்னைப் படைத்த கடவுளின் பெருந்தன்மையைத் தான் காண்கிறேன். ஓரே உடம்பில் இவ்வளவு அழகையும் நிறைத்து அனுப்பியவனுடைய பெருந்தன்மை சிறந்ததுதான். இந்த அழகை உன் செல்வமாகக் கருதி இதற்காக நான் என்னை இழந்துவிட வேண்டும் என்று நீ எதிர்பார்ப்பது பேராசை அல்லவா?''

''பேராசையாகவே இருக்கட்டும்! நான் தான் பேதைப் பெண். கல்வியின் பலமோ, தத்துவங்களால் தெளிந்த மனமோ, வைராக்கியங்களோ இல்லாதவள். நீங்கள் ஞான வீரர். வெற்றிக்குக்கூட ஆசைப்படாதவர். வெற்றியைக் கூட விட்டுக் கொடுக்கவும், தோல்வியைச் சிரித்த முகத்தோடு அங்கீகரித்துக் கொள்ளவும் முடியுமென்று பெருமைப்படுகிறவர். அப்படி இருந்தும் எனக்காக விட்டுக் கொடுப்பதற்கு மட்டும் உங்கள் மனம் துணியத் தயங்குகிறது. இந்த உலகத்தில் சுரமஞ்சரியைத் தவிர எல்லா உயிர்களின் மேலும் அன்பு செலுத்த உங்களால் முடியும். அப்படித்தானே? உங்களைப்போல் அன்புசெலுத்துவதில் கூடப் பட்சபாதம் வைத்துக் கொண்டிருக்கிற வரை நான் எப்படித் துறவியாக ஏற்றுக் கொள்ள முடியும்?''



இதைக் கேட்டு இளங்குமரன் சிரித்தான்.

''நீ என் வழியை விடமாட்டாய் போலிருக்கிறது. உன் பேச்சும் முடிவில்லாத வாதமாக வளர்ந்து கொண்டிருக்கிறது. இதழ்கள் துடிக்கக் கண்கள் கலங்கிப் பொருக நீ வந்து நிற்கிற கோலத்தைப் பார்த்தாலும் எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. உன் வழியும் உனக்குக் கிடைக்காமல் என் வழியும் எனக்குக் கிடைக்காமல் இரண்டு பேரும் இப்படி ஒருவருடைய வழியை மற்றொருவர் மறித்துக் கொண்டு எவ்வளவு நேரம் தவிக்க முடியும்? இந்தத் தவிப்புக்கு முடிவு இருவருக்குமே தெரிய வேண்டும். அதற்கு ஒரே வழிதான் இருக்கிறது பெண்ணே! நீ எதைக் கேட்க வந்தாயோ அதையே பொருளாகக் கொண்டு என்னிடம் வாதத்தைத் தொடங்கு. பல்லூழி காலத்துக்கு முன்பு ஆயிரம் பிரம்ம ஞானிகள் கூடியிருந்த பெருஞ் சபையில் ஞானமலையாகிய யாக்ஞவல்கியரைத் தன்னோடு பிரம்மவாதம் புரிய முன்வருமாறு கார்க்கி என்ற பெண்மணி தனியாய் நின்று அழைத்திருக்கிறாள். அப்படி நீயும் என்னை அழைக்க முடியும்..''

''ஐயா! நீங்கள் என்னை ஏளனம் செய்கிறீர்கள் போலும். வெறுங்கையோடு வந்திருக்கிற எதிரியை வாட்போருக்கு வா என்றழைப்பது போலிருக்கிறது உங்கள் செயல். மைத்திரேயி, கார்க்கி போன்ற வேத காலத்துப் பெண்கள் எங்கே? பேதைத் தன்மையைத் தவிர வேறொன்றும் தெரியாத நான் எங்கே? எனக்கு அவ்வளவு அறிவு வலிமை இருந்தால் உங்கள் மேல் வைத்த மனத்தை மீட்டுக் கொண்டு நான் துறவியாகப் போய் விட முடியும். ஆனால் இப்போதுள்ள நிலையில் நான் பெரும் பேதை. உங்களை அடைய முடியாவிட்டால் சாவதைத் தவிர வேறெதுவும் நோக்கமில்லாதவள்....''

''பேதைகள் கூடச் சில சமயங்களில் வெற்றி பெற முடியும். விதி மட்டும் நல்லதாக இருக்க வேண்டும்....''

''எதை வெற்றி பெற முடியுமென்கிறீர்கள்?''

''எதை விரும்புகிறார்களோ அதைத்தான். விரும்பியதை விரும்பியபடியே அடைவதைவிடப் பெரிய வெற்றி ஏதும் பேதைகளுக்கு இருக்க முடியாது...''

''அப்படியானால் உங்கள் மேல் ஆசைப்படுவதைத் தவிர வேறெதையும் கற்காத பேதையான என்னோடு வாதிடவும் நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?''

''மறுக்கவில்லை....''

''ஒருவரிடம் கைகூப்பி ஒரு பொருளை ஈயென இரத்தல் இழிந்ததுதானே?''

''ஆமாம்! இழிந்ததுதான்.''

''இரப்பவருக்கு ஈய மாட்டேனென்று மறுப்பது?''

''அதைவிட இழிந்தது....''

''இழிந்த செயலைச் செய்ய விரும்புவது உயர்ந்த மனிதர்களுக்குத் தகுமா?''

''தகாது! தகாது!''

''அப்படியானால் நான் கேட்கும் ஒன்றை நீங்கள் எனக்கு ஈந்தருள வேண்டும்....''

''நான் துறவி. என்னிடம் ஈவதற்கு ஒன்றுமில்லை. நானே கொடுப்பவர்களைத் தேடிக் கொண்டிருப்பவன்.''

''பொய்! இது பெரிய பொய்! முதன் முதலாக உங்களை மற்போரில் வென்ற வீரராகப் பூம்புகார்க் கடற்கரையில் சந்தித்த போது நான் கொடுக்கிறவளாக இருந்தேன். நீங்கள் நான் கொடுத்ததை வாங்கிக் கொள்ள மறுக்கும் அளவு மானத்தின் எல்லையில் போய் நின்று கொண்டு என் பரிசைப் புறக்கணித்தீர்கள். இப்போது நான் உங்களிடமிருந்து பிச்சை கேட்கிறவளாக இருக்கிறேன். கேட்கிற பிச்சையும் அன்புப் பிச்சை கொடுக்க முடிந்த பிச்சையைத்தான் மண்டியிட்டுப் பணிந்து கேட்கிறேன். இந்தப் பிச்சையையும் கொடுக்க முடியாதென மறுக்கிறீர்கள். நான் கொடுக்க முடிந்தவளா:: இருந்த காலத்தில் நீங்கள் பெற்றுக் கொள்ள மறுத்தீர்கள். நான் கையேந்திப் பிச்சை கேட்டுக் கொண்டு நிற்கிற காலத்தில் நீங்கள் கொடுக்க மறுக்கிறீர்கள். நிறைந்த மனமுடையவர்களுக்குக் கொடுக்க மறுப்பதும் இழிவு அல்லவா?''

''ஒன்றுமே இல்லாதவன் எதைக் கொடுக்க முடியும் பெண்ணே?''

''பொய் சொல்லாதீர்கள். நீங்கள் கொடுக்க முடிந்தவர். கொடுப்பதற்கு உங்களிடம் வள்ளன்மை இருக்கிறது.''

''இருந்தால் கேள். அப்படி இருப்பது எதுவானாலும் தருகிறேன்.'' இந்த வார்த்தைகளைச் சொல்லும் போதே தான் மெல்ல மெல்ல அவளுக்குத் தோற்றுக் கொண்டிருப்பது போன்ற தளர்ச்சியை இளங்குமரன் அடைந்து விட்டான். அந்தப் பெண்ணின் தந்திரமான கேள்விக்கு முன்னால் தான் பேதையாகி விட்டாற் போலவும் அவள் தன்னை வீழ்த்தும் புத்திக் கூர்மையைப் படிப்படியாகப் பெற்று விட்டாற் போலவும் உணர்ந்து சோர்ந்தான் அவன்.

அதுவரை அழுது கொண்டிருந்த சுரமஞ்சரி தன் கண்களைத் துடைத்துக் கொண்டு சிரித்தாள். அவள் கண்களில் நளினமான உணர்வுகள் பிறந்தன. அவனுடைய மனத்தின் தளர்ச்சி அவளுக்குப் புரிந்தது.

(தொடரும்)

---

11-3-62 இதழ் மணிபல்லவம் 7வது அத்தியாயத்தில் மருதி அருட்செல்வரிடம் பேசும் போது இடக்கண் துடித்ததாகக் கூறும் பகுதியில் வலக்கண் என்று திருத்திக் கொள்ளவும்.

கவிச்சக்கரவர்த்தி கம்பருக்குக் காரைக்குடியிலும் நாட்டரசன்கோட்டையிலும் சிறப்பாக விழா நடக்கும் வேளையில் கம்பரது கல்லறை பற்றி நடந்த ருசிகரமானதொரு வழக்கை இங்கு அளிக்கிறோம்.

—ஆசிரியர்

# கல்லறையா?  கோயிலா?

### அ. தமிழ்மாறன்

இராமநாதபுரம் ஜில்லாவில், சிவகெங்கைத் தாலூக்காவிலிருக்கும் நாட்டரசன் கோட்டையில் பாட்டரசன் கம்பனுடைய சமாதியிருப்பது பலருக்கும் தெரிந்திருக்கும். இந்தச் சமாதி, ''கம்பன் வீட்டுச் செட்டியார்'' என்று காரணப் பெயர் கொண்ட ஒரு குடும்பத்தாருக்குரிய நிலத்தில் அமைந்திருப்பதோடு, பல்லாண்டுகளாக மேற்படி குடும்பத்தாரின் பராமரிப்பிலேயே இருந்து வருகிறது. ''கம்பன் செய்'' எனப் பிரசித்தமாய் எல்லோராலும் அழைக்கப்படும் இந்நிலப் பரப்பில் எழும்பியுள்ள இக் கம்பன் சமாதியின் திருவுண்ணாழியில் (கர்ப்பக்கிருகத்தில்), சமாதியின் மீது சிவலிங்கமும், விநாயகர் முதலான தெய்வங்களின் சிலா ரூபங்களும் அமைக்கப் பெற்று மக்களால் வழிபாடு செய்யப்பட்டு வருகின்றன. இங்குதான் வந்தது ஆபத்து!

சர்தார் பட்டேல் சுதேச சமஸ்தானங்களை இந்திய யூனியனுடன் இணைத்தது போல், மூலை முடுக்கிலுள்ள வருவாய் நிறைந்த கோயில்களையெல்லாம் இணைத்து அரசியலாரின் ஆளுகைக்கு உட்படுத்தும் அரும்பணியில் ஈடுபட்டிருந்த 'அறநிலையப் பாதுகாப்புக் குழுவினரின்' கழுகுக் கண்களுக்கு ஒருநாள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகப் புகழும் பிரசித்தமும் பெருகி வரும் 'கம்பன் சமாதி' தட்டுப்பட்டது.

'கம்பன் சமாதி'யைக் 'கம்பன் கோயிலாக்கி' அதைத் தமது நேரிடை நிர்வாகத்தின் கீழ்ப்படுத்தி உத்தரவு பிறப்பித்தனர் அறநிலையத்தார். அதன்படி இதுவரை 'சமாதியைத் தவறு, தவறு, - 'கம்பன் கோயிலை'க் காத்துப் பூசனை முதலியன செய்து வந்த 'கம்பன் வீட்டுச் செட்டியார்' குடும்பத்தார், மேற்படி 'கம்பன் கோயில்' என்ற 'மத ஸ்தாபனத்தை' நிர்வகிப்போர் என்ற முறையில் ஆண்டுதோறும் 'அற நிலையத்தாருக்கு' ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்துவதோடு, அதன் சட்ட திட்டங்களுக்கும் உட்பட்டுச் செயலாற்ற வேண்டுமென்றும் உத்தரவிடப்பட்டார்கள்.

அறநிலையக் கழகத்தாரின் வர்ணனைப்படி, 'சமாதி' ஒரு மத ஸ்தாபனமோ அல்லது அறநிலையமோ அல்ல என்றும் அது கவியரசன் கம்பனுடைய கல்லறையே என்றும், அரசாங்கத்தாருக்கு அதில் எவ்வித பாத்தியமுமில்லை என்றும் குறிப்பிட்டுத் தனி நபரின் சொந்த உரிமைகளைப் பாதிக்கும் இவ்வுத்தரவை எதிர்த்து முதலில் அறநிலைய ஆணையருக்கு மேற்படி குடும்பத்தாரின் தற்போதைய நிர்வாகியும் வாரிசுமான திரு ஏவி. ஏ.ஆர். இராமநாதன் செட்டியாரவர்கள் அனுப்பிய 'ஆட்சேப மனு' நிராகரிக்கப்படவே, அவர் இதை எதிர்த்துச் சிவகெங்கையிலிருக்கும் சப்-கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்தார்.

இந்த வழக்கு, சிவகெங்கையில் நடக்கும் பொழுது மிகச் சுவாரசியமாகவும் சுவையாகவும் இருந்தது என்பதற்கு, இதை விசாரணை செய்த நீதிபதி (அவர் ஒரு முஸ்லிம் என்பது குறிப்பிடத்தக்கது) இதில் காட்டிய சிரத்தையும் ஊக்கமுமே சிறந்த சான்றாகும். இந்த வழக்கில் சாட்சிக்காரர் முதல் சர்க்கார் வக்கீல் வரை அனைவருமே, இலக்கிய ஆதாரங்களெல்லாம் காண்பித்துப் பேசிய நேர்த்தி

யைப் பேசாத நாளில்லை—வெகுகொல்லையில். முடிவில் தலைமுறை தலைமுறையாக மேற்படி சமாதியைக் காத்துப் பராமரித்து வந்த 'கம்பன் செட்டியார் வீட்டா'ருக்குச் சாதக மாகவே தீர்ப்பாயிற்று.

ஆனால் இத்துடன் இந்த விஷயத்துக்குச் 'சமாதி' கட்டி விட விரும்பவில்லை சென்னை அரசாங்கம். 'அறநிலையக் குழுவினரின்'—சார்பாகச் சென்னையரசு, கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்பை ஆட்சேபித்து ஓர் 'அப்பீலை'த் தொடர்ந்தது — சென்னை உயர்நீதி மன்றத்தில். 'கடுத்த பகையும் கல்லறை கடவாது' என்றொரு முதுமொழியுண்டு. ஆனால் கல்லறையை விட்டுக் கோர்ட்டு வரை வந்து விட்ட இந்தக் 'கல்லறையா? கோவிலா?' என்ற பிரச்னைக்கு முடிவு காண, உயர்நீதி மன்றம் இருதரப்பார் வாதத்தையும் கேட்டது. அறநிலையத்தாரின் சார்பில் வாதாடிய சர்க்கார் வக்கீல், "கம்பன் சமாதியென்று சொல்லப்படும் இடத்தில் இந்து தெய்வங்களான விநாயகர், லிங்கம் முதலியனவற்றின் படிவங்கள் உள்ளமை, இந்த இடத்தைக் 'கோவிலாகவே' எண்ணத் தூண்டுவதோடு, இங்கு திரளாக வரும் மக்கள் இவ்விந்து தெய்வங்களை மிகுந்த பக்தி சிரத்தையுடன் தொழுவதையும் பார்க்கும்பொழுது இதை வெறும் 'சமாதி' யென்று அழைப்பதைக் காட்டிலும் 'கோவில்' என்று கூறுவதே சாலப் பொருந்தும். மேலும் இங்கு வரும் கூட்டத்தில் பெரும் பகுதியினர் 'இந்தத் தெய்வங்களை' வழிபட வருபவரே என எண்ணுவதிலும் தவறில்லை" என்று கூறிக் கம்பன் சமாதியைக் 'கோயிலென்று' நிரூபிக்கத் தங்கள் மேதாவிலாசங்களைச் செலவிட்டனர்.

கம்பன் வீட்டாருக்காக வாதாடிய வழக்கறிஞர் திரு டி. எம். சின்னையாப் பிள்ளையவர்கள் சர்க்கார் தரப்பு வக்கீலின் அனுமானங்களுக்குத் தக்க பதிலடி கொடுத்து, வாதமுடிவில் குறிப்பிடுகையில், "கம்பன்-சமாதிக்கு வரும் மக்கள் கூட்டம் மறைந்த மகாகவிக்கு மரியாதை செய்து வழிபடவே கூடுகிறார்களென்றும், சமாதிக்கு அஞ்சலி செய்த கையோடு பக்கத்திலுள்ள தெய்வங்களுக்கு வழிபாடு செய்து விட்டுப் போனாலும், அது அவர்கள் அங்கு வருவதற்கு முக்கிய காரணமல்ல; துணைக் காரணமே" என்றும் திட்டவட்டமாகத் தெளிவாக்கினார்.

கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்பை உறுதி செய்து தீர்ப்பளித்த சென்னை உயர்மன்ற நீதிபதி வேங்கடாத்ரி அவர்கள் தமது தீர்ப்பில் இவ்வாறு அழகாகக் குறிப்பிட்டார்:

"கம்பன் ஒரு மகாகவி என்றும், 'இராமாயணம்' என்ற 'தமிழரின் குல சம்பத்தை'ப் பாடிப் பெரும் புகழ் கொண்டவன் என்றும் தென்னாட்டு மக்கள் நன்குணர்வார்கள். அவனது மேதைக்கு அவர்கள் அஞ்சலி செய்தனர். கவிச் சக்கரவர்த்தி கம்பனின் பூதவுடல் சமாதி செய்யப் பட்டுள்ள இடம் பிரசித்தமாகத் தெரிந்த நாள் முதல், மேற்படி 'கம்பன் வீட்டுச் செட்டியார்' குடும்பத்து முன்னோர்களின் அனுமதியோடு ஊர்ப் பொது மக்கள் இங்கு இக் கவிஞனுக்கு விழாவெடுத்தும் பூசையிட்டும் சிறப்பித்து வந்தனர். அதோடு நிற்காமல், இந்த இடத்துக்கே ஒரு புனிதத் தன்மையையும் மத சூழ்நிலையையும் உருவாக்க வேண்டி, மேற்படி 'கம்பன் சமாதி'க்கருகில், (தமிழ் நாட்டு மரபுப்படி) விநாயகர், லிங்கம் முதலான மூர்த்தங்களை நிறுவி வழிபாடு செய்ய ஆரம்பித்தார்கள் என்பதே உண்மை....." சர்க்கார் தரப்பில் வாதிடுகையில் 'மேற் சொல்லப்பட்ட சிலா ரூபங்கள் — இந்த இடத்தைக் கோவிலாகவே எண்ணத் தூண்டுகின்றன என்றும், அவற்றை வழிபடவே மக்கள் திரண்டு வருகிறார்கள்' என்றும் கூறப்பட்டதை நீதிபதி ஏற்க மறுத்து மேலும் தொடர்ந்து கூறினார்.

".....ஏதோ ஒரு விநாயகர் சிலையும், லிங்கம் முதலியனவும் இருப்பதை மட்டுமே வைத்துக் கொண்டு 'கம்பன் சமாதி'யைக் 'கோவில்' என்று கொள்வது முறையாகாது. அதோடு கவிஞனின் பூதவுடல் புதைக்கப்பட்டுச் சமாதியாகத் திகழும் பூமி, "கம்பன் வீட்டார்" என்று அழைக்கப்படும் திரு ஏவி. ஏ.ஆர். இராமநாதன் செட்டியார் அவர்களுக்கும் அவரது முன்னோர்களுக்குமே சொந்தமானதாகும். மேலும் இந்தச் சமாதிக்குப் பொது மக்களிடம் இருந்து காணிக்கையோ, பொருளோ அல்லது எவ்விதமான சொத்தோ பெறப்படவில்லை யென்பதனால், 'அறநிலையப் பாதுகாப்புக் குழுவினருக்கு' இதில் பாத்தியதை கொண்டாட இடமில்லை யென்பதோடு, மேற்படி சமாதியின் நிர்வாகத்தில் தலையிடவோ, சட்டமியற்றவோ, அல்லது அறநிலையச் சட்டத்தின் கீழ்ப் பணம் வசூலிக்கவோ அதிகாரம் கிடையாது — இது அவர்கள் ஆட்சி வரம்புக்கு அப்பாற்பட்டது" என்று தீர்ப்பு வழங்கினாரோ, கம்பன் சமாதி பிழைத்ததோ!

# பவழத்தீவு

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ரமணி.

12

ஈட்டிகள் விரட்ட ஓடிய
கந்தனும் ஆனந்தனும்
குழிக்குள் விழுகின்ற
னர்.




















ஆனால் ஒரு வீரன் வீசிய குறுந்தடி சேனாபதியை நிலைகுலைய வைக்க, படகோட்டிகளைக் கைதியாக்கித் தோணிப் படகையும் கொண்டு போய் விடுகின்றனர்....







அதே சமயத்தில் இங்கே...










பச்சிலைச் சாற்றினால் எழுதிய செய்தித் துணியை அனிலின் முதுகில் கட்டி..
இதனிடம் அது செய்ய வேண்டியதைக் கூறியிருக்கிறேன். ஆனந்தா!


ம்...ம்...சளைக்காதே! மேலே...மேலே..ம்..


இவர்களால் முடியாததை அனில் சாதித்து விட்டது.


ஆனந்தா, அதோ அது மேலே போய் விட்டது. எப்படியும் சேதுபதியை அழைத்து வந்து விடும்.




பூனை சீறிற்று. அனி
வெளியே வர முடியாமல் தவித்தது.


ஆனால் துள்ளி-ஓடும் அனில், ஒரு காட்டுக் கடுவன் பூனையின் கண்களில் பட்டு விடுகிறது.




தொடரும்.

# மெல்லிளம் சருமத்திற்குப் போஷாக்கு அளிக்க

# மெரோலின்

சுகாதார டியோடரண்ட் டாய்லட் சோப்

பூரண சருமப் பாதுகாப்பு இப்பொழுது கைக்கு எட்டியுள்ளது. சுத்தம் செய்வது தவிர, மெரோலின் உடல் நாற்றங்களை நீக்குகிறது. சரும ஆரோக்கியத்தைப் பூர்த்தி செய்கிறது. அழகு மிளிரச் செய்கிறது. அதன் மருந்து சக்தியும் நாற்றம் போகும் சக்தியும் உடல் சுத்தத்துடன் ஆரோக்கியமும் அளிக்கின்றன.

SNP-M-223




தயாரிப்பு

வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ்

கள்ளிக்கோட்டை

ஆனாலுமென்ன? ஸரளா முதன் முதலில்
அணிந்தபோதிருந்த அதே புதுக் கருக்கு...
அதே முறுக்கு ... அதே வர்ண எழில்!
பினிக்ஸ் வாயில் என்றால் கேட்கவும் வேண்டுமா?
காலமெல்லாம் உழைக்கும், கலப்பற்ற, மென்மையான
வாயில்களைத் தயாரிக்கிறது பினிக்ஸ்.
வியக்கத்தக்க வகைவகையான பிரின்டுகள்...
அழியாத வர்ணங்கள்...அருமையான அமைப்புக்கள்...
இஷ்டத்திற்குத் தேர்ந்தெடுக்கலாம். சுருங்கவும்
சுருங்காது. விலையும் சிக்கனமானது. ரூ. 2-10 லிருந்து
ரூ. 2-18 வரையில் உள்ளது. குடும்பத்திலுள்ளோர்
அனைவருக்குமே தகுந்த பினிக்ஸ் பாப்ளின்கள்
வேறு உண்டு.

# இந்த வாயில் புடவை 27 தடவைகள் சலவை செய்யப்பட்டுள்ளது!




RPT-3

# திருமூலர் தவமொழி

ராஜாஜி சோமு

## 50

பரம்பொருளின் தன்மையைப் பாடுகிறார் திருமூலர். நாஸ்திகர்களுக்கு ஈசுவரன் இலன், ஆஸ்திகர்களுக்கு அவன் உளன். வழிபடுகிறவனுடைய நெஞ்சம் உருகினால் அவனைக் காண முடியும்.

**இல்லனும் அல்லன்**
**உளன்அல்லன் எம்இறை**

[எம் இறை—எம்பெருமான். இல்லனும் அல்லன்—நாம் காணாவிடினும், அல்லது இல்லை என்று மறுத்துச் சொன்னாலும், அவன் இல்லாதவன் ஆகமாட்டான். உளன் அல்லன்—பக்தியும் ஞானமும் இல்லாதவர்களுக்கு அவன் இல்லாதவனே ஆவான்.]

'உளன்' என்று நாம் சொல்லும்படியான தரிசனம் பெறவில்லை. ஆனபடியால் 'உளன்' அல்லன். ஆனால், நாம் காணாவிடினும் அவன் இல்லாதவன் ஆகமாட்டான்; பரம்பொருளின் உண்மை மாறாது. ஆனபடியால் 'இலன்' அல்லன்!

அடுத்தபடி, தரிசனம் பெறும் மார்க்கம் சொல்லுகிறார்:

**கல்லது நெஞ்சம்**
**பிளந்திடும் காட்சியன்**

[கல்லது நெஞ்சம்—கல்லால் ஆனது போன்ற நம் நெஞ்சத்தை. பிளந்திடும் காட்சியன்—பிளந்திட்டால் அங்கே தோன்றக் கூடியவன்.]

அவன் அருள் இருந்தால், மறைக்கின்ற நம் கல் நெஞ்சத்தைப் பிளந்து தரிசனம் தருவான். அவன் அருளே காட்சிக்குக் காரணம். எது காரணம், எது பயன் என்பதை அழுத்தமாக விளக்குவதற்காகப் 'பிளந்திடும் காட்சியன்' என்கிறார்.

**தொல்லையன் தூயன்**
**துளக்கிலன் தூய்மணி**

[தொல்லையன்—ஆதிமூலப் பரம்பொருள். தூயன் — பாசமலங்கள் இல்லாதவன். துளக்கிலன் — மாறுபாடு இல்லாமல் எப்போதும் நிலையாகநிற்கும் தன்மையன்; அச்சுதன். தூய் மணி — மாசில்லாத இரத்தின மணி.]

**சொல்லரும் சோதி**
**தொடர்ந்துநின் றானே**

[சொல்லரும் சோதி—வர்ணித்துச் சொல்ல முடியாத ஜோதி வடிவானவன். தொடர்ந்து நின்றானே—அருள் தருவதற்காகவே உயிர்களை விடாமல் தொடர்ந்து நிற்கிறான்.]

**இல்லனும் அல்லன்**
**உளன்அல்லன் எம்இறை**
**கல்லது நெஞ்சம்**
**பிளந்திடும் காட்சியன்**
**தொல்லையன் தூயன்**
**துளக்கிலன் தூய்மணி**
**சொல்லரும் சோதி**
**தொடர்ந்துநின் றானே!**

அளவில்லாத ஆற்றலும், குறைவில்லாத நிறைவும் கொண்ட எம்பெருமான் யாவர்க்கும் மேம்பட்ட பெருமையை உடையவன் என்றாலும், இந்த அற்புதமான மனித சரீரத்

தக்குள்ளே கலந்து நிற்கிறான் என்பதைப் பாடுகிறார் சித்தர்.

ஏனோர் பெருமையன்
ஆகிலும் எம்இறை

[ஏனோர் பெருமையன் ஆகிலும்— எப்படிப்பட்ட பெரியவர்களுக்கும் பெரியவனாக நிற்கிறவன் என்றாலும்.]

ஊனே சிறுமையுள்
உட்கலந்து அங்குளன்

[ஊனே சிறுமையுள் — சிறுமையாகிய ஊனுக்குள், அதாவது இந்த அற்ப உடம்பிலும். உட்கலந்து—உள் புகுந்து கொண்டு. அங்குளன்-உள்ளத்திற்குள் நிற்கிறான்.]

வானோர் அறியும்
அளவல்லன் மாதேவன்

[மாதேவன்—மகாதேவன்; தனிப் பெருங் கடவுள். வானோர்—தேவர்கள். அறியும் அளவல்லன் — அறிவினால் அறிந்து அறுதியிட்டுவிடக் கூடியவனில்லை.]

தானே அறியும்
தவத்தின் அளவே

[தானே—அவரவர் தமது முயற்சியினாலேயே.]

அவரவர் தங்கள் தங்கள் தவத்தின் அளவுக்குத் தக்கவாறு அவனை அறியலாகும். தவத்தின் அளவே அவனுடைய தரிசனமும்.

ஏனோர் பெருமையன்
ஆகிலும் எம்இறை
ஊனே சிறுமையுள்
உட்கலந் தங்குளன்
வானோர் அறியும்
அளவல்லன் மாதேவன்
தானே அறியும்
தவத்தின் அளவே!

# வீட்டு நபரும் விருந்தினரே!

'சபாஷ், நல்ல சாப்பாடு,' என்று குடும்பத்தினர் — விருந்தினரைப்போல்-மெச்சும் வகையில் சமையல்! காரணம் ... காமதேனு வனஸ்பதி! சாஸ்த்ரீய முறையில், கைபடாமல் தயாரிக்கப் படுவது காமதேனு வனஸ்பதி. வைடமின் 'A', 'D' கலக்கப்பட்டது. சக்தியை ஊட்டும் உன்னத உணவுப்பொருள். வாங்கிச் சமைத்துப் பாருங்கள்!

இல்லாள் கைகண்ட
இன்பச் சமையல் சாதனம்

## காமதேனு
## வனஸ்பதி!




மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்

மேட்டூர் அணை R.S. சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

MC-956

# கூந்தலை நன்றாக வாரி முடிவதின் வனப்பு

கூந்தலை வழவழப்பாகவும், பொலிவுடனும் விளங்கச் செய்யும்
**ஸ்வஸ்திக் பெர்ப்யூம்டு காஸ்டர் ஆயிலைத் தடவி**
வாரினால் உங்கள் கூந்தல் அழகாகத் தோற்றமளிக்கும்.






**ஸ்வஸ்திக் ஹேயர் ஸ்டைல் "அலங்கார்"**

**ஸ்வஸ்திக்**
**ஆயில் மில்ஸ்**
**லிமிடெட்**
**பம்பாய்.**

Shilpi S.O.M. 16-A TAM.




## கணேச பஞ்சரத்தினம்

எந்த நற்காரியங்களையும் விநாயகரின் அருளை முன்னிட்டுத் தொடங்குவது நம் நாட்டுப் பழக்கம். ஆதிசங்கரர் இடையூறுகளை ஒழிக்கும் கணேசருக்குப் 'பஞ்சரத்தினம்'— என்னும் பாமாலை சூட்டிப் பூசித்துள்ளார். அந்தக் 'கணேச பஞ்சரத்தின'த்தை நம் தமிழ் எழுத்துக்களோடு மிக நெருங்கிய தொடர்பு கொண்ட கிரந்த லிபியில், இலங்கையைச் சேர்ந்த வியாகரண சிரோமணி திரு பூ. தியாகராஜ சர்மா பதவுரையுடன் நல்ல முறையில் அளித்துள்ளார்கள். கடல் கடந்த நாடுகளுக்கெல்லாம் எழுந்தருளியிருக்கும் கணேசப் பெருமானது பக்தர்களுக்கு இந்த நூல் பெரிதும் பயன்படும்.

வெளியிட்டோர்: திரு. இ. கு. பூர்ணாநந்தேசுவர குருக்கள், கந்தசாமி கோவில், வில்லூன்றி, திரிகோணமலை, இலங்கை. விலை 20 சதம்.

## சந்திரகுப்த சக்ரவர்த்தி சரித்திரம்

'ராம ராஜ்யம்', 'தர்ம ராஜ்யம்' என்றெல்லாம் கவிகள் பாடி வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். அத்தகைய லட்சிய ஆட்சி முறை எங்குமே நடைமுறையில் என்றுமே இருந்திருக்காது என்று நம்மில் பலர் பேசக் கேட்கிறோம்.

ஆனால்.....?

''அயல்நாட்டவர் சொல்லுகிற விவரங்களிலிருந்தும் சந்திரகுப்தன் அரசாட்சியானது உலகத்தின் மகா முகூர்த்தங்களில் ஒன்றாக இருந்திருக்க வேண்டும் என்று ஏற்படுகிறது. ஏனெனில் அவன் நாளில் ஜனங்கள் சிறிதும் நாணயம் பிறழாமல் நடந்து வந்தார்கள். நாட்டில் பொய் என்பதே இல்லாமல் இருந்தது. நெடுந் தூரம் யாத்திரை போகும் காலத்தில் கூட ஜனங்கள் வீட்டைப் பூட்டி விட்டுப் போவதில்லை. இருந்தும் அவர்கள் திரும்பி வரும்போது பொருள்களெல்லாம் வைத்தது வைத்தபடியே இருக்குமாம்!''

இது ராமராஜ்யம், தர்ம ராஜ்யமில்லாமல் வேறு என்ன?

இப்படிப்பட்ட பேரரசனுக்குத் துணையாக இருந்தவர் சாணக்கியர்.

இவர்கள் இருவரைப் பற்றியும் மகரிஷி வ. வே. சு. ஐயர் அவர்கள் சரித்திரச் சான்றுகளுடன் உணர்ச்சி மிக்க நடையில் எழுதியிருக்கிறார்.

''வீரர்கள் சரித்திரம்தான் மனிதனுடைய அறிவுக்கு ஊன்றுதல்'' என்று ஐயர் அவர்கள் சொல்வது போல் இந்நூல் தமிழ் படிக்கத் தெரிந்தவர்கள் அனைவருக்கும் ஊன்றுதலாகவே விளங்கும்.

சாணக்கியருடைய ராஜதந்திரங்களை விளக்கும் ''முத்ரா ராக்ஷஸம்'' என்ற மிகக் கடினமான சிக்கல் நிறைந்த வடமொழி நாடகத்தை மிகத் தெளிவாகத் தமிழில் வசனமாக வ. வே. சு. ஐயர் வழங்கியிருப்பது தமிழர்களின் பேறு என்றே சொல்ல வேண்டும்.

பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை -18; விலை: 1-40.

## இதுவா நாகரிகம் ?

இளைஞர்கள் மேனாட்டு மோகத்தில் மூழ்கி, தீய பழக்க வழக்கங்களைப் பெரியோர்களுக்குத் தெரியாமல் ரகசியமாக மேற்கொண்டு கெட்டழியும் சமுதாயத்தை எள்ளி நகையாடிப் பரிகசிக்கிறது முதல் நாடகம்.

''இடிந்த சிவன் கோயில்'' என்ற தலைப்பில் வந்துள்ள இரண்டாவது நாடகம் கபட வேஷதாரிகளை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது.

இந்த இரு நாடகங்களை எழுதிய மைக்கேல் மதுசூதன தத்தர் நூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர். நவீன வங்க இலக்கியத்தின் தந்தை என்று போற்றப்படுகிறவர். வங்கக் கவிதைத் துறையில் பல காவியங்கள் எழுதிப் புதுமைகள் இயற்றியவர். இந்நாடகங்கள் அவருடைய மேதா விலாசத்துக்குச் சிறந்த சான்றுகள் என்று கருத முடியாவிட்டாலும் வங்க இலக்கியம் நூறு ஆண்டுகளுக்கு முன் எப்படி இருந்தது என்பதை உணர இப்புத்தகம் உதவி புரிகிறது. தமிழ் மொழிபெயர்ப்பு நெருடலில்லாமல் அமைந்திருக்கிறது.

மொழிபெயர்ப்பு: சந்திர சேகர சாஸ்திரி, பிரசுரம்: சாஹித்ய அக்காடெமியார், புது டில்லி-1; விற்பனை உரிமை: என். சி. பி. எச்., பிரைவேட் லிமிடெட், விலை: 1-50.

## சதாவதானி செய்குதம்பிப் பாவலர் நினைவு மலர்

செந்தமிழ் நாட்டில் எத்தனையோ நம்ப முடியாத அதிசயங்கள் நடைபெறும். வடலூர் வள்ளலாரின் திருவருட்பா, உண்மையில் அருட்பாவே அல்ல, 'மருட்பா' என்று ஒரு கண்டனம் தமிழகத்தில் தோன்றியது என்றால் நம்புவீர்களா? அப்படி ஒரு கிளர்ச்சியை எதிர்த்து, ''அருட்பா — அருட்பாவேதான்'' என்று வாதம் செய்து நிலைநாட்டிய பெருமை ஒரு முஸ்லிம் புலவருக்குக் கிடைத்தது என்றால் அது நம்பக்கூடியதாகவா இருக்கிறது? ஆம், அந்த நம்ப முடியாத அதிசயமும் நிகழவே செய்தது!

நாகர் கோவிலுக்கு அண்மையிலுள்ள கோட்டாறு செய்குதம்பிப் பாவலர் அந்தப் புகழைப் பெற்றுப் பெற்றிருக்கிறார்கள்.

ஏழை முஸ்லிம் குடும்பத்தில் தோன்றிய செய்குதம்பிப் பாவலர் அவர்கள் கல்வி பயிலக்கூட முடியாத பொருளாதார நிலையிலிருந்தார். ஆகவே, சிறு வயதிலேயே தறியில் வேலை செய்யத் தொடங்கினார். ஆனால் அவரது தமிழார்வம் கங்கு கரையின்றியிருந்ததால் ஓய்வு நேரங்களில் தமிழ்ப் புலவர் ஒருவரிடம் சென்று தமிழ் கற்று வந்தார். நாளடைவில் புலவர்களும் பாராட்டும் பெரும் புலவரானார். அப்படியே சதாவதானங்கள் செய்து தமிழுலகம் முழுதும் பெருமதிப்பையும் புகழையும் பெற்றார். காலஞ்சென்ற சேதுப் பிள்ளை, வையாபுரிப் பிள்ளை போன்றவர்கள் பாவலர் அவர்களிடம் சந்தேக விளக்கம் பெறப் போவார்கள் என்றால் அவர் எத்தகைய மகா பண்டிதர் என்பதனைப் புரிந்து கொள்ளலாம்.

இத்தகைய பெரியார் இறந்து இன்றைக்குப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆகின்றன! அவருக்கு ஒரு நினைவுமலர் இப்போது வெளியாகியிருக்கிறது. பேராசிரியர் திரு சி. சுப்பிரமணியன் அவர்களை ஆசிரியராகக் கொண்ட இந்நினைவு மலரில் திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரம் போன்ற பல அறிஞர்களும், பாவலர் அவர்களுடன் நெருங்கிப் பழகியவர்களும் பல சுவை மிக்க கட்டுரைகளும் கவிதைகளும் வழங்கி மலரை மணம் கமழச் செய்திருக்கிறார்கள்.

வெளியீடு: சதாவதானப் பாவலர் மன்றம், இடலாக்குடி, நாகர் கோவில்; விலை ரூ. 2-00.

## உன்னையே நீ எண்ணிப் பார்

நகைச்சுவை ததும்பும் சுவையான நாடகம் இது. படிப்பதற்கும் நடிப்பதற்கும் எளிதாக அமைந்துள்ளது. திரு மா. ரா. நல்ல மேடை நாடகங்கள் பல எழுதிப் பெயர் சம்பாதித்தவர். அந்தப் பெயருக்கும் பழுதில்லாமல் உருவாகியிருக்கிறது இந்நாடகம்.

மூன்று சகோதரர்கள் ஒரே பெண்ணைத் தனித்தனியாகக் காதலிப்பதும், அவர்களுடைய அன்னை அடையும் அதிர்ச்சியும், கடைசியில் அந்தப் பெண் மூவரில் ஒருவரைத் தேர்ந்தெடுக்கக் கையாளும் யுக்தியும் ரஸமாக இருக்கின்றன. கதையமைப்பில் புதுமையைக் காண்கிறோம்.

அமுத நிலையம் தேனாம்பேட்டை - 18; விலை: 30 காசு.

## கவியின் கதை

அகில உலகத்திலும் இலக்கியத் துறையில் இந்தியாவின் பெருமை உயர்ந்தது, கவியரசர் ரவீந்திரநாத டாகுர் நோபெல் பரிசு பெற்றபோது அவரது இலக்கியங்களைப் படிக்க வேண்டும் என்ற ஆவல் பலருக்கு எழுந்தது; அதோடு அவரது வாழ்க்கை வரலாற்றையும் தெரிந்துகொள்ள ஆர்வம் எழுந்தது. கவியரசர் பற்றிப் பல நூல்கள் வந்துள்ளன. இப்பொழுது தமிழிலே ரவீந்திரரின் கதை பற்றிச் சுருக்கமான நல்ல நூலொன்று வந்திருக்கிறது. தாம் வாழ்ந்திருந்த வீட்டை விற்று, தம் அருமை மனைவியின் நகைகளையெல்லாம் விற்று, சாந்திநிகேதனத்தில் அவர் தொடங்கிய வித்தியாலயம் இன்று விசுவ பாரதி என்னும் சர்வகலாசாலையாகப் பல்கிப் பெருகி வளர்ந்து கலைக் கோயிலாகக் காட்சியளிக்கிறது என்பதைப் படிக்கும்போது, வங்கக் கவி தாகூரின் சிறப்பைக் கண்டு நம் மனம் வியக்கிறது. எளிய தமிழிலே, இனிய நடையிலே இதை ஆக்கித் தந்திருப்பவர் திரு த. நா. சேனாபதி அவர்கள்.

பிரசுரம்: சாகித்திய அக்காதெமி, புது தில்லி, விலை: 50 காசு







என்றால் எதுவுமே செய்யமுடியவில்லை. வகுப்புநேரங்களில்கூட அடிக்கடி கோபம் வந்துகொண்டிருந்தது.

அனந்த் அதைக் கவனித்துவிட்டுச் சொன்னான். தினமும் இரண்டு வேளை <u>போர்ன்-வீடா</u> அருந்தினால், பழைய நிலை வந்துவிடும் என்று.







அவனுடைய டாக்டரும் அதையேதான் சொன்னாராம். நானும் அதைக் கடைப்பிடித்தேன். விரைவில் குணமடைந்தேன்.

இப்பொழுது பழைய சக்தி வந்தது மட்டுமல்ல—ஐம்பது பேர்கொண்ட வகுப்பையும் எளிதாக சமாளிக்க முடிகிறது.

எல்லாம் <u>போர்ன்-வீடா</u> தந்த சக்தி.




நான்
ஊக்கத்துடனும்,
உற்சாகத்துடனும்
என் வேலையைச்
செய்வதற்கு
சக்தியளித்தது



Cadbury's

# BOURN-VITA

சக்திக்கும் வலிமைக்கும்




## 12 தாமரையில் ஒரு முள்!

சீனிவாச மண்டபத்து இளைஞன் தனது வரலாற்றைத் தொடர்ந்து சொல்லிக் கொண்டு போனான்:

திவான்பகதூர் செந்தில்நாயகம் என்றால் யார் என்பது, திருநெல்வேலிக்காரர்களுக்கு நன்றாக அடையாளம் தெரியும். அதுபோலவே ஜமீந்தார் அனவரத புவன பதியையும் எல்லாரும் அறிவார்கள். இவர்கள் இருவரும் இந்த உலகத்திலிருந்து மறைந்து விட்ட மனிதர்கள். எனவே இந்தக் கதையின் நிகழ்ச்சிகள் நடந்து முப்பது ஆண்டுகளாவது ஆகியிருக்க வேண்டும் என்பதை நானும் லாலாவும் ஊகித்துக் கொண்டோம். இந்த ஊகத்துக்கு அனுசரணையாகவே கதையின் மற்ற நிகழ்ச்சிகளும் இருந்தன. முக்கியமாக முப்பது முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு திருநெல்வேலி மாவட்டத்தில் நடமாடி வந்த ஜம்புலிங்கம், காசி என்ற இரண்டு கொள்ளைக்காரர்களையும் பற்றி நானும் லாலாவும் நிறையக் கேள்விப் பட்டிருந்தோம். இந்தக் கதையில் தோன்றிய வேலுலிங்கமும் கடலையாண்டியும் அந்தப் பழைய கொள்ளைக்காரர்களின் வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாகவே இருக்க வேண்டும் என்பதையும் எங்களால் ஊகிக்க முடிந்தது. என்றாலும் சீனிவாச மண்டபத்து இளைஞன் கூறிய இந்தக் கதையிலே, முக்கியமான பாத்திரங்களாக வருகிற வில்வநாதனையும் தாமரைச் செல்வியையும் பற்றி என் மனத்தில் அடிப்படையான சில கேள்விகள் எழுந்தன!

முப்பது நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு நடந்த ஒரு நிகழ்ச்சியில், வில்வநாதன் என்னும் ஒரு வாலிபன் தாமரைச் செல்வி என்ற ஒரு ஜமீன்குமாரியைக் காதலிக்க வேண்டும் என்றால், அந்த வில்வநாதன் வேறு, எங்களுக்கு முன்னால் இருந்து கதையைச் சொல்லிக் கொண்டிருந்த இளைஞன் வேறு என்பதை நாங்கள் புரிந்து கொண்டோம்! ஜமீன் ஒழிப்புச் சட்டம் நடைமுறைக்கு வந்து இன்று பல ஆண்டுகள் கழிந்து விட்டன. என்றாலும் அந்த ஜமீன் குடும்பத்தைச் சேர்ந்த மீசைக்காரர் இந்தச் சீனிவாச மண்டபத்து இளைஞனை இப்பொழுது எதற்காக இப்படி வேவு பார்க்கிறார்? அவர் குறிப்பிட்ட கல்லூரி மாணவி நிச்சயம் இந்தக் கதையிலே வருகிற தாமரைச் செல்வியில்லை! அப்படியானால் அந்த மாணவி யார்? எங்கள் எதிரேயிருந்து கதை சொல்லுகிற இந்த இளைஞன் யார்? ஒளியநாதனாகிய வில்வநாதனுக்கும் இந்த வாலிபனுக்கும் என்ன சம்பந்தம்? அனவரத புவன பதிக்கும் இவனுக்கும் என்ன உறவு? இவனுடைய வாழ்வில் தாமரைச் செல்வியின் காதல் என்ன மாறுதல்களைச் செய்தது?

இவ்வாறு எண்ணியவனாக நான் அந்தச் சீனிவாச மண்டபத்து இளைஞனையே கூர்ந்து பார்த்தேன். என்னுடைய முகத்தில் துலங்கிய கேள்விக் குறிகளைப் புரிந்து கொண்டவன் போல அந்த இளைஞன் சொன்னான்:

''ஐயா! ஜமீன் ஆட்சி ஒழிந்து எல்லா மனிதர்களும் சரி சமானமாக வாழ்கிற காலம் இது! இந்தக் காலத்து இளைஞனாகிய எனக்கும், நான் கூறுகிற காதலர்களுக்கும் என்ன சம்பந்தம் என்று திகைக்கிறீர்கள் நீங்கள்! அப்படித்தானே? தயவுசெய்து இந்தக் காதல் வரலாற்றை முழுதும் கேட்டு விடுங்கள். அதன் பிறகுதான் நான் யார் என்பதும், என்னுடைய அன்புக்கு உரிய அந்தக் கல்லூரி மாணவி யார் என்பதும் உங்களுக்குப் புரியும். எங்கள் இருவருடைய காதலுக்கும் அடிப்படையாக அமைந்த அந்த ஒரு மகத்தான காதலைத்தான் உங்களுக்கு இப்பொழுது விளக்கிச் சொல்லுகிறேன்! உண்மையில் தாமரைச் செல்விக்கு வில்வநாதனிடம் காதல் ஏற்படவில்லையென்றால், இத்தனை விபரீதங்களும் நேர்ந்திராது. என் துயரங்களும் என்னுடைய முகத்தை அப்படியே சித்திரிக்கிற அந்த ஓவியமடலும், மீசைக்காரரின் சூழ்ச்சியும், இந்த ஆற்று மணலிலே இப்படி மறைந்து மறைந்து என்னை அவர் உளவு பார்க்க வேண்டிய அவசியமும் — எதுவுமே நேர்ந்திராது!''

இவ்வாறு சொன்னான் அந்த இளைஞன்! நான் கேட்டேன்:

''தம்பி! ரிஷியசிருங்கரின் கதையை ஓவியமாக வரைய ஆரம்பித்த தாமரைச் செல்வி, அந்தச் சித்திரத்தை வரைய முடியாமல் வில்வநாதனிடம் வந்து தடுமாற்றத்தோடு பேசினாளே, அந்த நிகழ்ச்சிதான் பிற்காலத்து விபரீதங்களுக்கெல்லாம் அடிப்படையான காரணமாக அமைந்ததோ?''

இவ்வாறு நான் கேட்டதும் மண்டபத்து இளைஞன் மறுமொழி பேசவில்லை. புன்முறுவல் செய்தான். அந்தப் புன்முறுவலில் துயரமும் வேதனையும் ஓடின. சற்று நேரம் கழித்து அவன் பேச ஆரம்பித்தான். காதல் என்ற நுட்பமான இதய அனுபவத்தின் தன்மைகளை விமரிசனம் செய்து கொண்டே, சீனிவாச மண்டபத்து வாலிபன் தாமரைச் செல்வியின் காதலைப் பற்றித் தொடர்ந்து சொல்லத் தொடங்கினான்:

ஃ ஃ ஃ

செல்வியின் காதல் மொழிகளைக் கேட்டதும், வில்வநாதனுடைய உள்ளத்தில் ஒரு திகைப்பு ஏற்பட்டது! அந்த




திகைப்பிலிருந்து அவன் விடுபட்டுச் சுய நினைவுக்கு வருவதற்குள், மாடிப் படிகளில் 'விறுவிறு' என்று இறங்கி மறைந்து விட்டாள் அவள்! வில்வநாதனுக்கு உடம்பெல்லாம் படபடத்தது!

'ஆசிரியரே என்னை மன்னித்து விடுங்கள்! என்னால் ஒன்றுமே பேசமுடியவில்லை. உங்களுக்கு என்னுடைய குழப்பங்களைப் புரிந்து கொள்ள முடியாது. நீங்கள், நீங்கள் ஒரு முனிகுமாரர்! நீங்கள், நீங்கள் ரிஷியசிருங்கர்!''

இப்படியல்லவா சொன்னாள் செல்வி! வில்வநாதனுக்கு அந்த வார்த்தை ஒவ்வொன்றும் ஓர் அதிர்ச்சியைக் கொடுத்தது!

''காதல்'' — அந்த வார்த்தையைப் பற்றி உலக மகா காவியங்கள் எல்லாம் பாடுகின்றன. அதனுடைய தெய்வீக நிலை, அதனுடைய விரிந்து பரந்த வியாபகம், மனித வாழ்விலே அந்த உணர்ச்சி புகுந்து செய்கிற அருஞ் சாதனைகள், அதனால் ஏற்படுகிற விபரீதங்கள், அதனால் நேர்ந்துள்ள பெரும் போர்கள், அரச நாடுகளின் தோற்றம், அவற்றின் வீழ்ச்சி, மனிதர்களுடைய உயர்வு, அவர்களுடைய நாசம்; மக்களை அமரர்களாக உயர்த்திய காதல் அனுபவங்கள், மனிதர்களை மிருகங்களாக வீழ்த்திய விபரீத நிகழ்ச்சிகள் — இப்படி நூறுநூறு எண்ணங்கள் அந்தச் சித்திர இளைஞனுடைய உள்ளத்தில் சுழன்று சுழன்று வட்டம் சுற்றின!

தாமரைச் செல்வி அந்த வார்த்தைகளைச் சொன்ன போது அவளுடைய முகத்தில் எத்தனை மின்னல்கள் துவண்டன! அவளுடைய உடம்பெல்லாம் எப்படிப் படபடத்தது! அவளுடைய முகம் எப்படி வெளிறிப் போயிற்று! அவளுடைய கண்களிலே எத்தனை வேகத்தோடு கண்ணீர் பாய்ந்துவந்தது!

வில்வநாதனுடைய முன்னிலையிலிருந்து ஒரு மின்னல் மின்னி மறைவது போல அந்த வார்த்தைகளைக்

கொட்டி விட்டு அங்கிருந்து ஓடி விட்டாள் செல்வி. ஆனால் அவளுடைய முகம் மறையவில்லை! அவள் நின்ற நிலை, அவன் அந்த வார்த்தைகளைச் சொன்ன போது தோன்றிய படபடப்பு, அவளுடைய முகத்தின் உருக்கமான தோற்றம், அத்தனையும் வில்வநாதனுடைய கண்முன்பு அப்படியே நின்றன!

'நான் முனிகுமாரனா? உண்மையிலேயே நான் முனிகுமாரன் தானா?' — இவ்வாறு எண்ணினான் வில்வநாதன்!

உண்மை; நான் ஒரு முனிகுமாரனைப் போல் இருக்க வேண்டும் என்று தான் என் தந்தை விரும்பினார். சந்தேகமில்லை. வாழ்வில் இதுவரை அப்படிப்பட்ட ஒரு தவச் சிறையிலே வைத்துத்தான் தன்னை வளர்த்தார் தந்தை. ஆனால் இப்பொழுது?

எந்த வினாடி தந்தை இந்த உலகிலிருந்து மறைந்தாரோ, எந்த வினாடி அவருடைய இலட்சியத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டதோ, எந்த வினாடி சிங்கம்புத்தூர் ஜமீந்தாருக்காக அவர் தமது இலட்சியத்தை மாற்றிக் கொண்டாரோ, அப்போதே தன்னுடைய "ஆசிரம"மும் மாறி விட்டதுபோலும்!

வில்வநாதனுடைய உள்ளம் குழம்பியது. அவனுடைய இதயத்தில் ஒருவிதமான அச்சம் படர்ந்தது. அவனுடைய நெஞ்சகத்தில் ஆழமான ஒரு மூலையிலிருந்து ஏதோ ஒரு விசித்திர வேதனை, இன்னதென்று அவனுக்கே புரியாத ஒரு நோவு, ஒரு வலி, ஒரு மாயக் குத்தல் அவனை உறுத்தியது!

உலகம் என்பது ஒரு காடு என்றாரே தந்தை! அது ஒரு செண்பகக் காடா? வாசனையும் அழகும் நிரம்பிய ஒரு நந்தவனமா இந்த உலகம்? கட்டுக்கொடி படர்ந்த கருவூர்க் காட்டுக்குள்ளே கொண்டு வந்து தன்னைத் தன்னந்தனியாக விட்டு விட்டுப் பிரிந்து சென்று விட்டாரா தனது தந்தை? ஐயோ, அந்த வனத்திலே நடக்கும் போது இப்பொழுது முள் தைத்து விட்டதா?

காலிலே முள் தைத்தால் 'சுருக்' கென்று வலிக்கும். இப்பொழுது தனது இதயத்தில் முள் தைத்து விட்டதா? ஏன் இப்படி ஒரு வேதனை, ஏன் தன் நெஞ்சத்தில் ஏதோ ஒன்று புதிதாகப் புகுந்து வலி தருகிறது?

ஆம்; முள் தைத்து விட்டது! காலிலே இல்லை! உலகம் என்ற வனத்திலே, இதயம் என்ற உணர்ச்சிக் கால்களைக் கொண்டு நடக்க ஆரம்பித்த இந்தத் தொடக்கத்திலேயே, முள் தைத்து விட்டது! செண்பக வனம் என்ற உணர்ச்சிக் காட்டுக்குள்ளே புதிதாகப் புகுந்த முதல் வினாடியிலேயே முள் தைத்து விட்டதா?

வில்வநாதனுக்கு இப்பொழுது நன்றாகப் புரிந்தது! தன்னுடைய தந்தை தன்னை ஏன் இதுவரை இத்தனை கண்டிப்போடு வளர்த்தார் என்பது வில்வநாதனுக்கு இப்பொழுது புலனாயிற்று!

ரிஷியசிருங்கர்? அந்தப் புனிதமான முனிகுமாரனுடைய வரலாற்றை நினைத்துப் பார்த்தான் வில்வநாதன்! ஆம்; அந்த முனிகுமாரனுடைய தந்தை அந்தத் தவ மைந்தனுக்கு எத்தகைய பரிசுத்தமான ஒரு தவச் சூழ்நிலையை வகுத்து, புண்ணியச் சிறையிலே பூட்டி வைத்து வளர்த்தார்! தாய்ப் பறவை இறகின் பலம் பூரணமாக வளராத, குஞ்சுப் பறவையைத் தன்னுடைய இறகுகளுக்கு இடையில் பொதிந்து கொண்டல்லவா வளர்க்கிறது! அப்படித்தானே விபாண்டகரும் தமது மகனை அத்தனை கண்ணும் கருத்துமாக வளர்த்தார்! ஆனாலும் விபரீதம் ஏப்படி நேர்ந்து விட்டது, அந்த முனிகுமாரனுடைய புண்ணிய வாழ்விலே!

ஐயோ, வாழ்க்கை என்பது இத்தனை பெரிய தவமா! கண்களை மூடித் தன்னந்தனியாக ஒரு காட்டிலே தவம் செய்வதை விட, மனிதர்கள் மத்தியிலே வாழ்வது இன்னும் அதிகக் கஷ்டமான ஒரு தவமா? துறவியாக மாறி இந்த உலக மாந்தர்களை மறந்து, ஏகாந்தமாக ஒரு காட்டிலே சென்று பயங்கர விலங்குகளுக்கு மத்தியில் வாழ்வதைவிட, மனிதர்களுக்கு மத்தியிலே வாழ்வது ஒரு கஷ்டமான வாழ்க்கையா? மரவுரி தரித்து, உணவுகளை வெறுத்து, தானும் தனது ஏகாந்தமும் என்று வாழ்வதை விட, உலக இன்பங்களுக்கு மத்தியிலே உல்லாசங்களை மேற்கொண்டு வசிப்பது இத்தனை பெரிய வேதனையா? யோசித்துப் பார்த்தால், கஷ்டமான வாழ்க்கை என்று நாம் நினைக்கிற கானக வாழ்க்கையை விட, உல்லாச வாழ்வு என்று நாம் கருதுகிற இந்த உலக வாழ்க்கையல்லவா பெரும் தொல்லையான வாழ்வாக இருக்கிறது!

இப்படி ஏதேதோ விசாரணைகளிலே வில்வநாதனுடைய மனம் சுழன்றது. அப்படிச் சுழல்கிற மனத்துக்கு முன்னால் தாமரைச் செல்வியின் முகம் மறுபடியும் வந்து நின்றது!

செல்வியின் முகம்! உதய காலத்தில் மலர்ந்த தாமரை வட்டம்! மொட்டாக நிற்கிற தாமரை விடியற் காலையிலே திடீரென்று மலர்ந்து நிற்கும் போது, எப்படி இருக்கும், அப்படிப்பட்ட மலர் முகம் அது!



தொழில் பிரமுகர் திரு ஜி. டி. பிர்லா அவர்களின் பேரனும், ஜாப்ரே – மானர்ஸ் ஸ்தாபனத்தின் தலைவர் திரு மகேஷ்வரி அவர்களின் புதல்வருமான திரு கமலேஷ் குமார் மகேஷ்வரிக்கும் சௌ. மாதுரிக்கும் சமீபத்தில் பம்பாயில் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. இந்தத் திருமண வைபவத்துக்கு விஜயம் செய்த பம்பாய் கவர்னர் ஸ்ரீபிரகாசா அவர்களையும், புதுமணத் தம்பதிகளையும், மணப் பெண்ணின் தந்தையார் திரு எம். தாபூரியாவையும் படத்தில் காணலாம்.

இயற்கையின் விந்தையை என்னவென்று சொல்வது! இருளில் இரவு முழுதும் மொட்டாக நிற்கிற அழகுப் பூவானது, சூரியனுடைய கதிர்கள் பட்டதும் எப்படி மலர்ந்து விடுகிறது! மனிதக் கரங்களால் அந்த மொட்டை மலரச் செய்ய முடியுமா? நாமாக முயன்று ஒரு தாமரை மொட்டின் கூம்பிய இதழ்களை மலர்த்த முடியுமா? முடியாது. செயற்கை முறையினால் தாமரை மொட்டை நாம் மலரச் செய்ய முடிகிறதில்லை! ஆனால் கிழக்கு வானத்தில் எழுந்து வருகிற அந்த மோகக் கதிரவனின் சுந்தரக் கதிர்கள், அவனுடைய ஒளிக் கரங்கள், அந்த மாயத்தை எப்படியோ செய்து விடுகின்றன! இந்த இயற்கை விந்தையின் ஆனந்த வனப்பை எப்படி வர்ணிப்பது! அப்படிப்பட்ட ஒரு மாய மலர்ச்சியில் அல்லவா மலர்ந்து நின்றாள் செல்வி. அவளுடைய அந்த முகத்தில் ஏன் இடீரென்று அத்தனை குழப்பம் படர்ந்தது! அந்தத் தாமரையிலும் ஒரு முள்ளா? அந்த அழகுத் தாமரையிலும் முள் குத்தி விட்டதா?

வில்வநாதன் தனது முதலாவது சந்திப்பை எண்ணிப் பார்த்தான். தான் சிங்கம்புத்தூர் மாளிகைக்கு வந்து சேர்ந்த முதல் நாளன்று தன்னைத் தமது மகளுக்கு அறிமுகப் படுத்தினார் அல்லவா ஜமீந்தார்? அப்போது செல்வியின் முகத்தில் மலர்ந்த உல்லாசத்தையும், அவளுடைய கண்களிலே விளையாடிய களிப்பையும், அவளுடைய பேச்சிலே பின்னி ஓடிய மகிழ்ச்சியையும், அத்தனை தோற்றங்களையும் நினைத்துப் பார்த்தான் வில்வநாதன்!

இன்பமும், மன மகிழ்ச்சியும் நிரம்பிப் பொங்கிய அந்த அற்புதமான முகத்தில் இப்பொழுது எத்தனை விபரீதம் கவிந்து விட்டது! இத்தனை குழப்பங்களையும் செய்தது எது? காதல்!

வில்வநாதனுடைய உள்ளத்தில் சுருக்கென்று துயரம் தைத்தது! ஆம்! சந்தேகமில்லை. உலகம் என்ற வனத்தில் முள் தைக்காமல் நடப்பது என்பது ஒரு கடுமையான தவந்தான்! அத் தவத்தைச் செய்யும்போது காலில் மட்டுந்தானு முள் தைத்து விட்டது! அந்த மென்மையான தாமரை மலரிலும் ஒரு முள்!

வில்வநாதன் நினைத்தான்: தன்னுடைய காலில் தைத்துள்ள முள்ளை எடுத்து விடலாம்! தந்தையின் ஞான உபதேசமே ஒரு 'முள் வாங்கியாக' உதவும்! தைத்த முள் உள் புகுந்து வேதனை செய்யாதவாறு அதைக் களைந்து விடலாம். அதை அப்படியே 'நெம்பி' எடுத்து விடலாம். ஆனால், செல்வியின் இதய முள்ளை எப்படி எடுப்பது? அந்த மெல்லிய உள்ளத்திலிருந்து இந்த முள்ளை வெளியே எடுத்தெறிவது எப்படி?

சிறு வயதிலிருந்தே ஓவியப் பயிற்சியில் பழகி ஊறிப் போனவன் வில்வநாதன். இந்த உலகத்தின் அழகுத் தோற்றங்களையெல்லாம் மற்றவர்கள் பார்க்கும் பார்வை வேறு, அவன் பார்க்கும் பார்வை வேறு. இன்ப நிலவைப் பொழிகிற பூரண சந்திரன், மேகங்களையும் ஒளியையும் கொண்டு கோடிக்கணக்கான சித்திரங்களை எழுதிக் காட்டுகிற

கி. ராஜேந்திரன் எழுதும்

# போர்முனை

எப்ரல் 15-வ கல்கி புத்தாண்டு மலரில் ஆரம்பம்





**பாட்டி:** பசங்களா உங்களைத்தான் நினைச்சேன். உங்களுக்கு நூறு வயசு!

**பசங்கள்:** உங்களுக்கு அவ்வளவு தாராள மனசு இல்லையே, பாட்டி! எல்லோருக்கும் சேர்ந்தா? இல்லே, தனித் தனியாகவா?

---

வானம், ஆயிரம் ஆயிரம் வர்ணங்களோடு மலர்கிற பூங்கொடிகள், இவற்றையெல்லாம் மற்ற மனிதர்கள் பார்க்கும் கண் வேறு. வில்வநாதனுடைய நோக்கு வேறு. ஓவியப் பார்வையிலே பழகிய அந்தக் கண்களுக்கு முன்னால், அழகு நிரம்பிய ஒரு நந்தவனமும், கொடிய மிருகங்கள் நிரம்பிய ஒரு பயங்கரமான காடும் — இரண்டுமே ஒரே மாதிரித்தான். இரண்டிலுமே வில்வநாதன் கண்டது அழகு. ஓவியக் கரு! ஆனால் இப்பொழுதோ?

உணர்ச்சியின் சாயல்களையும் இதயத்தின் பாங்குகளையும் முகத்திலே ஓடவிடுகிற மங்கையர்கள், அழகும் இளமையும் துன்னுகிற மனிதப் பூங்கொடிகள், வனப்பும் ஒளியும் பொங்கி நிற்கிற முகத் தாமரைகள், இங்கிதமும் இதய விலாசமும் பிரதிபலிக்கிற பெண் மலர்கள், எல்லாத் தோற்றங்களையும் அவன் ஒரு சித்திரக்காரனாக, ஒரு கலைஞனாகவே நின்று பார்த்திருக்கிறான். மற்றவர்களைவிட இன்னும் ஆழமாக, மற்ற மனிதர்களைவிட இன்னும் அதிகமாகவே பார்த்தான். நோக்கினான். ஆராய்ந்தான். தாமரைச் செல்வியை? அந்த ஜமீன் மாளிகையிலே அவளை முதன் முதலாகச் சந்தித்த போது, அப்பொழுதும் அவன் அவளைப் பார்த்த நோக்கு அப்படித்தான்! சிங்கம்புத்தூர் மாளிகை என்ற நந்தவனத்திலே, அனவரதபுவன பதி என்ற அன்புத் தடாகத்திலே மலர்ந்து நின்ற ஒரு தாமரை மலராகவே அவளைக் கண்டான் வில்வநாதன்! மலர்களையும் பூங்கொடிகளையும், இளம் மான்களையும், கதை சொல்லும் பச்சைக் கிளிகளையும், நடனம் புரியும் தோகை மயில்களையும் பார்ப்பது போல, ஒரு சித்திரக்காரனாகவே நின்று தாமரைச் செல்வியையும் பார்த்தான் வில்வநாதன்!

நீண்ட மூக்கு, பரந்த முகம், விளையாடும் கண்கள், இதயத்தில் பொங்கும் உணர்ச்சிகளை அப்படியே முகத்தில் வீசுகிற ஒரு பளிங்கு வதனம், எல்லாம் சித்திரத்துக்கு உரிய அழகுப் பொருள்களாகவே வில்வநாதனுடைய கண்களுக்குத் தோற்றம் தந்தன! இதுவரை அப்படி! ஆனால் இப்பொழுது?

''எனக்கு ரிஷிய சிருங்கரை வரைவது கஷ்டமாகவே இல்லை. என் கண் முன்னால் அவரை, முனி குமாரனை, நிறுத்திக் கொண்டு அப்படியே வரைந்து விட்டேன். ஆனால் மோகினியை வரைய ஆரம்பிக்கும் போது மனம் குழம்புகிறது. உள்ளத்தில் ஒரு வகையான அச்சம் உண்டாகிறது. எனக்கே என்னைப் பற்றி வெட்கமாக இருக்கிறது.''

இப்படிச் சொன்ன போது செல்வியின் முகத்தில் தோன்றிய குழப்பம், அவளுடைய கண்களிலே மறுகிய தாபம் அந்தக் காட்சியை நினைத்துப் பார்த்தான் வில்வநாதன். பரிசுத்தமான வானத்தில் திடீரென்று மேகங்கள் கவிந்து, 'பளிச், பளிச்' என்று மின்னல்கள் மின்னினால் எப்படி இருக்கும்! அப்படியல்லவா இருந்தது அந்த முகம்! தன்னை மோகினியாகவும், வில்வநாதனையே ரிஷியசிருங்கராகவும், வரைந்து பார்த்தாளா அவள்! அதனால்தான் இத்தனை விபரீதக் குழப்பமா! வில்வநாதனுக்குக் கண்கள் கலங்கின. இது நாள் வரை அந்த முகம் தாமரையாக நின்றது அந்த ஓவியனுடைய கண்களுக்கு முன்னால்! ஆனால் இப்பொழுது, அந்த முகம் தாமரையாக இல்லை. மலர் மறைந்தது. அந்த இடத்தில் முள் மட்டும் தெரிந்தது அவனுடைய கண்களுக்கு முன்னால்!

ஆனால் எத்தகைய முள் அது? வெறும் முள்ளுக்கு இத்தனை வேதனை ஏது? அது வெறும் முள் இல்லை! அப்படியானால் சித்திரங்களை மாட்டுவதற்காகச் சுவரிலே அடிக்கும் ஆணியா அது? என்ன பைத்தியக்கார எண்ணம்! இதயத்தில் ஆணி அடித்தால் எப்படி இருக்கும்! இப்படியா இருக்கும் அது! ஒடிந்து போகிற சிறு முள் கடினமான பாதத்தில் தைக்கும் போதே உடலெல்லாம் குலுக்கிப் போடுகிறது! அப்படியானால், இதயத்திலே கொண்டு ஆணியை அடித்

தால் எப்படி இருக்கும்? அதை எப்படித் தாங்க முடியும்? இப்பொழுது அப்படிப்பட்ட ஒரு வேதனையா தனக்கு ஏற்பட்டது? இல்லையே!

வில்வநாதனுடைய உள்ளத்தில் புதிய எண்ணங்கள் எழுந்தன. அவனுடைய சிந்தனையில் இப்பொழுது விசித்திரமான நினைவுகள் தோன்றின! அவனுடைய இதயத்தில், காதல் என்ற அனுபவத்தின் முதலாவது இதழ் மெதுவாக மலரத் தொடங்கியது!

வேதனைகளிலும் எத்தனை விதமான வேதனைகள்! நோவுகளிலேதான் எத்தனை விதம்! துன்பத்திலும் இப்படிப்பட்ட ஒரு துன்பமா! சித்திரம் வரைவதற்கு உபயோகிக்கிற வர்ணங்களிலே சிவப்பு, மஞ்சள், நீலம், பச்சை, கறுப்பு என்று அடிப்படையான சில வகைகள் உண்டு அல்லவா? அவற்றை விரல்விட்டு எண்ணி விடலாம்! ஆனால் வரைந்து முடித்த ஒரு சித்திரத்தில் உள்ள வர்ணங்களை எத்தனை என்று எப்படிக் கணக்கிட்டுச் சொல்வது! அந்த வர்ணச் சாயல்களை எண்ணிக்கையிலே எப்படிச் சொல்வது! சிவப்பில் எத்தனை விதம்! நீலத்தில் எத்தனை! மஞ்சளில் எத்தனை விதம்! பச்சையில் எத்தனை! கறுப்பிலே தான் எத்தனை எத்தனை சாயல்கள்! மனித மனத்தின் வேதனை உணர்ச்சிகளிலேயும் இப்படித்தானு என்று நினைத்துப் பார்த்தான் வில்வநாதன்!

ஆம்; இது ஒரு புதிய வேதனை. இது ஒரு புதிய துக்கம். இது ஒரு புதிய விதமான நோவு! இந்த வேதனையில், இந்தத் துக்கத்தில், இந்த நோவில் காண்கிற புதுமை என்ன?

'இன்பக் கொடு நெருப்பு' என்றும், 'இங்கித ஏக்கம்' என்றும், 'இனிய வேதனை' என்றும் காவியங்களிலும், கதைகளிலும் படித்திருக்கிறான் வில்வநாதன்! அப்படிப்பட்ட ஒரு இன்பமயமான வேதனையா அது!

இப்படி நினைத்துப் பார்த்ததும் உடம்பெல்லாம் சிலிர்த்தது வில்வநாதனுக்கு. தன்னுடைய தந்தையின் உருவம் கண் முன்னே வந்து நின்றது. கண்களை நன்றாகக் கசக்கி விட்டுக் கொண்டான். கைகளை உதறினான். இறகிலே ஒட்டியிருந்த வர்ணங்களை உதறித் துடைப்பது போல, மனத்தில் மூங்கி நின்ற மோக மயக்குகளையெல்லாம் அப்படியே ஓர் உதறல் உதறினான்.

இல்லை. இல்லை. என் வரையில் அந்த முகம் தாமரைதான். என் பார்வையில் அவள் ஒரு வனப்பின் வடிவம். என் கண்களுக்கு அவள் ஒரு நடமாடும் சித்திரம். நான் ஒரு சித்திரக்காரன். என்னுடைய இறகுக்கு உரிய அழகுக் காட்சியிலே இந்த முகமும் ஒன்று. அவ்வளவுதான்! எத்தனையோ ஆயிரம் எழில் வடிவங்களிலே இந்த மங்கையும் ஓர் எழில் வடிவம். இவளைச் சித்திரம் வரையலாம். ஓவியமாக எழுதி நிறுத்தலாம். ஆனால் அதற்கு மேல்? அதைத் தவிர? அது அல்லாமல்?

வில்வநாதன் சிதறிய தனது உள்ளத்தை ஒருமைப்படுத்தினான். கலைந்த தவத்தை மீண்டும் நிலைப்படுத்த முயன்றான். உடைந்த துண்டுகளை மறுபடியும் ஒன்று சேர்த்து ''ஒக்கிட'' முனைந்தான். அப்போது மறுபடியும் செல்வியின் முகம், அந்தக் குழம்பிய முகம், தாபம் படர்ந்த அந்த முகம், அது கண் முன் வந்து நின்றது. 'சரேல்' என்று முந்தானையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு ஓடிய அந்தக் காட்சி மீண்டும் தோன்றி நின்றது.

''நான் ஒரு சித்திரக்காரன், எனக்கு அந்த முகம் ஒரு அழகுப் பொருள். சித்திரத்துக்கு உரிய ஒரு சிற்பம். ஆனால் அவள்? அவளுடைய இதயம்? அவளுடைய கண்கள்? இந்த உலகமும், இதிலுள்ள வனப்புக்களும் அவளுடைய கண்களிலே எப்படித் தோற்றம்தருகின்றன?''

இப்படி நினைத்ததும் மறுபடியும் ஒரு மின்னல் துவண்டது வில்வநாதனின் இதயத்தில்!

''என் கண்களுக்குத் தாமரைச் செல்வி ஒரு நடமாடும் சிற்பம். எனது கலைக்கு உரிய காட்சிப் பொருள்! ஆனால் அவளுடைய கண்களுக்கு நான்?''

குனிந்து உட்கார்ந்தவாறு இப்படியெல்லாம் தீவிரமான யோசனைகளில் இது வரை மூங்கி மூழ்கிப் போய் விட்டிருந்த வில்வநாதன், இப்பொழுது தலையை நிமிர்த்தினானே இல்லையோ, அப்படியே மறுபடியும் அந்த மின்னல்! அவனுடைய இதயத்துக்குள்ளா? இல்லை! எதிரே கண் முன் நின்றது!

ஆம்; வாசற்படியிலே வந்து நின்று கொண்டிருந்தாள் தாமரைச் செல்வி! எத்தனை நேரமாக அவள் அங்கு நின்றாளோ, வில்வநாதனுக்குத் தெரியாது! வெளி உலகத்தின் நினைவே இல்லாமல் இது வரை மன உலகிலேயே நீந்திக் கொண்டிருந்த வில்வநாதன், அதிர்ச்சி அடைந்தவனைச் செல்வியைப் பார்த்தான்!

(தொடரும்)

# மில்லர் பாதிரியார்

இருபத்தைந்து வருடங்களுக்கு முன் வரையில், சென்னை கிறிஸ்துவக் கல்லூரி, ஹைகோர்ட்டுக்கு எதிரில், தம்புச் செட்டித் தெருக் கட்டடம் ஒன்றில் இயங்கி வந்தது. இடநெருக்கடி காரணமாகக் கல்லூரியை அங்கிருந்து தாம்பரத்துக்கு இயற்கை வனப்புக்கள் சூழ்ந்த புதிய கட்டடங்களுக்கு மாற்றினார்கள்.

கல்லூரி தாம்பரத்துக்குக் குடிபெயர்ந்து, சென்ற வாரத்துடன் இருபத்தைந்து ஆண்டுகள் முடிவடைவதால் வெள்ளி விழாக் கொண்டாடினார்கள். இந்த விழாவுக்கு, கிறிஸ்துவக் கல்லூரியின் பழைய மாணவரும், இந்திய உப ஜனாதிபதியுமான டாக்டர் திரு ராதாகிருஷ்ணன் அவர்கள் தலைமை வகித்தார். இதன் மூலம், திரு ராதாகிருஷ்ணன் தமக்கும் பெருமையைத் தேடிக் கொண்டார்; தாம் படித்த கல்லூரிக்கும் பெருமையைத் தேடித் தந்தார். இதைவிட, ஒரு கல்லூரியினால் ஒரு மாணவரும், ஒரு மாணவரால் ஒரு கல்லூரியும் அடையக்கூடிய பயன் வேறு என்ன இருக்க முடியும்? கிறிஸ்துவக் கல்லூரியையும் அதைச் சேர்ந்த பள்ளிகளையும் இன்று நாம் காணும் அளவுக்குச் சிறப்பாக வளர்த்த பெரியார் காலஞ்சென்ற கல்லூரித் தலைவர் திரு வில்லியம் மில்லர் பாதிரியார் அவர்களாகும்.

இந்நாட்டில் கல்வி வளர்ச்சிக்காகக் கிறிஸ்துவப் பாதிரிமார்கள் ஆற்றிய தொண்டுகள் கொஞ்ச நஞ்சமல்ல. ஏதோ சில பாதிரிமார்கள் மதமாற்ற நோக்கத்துடனேதான் இந் நாட்டில் சேவை செய்ய வந்தார்கள் என்று கூறுவது எவ்வளவு தவறு என்பதற்குத் திரு மில்லர் அவர்களின் சேவைகளே தகுந்த எடுத்துக்காட்டு ஆகும்.

இன்றைக்கு நூற்றி ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஐரோப்பிய நாடுகளிலிருந்து சில பாதிரியார்கள் இந்நாட்டுக்கு வந்து, கல்விப் பணிகள், மருத்துவப் பணி முதலியவைகளில் ஈடுபட்டு வந்தார்கள். 1837-ம் ஆண்டு சென்னையில் ஸ்காட்லாந்து நாட்டைச் சேர்ந்த ஆண்டர்ஸன் என்னும் பாதிரியாரும், இன்னும் சிலரும் சென்னை வந்து தம்புச் செட்டித் தெருவில் ஒரு பள்ளிக்கூடம் அமைத்தார்கள். அப்போது சென்னையில் இந்துக்கள் முஸ்லிம்கள் இவர்களுடைய பள்ளிக்கூடங்கள் சில இருந்து வராமல் இல்லை. திண்ணைக்குத் திண்ணை பள்ளிக்கூடங்கள் ஏராளமாக நடந்து வந்தன. சில பிரமுகர்களின் ஆதரவால் கல்லூரிகளும் அரசாங்கப் பள்ளிக்கூடங்களும் நடந்து வராமல் இல்லை. ஆனால் மேனாட்டு



முறையில் சரியான இட்டங்களுடன் முதன் முதலில் இந்த ஆண்டர்ஸன் பள்ளிக்கூடம்தான் சென்னையில் நிறுவப் பட்டதென்று கூறவேண்டும். திரு ஆண்டர்ஸன் தாம் அமைத்த பள்ளிக்குக் 'கிறிஸ்துவப் பள்ளிக்கூடம்' என்றே பெயர் வைத்தார். ஆண்டர்ஸனின் ஆரம்பப் பள்ளிக்கூடம் ஓர் உயர்தரப் பள்ளிக்கூடமாக வளர்ச்சி பெற இருபது ஆண்டுகள் ஆயிற்று. அது கல்லூரியாக மாறவேண்டிய பருவத்தை அடைந்த போதுதான் ஸ்காட்லாந்து நாட்டிலிருந்து இருபத்தைந்து வயது உடைய இளைஞர் பாதிரியார் ஒருவர் சென்னைக்கு 1862-ல் வந்து சேர்ந்தார். அவர்தான் திரு வில்லியம் மில்லர்.

திரு மில்லர் ஸ்காட்லாந்து நாட்டின் வட பகுதியில் 'தர்ஸோ' என்ற ஊரில் பிறந்தவர். இவருடைய தந்தை ஒரு பெரிய வர்த்தகர். அதோடு பல கப்பல்களைச் சொந்தமாகவே வைத்து வர்த்தகம் நடத்தி வந்தார். இவருடைய தாயாரும் தகப்பனாரும் கடவுள் பக்தி மிகுந்தவர்கள். பொது தர்மங்களுக்காகச் செலவிடுவதில் மில்லர் குடும்பத்தின் பெயரும் புகழும் பரவி யிருந்தன.

இந்தியாவில் இருந்து வரும் பாதிரிமார்கள் செய்து வந்த நற்பணிகளைப் பற்றி அடிக்கடி கேள்விப்பட்ட மகனுக்குத் தாமும் அவ்வாறு அந்நாட்டுக்குச் செல்ல வேண்டும் என்ற ஆர்வம் பிறந்தது. சிறுவனாக இருக்கும்போதே மில்லர் கல்வியில் சிறந்து விளங்கி வந்தார். ஸ்காட்லாந்து நாட்டின் சிறப்புக் கல்லூரியாக விளங்கும் 'அபர்டீன்' கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றுப் பிறகு பாதிரிமார்கள் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்தார். அங்கு ஐந்து ஆண்டுகள் பயின்ற பின், பாதிரியாராகச் சென்னைக்கு வந்து சேர்ந்தார். இங்கு அவர் வந்ததும், ஆண்டர்ஸன் கல்வி ஸ்தாபனங்களின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். அது முதல் கிறிஸ்துவக் கல்லூரியின் சரித்திரத்தில் புதிய அத்தியாயம் ஆரம்பமாயிற்று. மூன்றும் தரமாக விளங்கிவந்த அந்தக் கல்லூரியை முதல் தரமான கல்லூரியாக உயர்த்துவதில் திரு மில்லர் அவர்கள் பட்டபாடு கொஞ்சநஞ்சமல்ல.

ஒருபுறம் அரசாங்கத்தின் தொல்லைகள், மற்றொரு புறம் கிறிஸ்துவரல்லாத மக்கள் காட்டிய தயக்கம் இவற்றைச் சமாளிப்பதில் திரு மில்லர் தமது குண விசேஷங்களாலேயே வெற்றி பெற்றார் என்று கூறலாம்.

அந்நாளில் பாதிரிமார்கள் ஆரம்பித்த பள்ளிக்கூடங்களுக்குத் தகுந்த மாணவர்கள் கிடைப்பது மட்டுமல்ல தகுந்த ஆசிரியர்கள் கிடைப்பதுகூடக் கடினமாயிருந்து வந்தது. திரு மில்லர் அவர்கள் இந்த இடையூறுகளை யெல்லாம் தமது அன்பு உணர்ச்சியாலேயே சமாளித்து வெற்றி பெற்றார். தமக்கு நேரம் கிடைக்கும் போதெல்லாம் மாணவர்களின் வீடுகளுக்குச் சென்று அவர்களின் க்ஷேம லாபங்களை விசாரித்து உற்சாகப்படுத்துவது அவரிடம் காணப்பட்ட சிறப்பு இயல்பாக விளங்கி வந்தது. திரு மில்லர் அவர்கள் வகுப்புக்களில் போதிக்கும் முறையே பிரபலமாக இருந்து வந்தது. 'கருங்கச் சொல்லி விளங்க வைப்பதில்' அவர் நிகரற்று விளங்கி வந்தார் என்று கூறுவார்கள்.

கிறிஸ்துவ மத போதகராகப் பதவி வகித்த போதிலும் மில்லர் பாதிரியார், பிற மதத்தினரையும் அவர்களுடைய பழக்க வழக்கங்களையும் பெரிதும் மதித்தே வந்தார்.

''ஒரு கல்லூரியின் இலட்சியம், பட்டங்களை வழங்கி மாணவர்களை வெளியே அனுப்புவதோடு முடிவடைந்திடாது. வெளியே அனுப்பப்படும் இளைஞர்கள் நாட்டுக்குப் பயனுள்ள மக்களாக விளங்க வேண்டும்'' என்ற கொள்கையைத் தமது வாழ்நாள் முழுதும் திரு மில்லர் அவர்கள் எடுத்துரைத்து வந்திருக்கிறார். அதன்படி கிறிஸ்துவக் கல்லூரியும் அதைச் சேர்ந்த கல்விக் கூடங்களும் இயங்கிவரப் பாடுபட்டு வந்தார். அப்படி அவர் பாடுபட்டது வீணாகவில்லை. திரு ராதாகிருஷ்ணன், திரு லட்சுமணசுவாமி முதலியார் அவர்கள் மட்டுமல்ல, இன்னும் ஏராளமான சிறந்த மாணவர்களை மில்லரின் கல்விக் கூடங்கள் உருவாக்கி, நாட்டுக்கு அளித்திருக்கின்றன.

இலக்கியத் துறையில் திரு மில்லரின் மேதையை விளக்க வேண்டுமானால் ஷேக்ஸ்பியர் நாடகங்களுக்கு அவர் எழுதியுள்ள கருத்துரைகளைக் குறிப்பிட வேண்டும். இலக்கியத்துக்காக எடின்பரோ கலாசாலை அவருக்கு எல். எல். டி. பட்டம் அளித்தது. அப்போது இந்தியாவிலேயே எல். எல். டி. பட்டம் பெற்றிருந்தவர் திரு மில்லர் ஒருவர்தான்.

திரு மில்லர் அவர்களின் இலக்கிய ஆர்வத்தை வெளியிடக் கூடிய நிகழ்ச்சி ஒன்று நடந்தது. திரு மில்லரின் தாயார் இறந்த மறு தினம் இங்கிலாந்தின் புகழ் மிக்க கவி டென்னிஸன் மறைவானார். இதையொட்டி சென்னையில் உடனேயே டென்னிஸனுக்கு அனுதாபம் தெரிவிக்கக் கூட்டம் ஒன்று கல்லூரியில் நடந்தது. இந்தக் கூட்டத்தில் முதல் நாள்

தனது தாயார் இறந்திருந்தும் அந்தத் துக்கத்தை மறந்து, கவியின் மறைவுக்காகத் திரு மில்லர் கண்ணீர் விட்டுப் பேசினார் என்றால், அவருக்கு இலக்கியத்திலிருந்த ஆவலை ஊகிக்கலாம்.

திரு மில்லர் கல்விச் சேவையோடு இந்தியாவின் அரசியல் விடுதலைக்காகவும் பகிரங்கமாக அபிப்பிராயங்களை வெளியிட்டு வந்தார். கல்கத்தா நகரில் கூடிய காங்கிரஸ் மகாசபையின் சுயராஜ்யத் தீர்மானத்தை ஆதரித்துக் கிறிஸ்துவக் கல்லூரிப் பத்திரிகையில் ஒரு கட்டுரை வெளியாயிற்று. இதனால் அதிகாரவர்க்கம் திரு மில்லர் மீது சீற்றம் கொண்டதில் வியப்பில்லை.

சென்னை சர்வகலாசாலை வளர்ச்சிக்காக அவர் செய்திருக்கும் பணிகள் அனந்தம். இந்தச் சர்வகலாசாலையின் துணைவேந்தர் பதவியும் வகித்துவந்தார்.

கோடை காலத்தில் சென்னை அரசாங்கம் மலைவாசத்துக்குப் போவதை அந்நாளில் தீவிரமாக எதிர்த்து, ''இது அநியாயம். ஏழைகள் நாட்டில் இப்படி பிரிட்டிஷ் அதிகாரிகள் கொட்டமடிக்கக் கூடாது'' என்று திரு மில்லர் பாதிரியார் முழங்கினார். அவர் அப்படி வெறும் முழக்கம் செய்ததோடு நிற்கவில்லை. கோடை வாசத்துக்குச் சென்னை அரசாங்கமும், இதர அரசாங்கங்களும் போவதைத் தடுக்க வேண்டுமென்று கூறி, பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்கு மனுச் செய்து கொண்டார். அந்த மனு பார்லிமெண்டின் பிரபுக்கள் சபையில் விவாதிக்கப்பட்ட போது, சென்னையில் கவர்னர் பதவி வகித்த திரு நேப்பியர் பிரபு, மில்லர் பாதிரியார் கூறுவது முற்றிலும் நியாயமானதே என்று வாதித்தார். வாதித்து விட்டு, ''மில்லரைச் சாதாரணமாக நினைக்காதீர்கள். தமது வாழ் நாள் முழுமையும் இந்திய மக்களின் துன்பங்களைப் போக்குவதற்காகவும், அவர்களிடையே சேவை செய்வதற்காகவும், கடவுளின் மீது அளவற்ற பக்தி கொண்ட ஊழியரே திரு மில்லர்'' என்று பொருள்பட உரைத்தார்.

அந்த வாக்கியங்களைத் திரு மில்லரின் உருவச் சிலை மேடையில் செதுக்கி வைத்திருப்பதை நாம் இன்றும் காணலாம். திரு மில்லர் அவர்கள் நாற்பது ஆண்டுகள் வரை இங்கு பணியாற்றி விட்டுத் தமது தாயகம் திரும்பினார். அங்கு அவர் 1922-ல் காலமானார். அவர் இந்த நாட்டில் தமது நினைவாக விட்டுச் சென்றது, ஒன்று கவர்னர் நேப்பியரின் அழியாத வாக்கியங்கள்; மற்றொன்று, புகழோடு விளங்கும் கிறிஸ்துவக் கல்லூரியும் அதன் கிளைகளும்.

— கதிர்

நாடக மேடை

# பாசத்தின் பரிசு

அடிக்கடி பல புதிய நாடகங்களைத் தயாரித்து அரங்கேற்றிக் கலை உலகுக்கு அரிய சேவை செய்து வரும் டி.கே.எஸ். சகோதரர்கள் 4-3-62 அன்று ''பாசத்தின் பரிசு'' என்னும் புதிய சமூக நாடகத்தை அரங்கேற்றினார்கள். திருவல்லிக்கேணி, பார்த்தசாரதி சுவாமி சபாவின் ஆதரவில், புதிதாக அமைந்துள்ள அவர்களது கலையரங்கில் மேற்படி நாடகம் நடைபெற்றது.

மூத்தவன் பொறுப்பற்றவன்; இளையவன் நல்லவன் — மாமன் மகளான உமாவைக் காதலிக்கிறான். ஆனால் உமா பெரிய அத்தானைக் காதலிக்கிறாள்; இளையவன் மனம் முறிந்து நோய்வாய்ப் படுகிறான். மின்னல் மூத்தவனுடைய பார்வையைப் பறித்து விடுகிறது. இறக்கும் தருவாயில் அண்ணனுக்குத் தன் கண்களைக் கொடுக்கிறான் இளையவன்.

நாடகத்தில் புதிதாக எதுவும் இல்லை. என்றாலும், நடிகர்களின் திறமையினால் நாடகம் மிகச் சிறப்பாக இருந்தது.

மாமா பசுபதியாக வந்த வெங்கடாசலம் அமைதியாகவும், கௌரவமாகவும் நடித்து நாடகத்துக்குப் புகழ் தேடித் தந்து விட்டார். டி. கே. சண்முகம் பொறுப்பற்றவனாகத் தோன்றி மிகவும் பொறுப்பாக நடித்ததோடு பிற்பகுதியில் உணர்ச்சி மிகுதியில் உயர்ந்து நின்றார். டி. கே. பகவதி டாக்டராக வந்து மிகவும் இயல்பாகப் பேசி நன்றாக நடித்தார். உமாவின் பாகம் சற்றுச் சிரமமானது. அதை ஏற்ற ஹேமலதா சிரமப்படாமல் நல்ல பெயர் தட்டிக் கொண்டார். தன் உள்ளங் கவர்ந்தவனுக்காக அவன் செய்த பிழைகளைத் தான் ஏற்கும் கட்டங்களில் 'சபாஷ்' வாங்கி விட்டார். விதவைத் தாயாக நடித்த டி. என். சரஸ்வதி நாடகப் பாத்திரமாக இல்லை. தத்ரூபமான நடிப்பு.

ரகுவின் பாத்திரம் சந்திரனுக்கு மிகமிகப் பொருத்தமாயிருந்தது. உமாவை முழுமனதுடன் காதலித்த போதும், அவள் தன்னைக் காதலிக்கவில்லை என்பதை அறிந்து வேதனைப் பட்ட போதும் அவர் நடிப்பு ரசிகர்களின் பாராட்டைப் பெற்றது.

மளிகைக் கடையை மேடையில் தத்ரூபமாகச் சிருஷ்டித்திருந்தனர். கடையை விடப் பொருத்தமான கடைக்காரராகச் சிவதாணு தோன்றி ஜமாய்த்து விட்டார்! அவர் நாமமும், மூக்குக் கண்ணாடியும், அநாயாசமான பேச்சும் மறக்க முடியாதவை. கடையில் நடக்கும் வம்பளப்புக்கள்தான் நாடகம் தொடர்ந்து நடக்க உதவியாயிருந்தன.

நாடகத்தை இயற்றியவர் புகழ்பெற்ற தமிழ் எழுத்தாளர் ''பிலஹரி''. நாடக வசனமும் அழகாக அமைந்திருந்தது. புத்தனேரி ரா. சுப்பிரமணியம் இயற்றிய பாடல்களும், எம். கே. ஆத்மநாதனின் இசையமைப்பும் நாடகத்துக்குச் சுவையூட்டின.

— காந்தன்

# வாழ்க்கை எனும் விளையாட்டு

மலர்களுக்குக் கைகால் முளைத்தது போலக் குழந்தைகளெல்லாம் மகிழ்ச்சியுடன் ஆடிப் பாடிக் கொண்டிருந்தனர். அன்றைக்கு அந்தச் சங்கத்தில் குழந்தைகள் தினம். ஒரே ஆரவாரம், ஒரே குதூகலம். குழந்தைகள் வாழும்வாழ்வே வாழ்வு. துக்கம் வந்தால் வாய் விட்டு அழவும், சந்தோஷமானால் ஆனந்தமாய், ஆடவும் நம்மால் முடியுமா? உணர்ச்சிகளை மனத்தில் அழுத்தி அழுத்தி ஊமை வாழ்வு வாழ்கிறோம். மனசில் மகிழ்ச்சி யில்லாமல் முகத்தை மாத்திரம் மலர்ச்சியுடன் வைத்திருக்கும் வித்தையெல்லாம் குழந்தைகளுக்குத் தெரியுமா? வேர் அறுந்தால் இளங்கொடி வாடுவதைப் போல மனத்தில் துன்பமிருந்தால் அவர்களுக்கு



வாடிப் போகிறது. இப்போதுதான் பாருங்களேன். மனத்தில் குதூகலம் கொப்பளிக்க எல்லோரும் விளையாடுகின்றனர். ரங்க ராட்டினத்தில் சுற்றுகின்றனர்; கண் கட்டி விளையாடுகின்றனர்.

நான் எல்லாவற்றையும் ஒரு மூலையில் நின்று பார்த்துக் கொண்டிருந்தேன். வயசு ஆனதை மறந்து விட்டு அவர்களோடு கைகோத்து ஆட வேண்டுமென்ற நிறைவேற முடியாத ஆசையோடு நின்று கொண்டிருந்தேன்.

அந்தக் கூட்டத்திலே ஒரு சின்னப் பையன். குறுகுறு வென்றிருந்தான். பளிச்சென்று எல்லோர் நடுவிலும் தெரியக் கூடிய முகம். எல்லா விளையாட்டிலும் முதலாவதாக நின்றான். அவனை ஒரு முறை கவனித்த பிறகு நான் அவன் விளையாட்டையே பார்த்துக் கொண்டிருந்தேன். சிறிது நேரம் கழித்து அவன் நான் நின்று கொண்டிருந்த இடத்துக்கு வந்தான்.

நான் அவனைப் பார்த்துச் சிரித்தேன்.

இங்கே வா என்று அவனைக் கையால் அழைத்தேன்.

''உன் பெயர் என்ன?''

''கண்ணன்....''

''கண்ணு....''

அவனை என்னருகில் இழுத்துக்கொண்டேன். உண்மையில் அவனோடு நெடு நாட்கள் பழகியது போல் மனத்தினுள்ளே ஒரு நெருக்கம்.

''கண்ணு! நீ எந்த வகுப்புப் படிக்கிறாய்...?''

''இரண்டாவது....விடுங்கள், நான் போக வேண்டும். என் அம்மா என்னைக் கூப்பிடுகிறாள்.''

அப்போது எங்களை நோக்கி ஓர் அம்மாள் வந்தாள்.

''கண்ணு! அடுத்தபடி வேஷப் போட்டி நடக்கப் போகிறது. நான் சொன்னதெல்லாம் நினைவிருக்கிறதா?'' என்று சொல்லிக் கொண்டே அந்த அம்மாள் தான் கொண்டு வந்திருந்த பையைத் திறந்தாள்; அதிலிருந்து அழுக்கடைந்த கிழிசல் சட்டையையும், கால் சட்டையையும் ஒரு பழைய தொப்பியையும் எடுத்தாள். அந்த உடைகளைப்பார்க்கவே அருவருப்பாக இருந்தது.

நான் அந்த அம்மாளை வியப்புடன் பார்த்தேன். என்னைப் புரிந்து கொண்டவள் போல அந்த அம்மாள் ''இதெல்லாம் அவனுக்கு வேஷம் போடுவதற்காகக் கொண்டு வந்தேன்'' என்று சிரித்துக் கொண்டே சொன்னாள். கண்ணன் முகத்தைப் பார்த்தேன். அவனுக்கு இதில் சிறிதும் விருப்பமில்லை போல் இருந்தது. இதுவரை மகிழ்ச்சியுடன், துறுதுறுப்புடன் இருந்த முகம் சோர்ந்து போயிருந்தது. நான் பரிவுடன் அவனைப் பார்த்தவுடன் என்னுடன் வந்து ஒட்டிக்கொண்டான்.

''ஏன் அம்மா! அவனுக்கு விருப்பமில்லை போலிருக்கிறது. ஏன் அவனைக் கட்டாயப் படுத்துகிறீர்கள்?'' என்று துணிவுடன் கேட்டு விட்டேன்.

''விருப்பம் இல்லாமல் இல்லை. தவிர நான் நேற்று முதல் இந்த வேஷத்துக்காகப் பழக்கி யிருக்கிறேன். போன வருஷமே இந்தப் பரிசைத் தவற விட்டு விட்டான். எப்படியாவது இந்த முறை...''

அந்த அம்மாளுக்கு இருந்த உற்சாகத்தில் அவனே அந்த உடைகளை





"என்ன எல்லாப் போட்டோவிலும் கை கூப்பியபடி இருக்கு ?"

"எங்கள் வீட்டில் எல்லோரும் பரம்பரையாகத் தேர்தலில் நின்றவர்கள்."

---

அணிந்து கொண்டு போட்டிக்குக் கிளம்பி விடுவான் போல் இருந்தது. அவள் உடனே அவனுக்கு அந்த உடைகளை அணிவித்தாள். எனக்கு அதைப் பார்த்தவுடன் 'திக்'கென்றது. முகத்தில் சோர்வும் கண்களில் ஏக்கமும் நிரம்பக் கிழிசல் உடையணிந்து பைத்தியம் போல...

ஆமாம், அவன் 'பைத்தியமா'ய் ஒரு கணத்தில் வேஷம் போட்டுக் கொண்டு விட்டான். எனக்கு அவனைக் காணக் காண வேதனையாக இருந்தது.

"வேஷம் மிகவும் பொருத்தமாயில்லை?" என்று அந்த அம்மாள் என்னிடம் கேட்டாள்.

"வேஷம் நன்றாயிருக்கிறது" என்று மேலோட்டமாகச் சொல்லி மழுப்பி விட்டேன்.

"கண்ணா! நான் சொல்லித் தந்ததையெல்லாம் சொல்....."

கண்ணன் என்னைப் பார்த்தான். பிறகு அவலட்சணமாய் 'ஹி ஹி' என்று இளிக்க ஆரம்பித்தான். "நான்தான் ராஜா.. நீ ராஜா இல்லை. நீ மந்திரி... நீயும் ராஜா இல்லை...நானும் ராஜா இல்லை...எல்லாம் மனுஷன்...எல்லார் தோலையும் உரிச்சா எல்லாம் எலும்புக் கூடு....யார் ராஜா, யார் பிச்சைக்காரன்...."

பைத்தியக்கார வேஷத்தைப்போட்டுப் பைத்தியக்காரப் பேச்சையும் நன்றாகச் சொல்லிக் கொடுத்திருந்தாள் அந்த அம்மாள். ஆனால் கண்ணனுக்கு அதை இன்னமும் நன்றாகச் சொல்ல வரவில்லை; அதாவது சாதாரணக் குழந்தையைப் போல அழகாகச் சொன்னான். பைத்தியம் போலப் பிதற்ற முடியவில்லை.

"நேற்று முழுதும் இவனோடு முட்டிக் கொண்டேன். ..." என்று அந்த அம்மாள் கோபத்துடன் பல்லை நறநற வென்று கடித்தாள்.

"சரியாகச் சொல்லடா" என்று ஓர் அதட்டல் போட்டாள்.

அவனால் பைத்தியம் போலப் பிதற்றவே முடியவில்லை. அவளுக்குக் கோபம் அதிகமாகப் போய் விட்டது. தன்னருகில் அவனை இழுத்துக் கொண்டு அந்த மலர்க் கன்னத்தில்.......

"இல்லையம்மா, இல்லையம்மா. சரியாகச் சொல்கிறேன்" என்று அவன் அலறினான். நான் ஆவேசம் வந்தவனைப் போல அவனை என்னருகில் இழுத்துக் கொண்டேன். என்னைப் பயத்தால் அப்படியே கட்டிக் கொண்டு விட்டான் கண்ணன்.

"ஏனம்மா, இப்படி அவனை அடித்துக் கொல்கிறீர்கள்? ஏழு வயசுப்பையன் இவ்வளவு தூரம் செய்ததே அதிகம்" என்று கோபத்துடன் அந்த அம்மாவிடம் சொன்னேன்.

அதற்குள் வேஷப் போட்டி ஆரம்பித்து விட்டது. குழந்தைகள் ஒவ்வொருவரும் குறத்தி வேஷத்திலும், குடுகுடுப்பைக்காரன் வேஷத்திலும் இன்னும் பல வேஷங்களில் மேடை மீது வந்தார்கள். சோற்றுக்காகவும், மாடி வீட்டுக்காகவும், காசுக்காகவும், புகழுக்காகவும், வேஷம் போட்டு அலுத்துச் சலித்துப் போன பெரியவர்கள் விளையாட்டுக்காக வேஷம் போட்டுக் கொண்ட குழந்தைகளை மகிழ்ச்சி பொங்கக் கண்டார்கள். அங்கே குறத்தி குறி சொன்னாள்; குடுகுடுப்பைக்காரன் வருங்காலம் சொன்னான்; ரிக்ஷாக்காரன் பேரம் பேசினான்; எழுத்தாளர் வருணித்தார். ஆனால் இந்த எல்லாப் பேச்சிலும் வயிற்றைக் கழுவ வேண்டிய ஏக்கம் இல்லவே இல்லை.

பிறகு கண்ணன் பைத்தியக்கார வேஷத்தில் வந்தான். அந்த அம்மாள் சொல்லிக்கொடுத்ததை நன்றாகச் சொன்னான். அப்படியே பைத்தியம் போல் நடித்துக் காண்பித்தான். கூட்டம் முழுவதும் ஒரே கைதட்டல். அவனுக்கே முதல் பரிசு கிடைத்தது. அந்த அம்மாள் அவனை அப்படியே ஆனந்தத்தில் கட்டித் தூக்கிக் கொண்டாள். சிறிது நேரத்தில்

# 'அனஸின்'

## நான்கு மருந்துகள் அடங்கியுள்ளதால்

## வலி நிவாரணத்திற்கு மிகச் சிறந்தது

1. 'அனஸின்', அதிவிரைவில் வலிகளுக்கு சமனமூட்டுகிறது. ஒரு டாக்டர் குறித்துக் கொடுக்கும் பாதுகாப்பான மருந்துக்கு ஒப்பாக இதில் விஞ்ஞான முறையில் நான்கு மருந்துகள் ஒன்று கலந்துள்ளதால் 'அனஸின்' — நல்ல வலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, தலைவலி ஆகியவற்றிலிருந்து அதிவிரைவில் பூர்ண நிவாரணம் அளிக்கிறது.
2. 'அனஸின்' படபடப்பைப் போக்கி சமனமளிக்கிறது. அமைதியிழந்து பதட்டப்படும் வேதனையை அடியோடு அகற்றி இதமுடன் இளைப்பாறிய பலனை உங்களுக்கு அளிப்பது 'அனஸின்'.
3. 'அனஸின்' சோர்வை விரட்டுகிறது. வலிகளுடன் அடிக்கடி தோன்றும் சோர்வை வென்றுவிடுவது 'அனஸின்'
4. 'அனஸின்' ஜுரத்தைத் தணிக்கிறது. 'அனஸினில்' கொயினா கலந்திருப்பதால், ஜுர வேகத்தைக் கட்டுப்படுத்த மிகவும் சிறந்ததாக இருக்கிறது

★ செல்லோபேன் தாள்களில் சுகாதார முறையில் பாக்கிங் செய்யப்பட்டு கிடைக்கிறது. 2 வில்லைகள் 13 காசு




Registered User: GEOFFREY MANNERS & CO. LIMITED

TAM. 2-44 (A)

---

# க்ளுகோவிடா விரைவில் தருவது கூடுதலான சக்தி




- களைப்பின்றி செயலாற்றும் சக்தி
- இரத்தத்திற்கு வேண்டிய சர்க்கரைச் சத்து
- விரைவில் ஜீரணிக்கப்பட்டு பலன் தருகிறது

அன்றாடம் அருந்துவீர்!

## க்ளுகோவிடா



கார்ன் பிராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.

அவன் தனக்குக் கிடைத்த பரிசுடன் என்னருகில் ஓடி வந்தான். நான் மகிழ்ச்சியுடன் அந்தப் பரிசை வாங்கிப் பார்த்தேன். புல்லாங்குழல் போல் 'பிளாஸ்டிக்' கில் செய்யப்பட்டிருந்தது. அதை ஊதிக் காண்பித்தான். அந்த இசை மகிழ்ச்சி வடிவமாய் இருந்தது. சிறிது நேரத்தில் அந்த அம்மாளும் நான் இருந்த இடத்துக்கு வந்தாள். அவள் முகத்தில் பெருமை வழிந்தது. ''எனக்குத் தெரியும், அவன் பரிசு பெறுவான் என்று எனக்குத் தெரியும்'' என்று அந்த அம்மாளிடம் சொல்லிக்கொண்டே அவன் கன்னத்தை வருடினேன். கை கரீர் என்றது. கன்னத்தை நிமிர்த்திப் பார்த்தேன். அந்த அம்மாளின் கை விரல்கள் செம்பருத்திப் பூப்போல் கன்னத்தில் பதிந்திருந்தது. முன்பு அடித்த அடியின் தழும்புதான் அது. எனக்குக் கண்ணீர் மல்கியது.

''அம்மா! முன்பு நீங்கள் அடித்தது எப்படிப் பதிந்திருக்கிறது, பாருங்கள். இந்தப் போட்டி வெறும் விளையாட்டு. வெறும் விளையாட்டில் தோல்வி ஏது, வெற்றி ஏது? வெற்றிக்காகவோ தோல்விக்காகவோ விளையாடுவது அல்ல விளையாட்டு. விளையாட்டுக்காகவே ஆடுவதுதான் விளையாட்டு. நீங்கள் தோற்று விட்டதாக எண்ணிக் கொண்டிருக்கும் மற்றக் குழந்தைகளைப் பாருங்கள். அவர்களும் எப்போதும் போல் உற்சாகமாக இருக்கிறார்கள்'' என்று சொன்னேன். பிறகு மனசுக்குள்ளேயே, 'வாழ்க்கை என்பது இன்பத்துக்காக வாழ்வதோ, துன்பத்துக்காக வாழ்வதோ அன்று. அப்படி ஒரு குறிக்கோளுக்காக வாழ்வது பேதைமை. துன்பமும் இன்பமும் தாமே வந்து அமைகிற வாழ்க்கைக்காக வாழ்கிறோம். வாழ்க்கை என்பது விளையாட்டைப் போல'' என்று சொல்லிக் கொண்டேன்.

ஃ ஃ ஃ

இந்த நிகழ்ச்சி நடந்து கிட்டத்தட்ட ஒரு வருஷம் ஆகியிருக்கும். இந்த ஒரு வருஷத்தில் எத்தனை மாறுதல்கள். நான் முன்பு இருந்த ஊரை விட்டு வேறு ஊருக்கு வந்துவிட்டேன். முன்பு இருந்த ஊர் உடலுக்கு ஒத்துக் கொள்ளும் ஊர் தான். இன்னும் சொல்லப் போனால் உடலுக்கு மிகவும் ஒத்துக் கொள்ளும் ஊர் என்று சொந்த ஊரை விட்டு அந்த ஊருக்கு வந்து பங்களா கட்டிக்கொண்டு வாழ்பவர்கள் பல பேர். ஆனால் எனக்கு அந்த ஊர் வயிற்றுக்கு ஒத்துக்கொள்ளவில்லை. 'எனக்குச் சோறு போடுகின்ற



**கான்ஸ்டேபிள் :** ஐயோவ் ! உங்களைத் தான் ! உங்க 'போர்டு மீட்டிங்'கை நடு ரோட்டிலே வச்சுக்காதிங்க. போங்கய்யா !

---

ஊர்தான் உனக்கு ஒத்துக் கொள்ளும்' என்ற வயிற்றின் ஆணைப்படி வேறொரு ஊருக்குப் போகும்படி ஆயிற்று. அலுவலக விஷயமாய் முன்பு இருந்த ஊருக்குப் போக நேரிட்டது. அப்போது போன வருஷம் நடந்த குழந்தைகள் தின விழா நினைவு வந்தது. விசாரித்த போது அன்றே அந்த விழா நடப்பதாகத் தெரிந்தது. கண்ணனைப் பார்க்கலாம் என்று மிருந்த ஆவலுடன் வேலைகளை முடித்துக் கொண்டு அங்கே புறப்பட்டேன்.

உள்ளே போன வருஷம் பார்த்த மாதிரியே மலர்க் கொத்தைப் போலக் குழந்தைகளின் கூட்டம். எனக்கு அந்தச் சூழ்நிலையில் மகிழ்ச்சியால் நிலை கொள்ளவில்லை. கிளிகளின் கூவல் போலக் குழந்தைகள் கத்திக் கொண்டிருந்தனர். நான் கண்ணன் இருக்கிறானா என்று பார்த்தேன்.

நெடுநேரம் கண்களை ஓட்டிய பின் அவன் நின்றிருப்பது தெரிந்தது. அவன் கையைப் பிடித்துக் கொண்டு அந்த அம்மாள் நின்றிருந்தாள்.

அவன் மறுபடியும் அதே வேஷம் போட்டுக் கொண்டிருந்தான். ஆனால் இப்போது மிகவும் தத்ரூபமாய் இருந்தது. கிழிந்த சொக்காய், கிழிந்த கால் சட்டை.......

அந்த அம்மாள் என்னைப் பார்ப்பதற்கு முன் அவன் என்னைப் பார்த்து விட்டான்.

''மாமா....!'' என்று இளித்தான்; நன்றாய் நடிக்கிறான்.

பிறகு அந்த ஊதலை எடுத்து....ஆ, அதே புல்லாங்குழல் போன்ற ஊதல்..! வண்ணமிழந்து பாதி உடைந்து போய் அதை எடுத்து வாயில் வைத்து ஊதுகிறான்...காற்றே வெளி வருகிறது.

''மாமா! மாமா! இதில் ஓசையில்லை. போன வருஷம் நன்றாய் ஊதியது..இந்த வருஷம் ஊதினால்....ஊதினால்..காற்று மட்டும் வருகிறது....காற்றில் ஓசையில்லை......''

மிக நன்றாக நடிக்கும் அவனைக் கண்டு மகிழ்ந்தேன். அந்த அம்மாள் என்னைச் சட்டென்று திரும்பிப் பார்த்தாள்.

''நீங்களா?''

''ஆமாம். இந்த வருஷமும் இவனுக்கே பரிசு நிச்சயம். ....நிச்சயம். வேஷம் மிகவும் பிரமாதம்!'' நான் கரை கடந்த உற்சாகத்துடன் அந்த அம்மாளிடம் சொன்னேன்.

**''இது வேஷமல்ல....''**

''அம்மா, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?...''

''இது வேஷமல்ல....அவன் உண்மையிலேயே ... உண்மையிலேயே..'' அவள் மேலே கூற மாட்டாமல் முகத்தைப் பொத்திக் கொண்டாள். அதைக் கேட்டுத் திணறினேன்.

''ஆறு மாதங்களுக்கு முன் அந்தப் பாழும் நோய் வந்து.....'' என்று அழுகைக் கிடையில்.....

''போதுமம்மா. போதும்'' என்று கூவினேன்.

உடைந்த ஊதலை வாயில் வைத்துக் கொண்டு அவன் மறுபடியும் ''போன வருஷம் இதில் ஓசை வந்தது, மாமா! இந்த வருஷம் இல்லை'' என்று சொல்லி விட்டுப் பெரிதாய்ச் சிரித்தான். நான் அவனை என்னருகில் இழுத்து அணைத்துக் கொண்டேன்.

அந்த அம்மாள் என்னிடம் சொன்னாள்: ''பைத்தியமாய்ப் பிதற்று என்று போன வருஷம் ஒரு நாள் முழுவதும் அடி அடியென்று அடித்தேன். இன்று நன்றாக ஒரு வார்த்தை பேசடா என்று அழுது குமுறுகிறேன்.....'' அவளால் மேலே தொடர முடியவில்லை.

நான் எனக்குள் சொல்லிக் கொண்டேன். ''வெற்றிக்காகவோ, தோல்விக்காகவோ விளையாடுவது அல்ல விளையாட்டு. விளையாடுவது விளையாட்டுக்காக. அதைப் போல இன்பத்திற்காகவோ, துன்பத்திற்காகவோ வாழ்க்கை அல்ல. இன்பமும், துன்பமும் தாமே வந்து அமையும். வாழ்க்கை என்பது விளையாட்டைப் போல் வாழ்வதற்காக மட்டுமே.''



"என்னப்பா, வயிற்று வலியா? உனது தாயாரை
பயோ-ஸால் கொடுக்கச் சொல். அது குழந்
தைகளை ஆரோக்கியமாகவும், சந்தோஷமாகவும்
இருக்கச் செய்கிறது."



# பயோ-ஸால்
## (கிரைப் மிக்சர்)

ஜே. & ஜே. டிஷேன்
ஹைதராபாத்-டெக்கான

# புது வெள்ளம்

## அத்தியாயம் இருபத்தொன்பது

## குற்றவாளி முருகையன்

அகிலன்

முருகையனைத் தேடி வந்தவருக்கு ஐம்பத்தைந்து வயதுக்கு மேல் அறுபது வயதுக்குள்ளிருக்கும். பழைய கோட்டும் சூட்டும் போட்டுக் கொண்டு, கையில் ஒரு கைத்தடியுடன் வந்திருந்தார். அவரை அதற்கு முன்பு முருகையன் சந்தித்ததில்லை.

''நீங்கள்தானே அந்தச் சிமெண்டுக் கடையின் முதலாளி?''

''ஆமாம்; என்ன விஷயம்?'' என்று கேட்டான் முருகையன்.

வந்தவர் பதில் ஒன்றும் பேசாமல் தமது முகத்தை அழுத்தித் தேய்த்துக் கொண்டு அவனை ஒருமுறை உற்றுப் பார்த்தார். அந்தப் பார்வையில் அவர் முருகையனை அளவெடுத்து எடை போட விரும்பியது தெரிந்தது. நன்றாக நாற்காலியில் சாய்ந்து கொண்டார்.

அறைக்கு வெளியில் நின்று எட்டிப் பார்த்த தாத்தா, ''கடை விஷயமாக இருந்தால் கணக்குப் பிள்ளையிடம் விசாரிக்கலாமே!'' என்றார். ''அவர் கடையில் தானே இருப்பார். அங்கே பார்க்கலாமே?''

தாத்தாவின் குறுக்கீட்டை விரும்பாத முருகையன் அவரை முறைத்துப் பார்த்தான்.

''கடைக்கு நடந்து நடந்து கால் தேய்ந்த பிறகுதான் வீட்டை விசாரித்துக் கொண்டு வந்திருக்கிறேன்'' என்றார் வந்தவர்.

தாத்தா மெதுவாகப் பதுங்கிக் கொண்டார். இது போல் யாராவது வீட்டுக்கு வந்தால், மாணிக்கம் வீட்டில் இருந்தால், ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லி அவர்களைத் திருப்பி அனுப்பி விடுவது வழக்கம். அந்த வழக்கத்தை இன்னும் முருகையன் தெரிந்துகொள்ளவில்லையே என்று தாத்தா வருந்தினார்.

''உங்களுக்குப் பத்து பதினைந்து நிமிஷங்களுக்கு ஓய்விருக்குமா? ஒரு முக்கியமான விஷயத்தை உங்களிடம் பேசலாமென்று வந்திருக்கிறேன்'' என்றார் அவர்.

''தாராளமாய்ச் சொல்லுங்கள்.''

''என் பெயர் வேணுகோபால். தபால் இலாகாவில் அதிகாரியாக இருந்து முப்பது வருஷங்களுக்கு மேல் உழைத்து விட்டு, இப்போது வேலையிலிருந்து உபகாரச் சம்பளம் வாங்கிக் கொண்டிருக்கிறேன். எனக்கு நான்கு குழந்தைகள். பெண்கள் இருவருக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டேன்; பையன்கள் இருவரும் படித்துக் கொண்டிருக்கிறார்கள்....''

எதற்காக இவர் தம்முடைய கதையைச் சொல்லிக் கொண்டு போகிறார் என்று யோசனை செய்தான் முருகையன்; முருகையன் யோசனை செய்வதை அவரும் தெரிந்து கொண்டார்.

''ஏன் இந்தக் கதை என்று நீங்கள் நினைக்கிறீர்களா? ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பார்களே, அதுபோல் இந்த நாட்டில் வாழும் லட்சோப லட்சம் மத்தியதர வர்க்கத்துக் கீழ்மட்டத்துக் குடும்பங்களின் கதை இது. ஒரு நாட்டின் மூளையும் முதுகெலும்புமான மக்களின் கதையை நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்...''

''சொல்லுங்கள். அதனால் எனக்கும் பலன் இருக்கும். நான் உங்களை விட வயதில் சிறியவன் தானே?''

''பரம ஏழையாக இருந்து, விளக்கடியில் நின்று படித்து, மற்றவர்களின் தர்ம சிந்தனையால் சாப்பிட்டு வளர்ந்தவன் நான். குமாஸ்தாவாக வேலைக்கு வந்து படிப்படியாக உழைத்து முன்னேறி அதிகாரியானவன். சம்பளம்

வாங்கிக் கொண்டுதான் நான் வேலை பார்த்தேன். என்றாலும் என் ஆத்ம பூர்வமாக அதைச் செய்தேன். என்னுடைய வேலையில் குறைகள் ஏதும் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் நான் மன தறியக் குற்றம் ஏதும் செய்யாதவன். கடவுளுக்குப் பயந்து நாணயத்தோடு என் கடமைகளை முடித்திருக்கிறேன். சம்பளத்தைத் தவிர, எனக்குள்ள படிப் பணத்தைத் தவிர, காலனுக்காக நான் யாரிடமும் கைநீட்டி வாங்கியதில்லை. குமாஸ்தாவாக இருந்த காலத்திலும் சரி, அதிகாரியாக இருந்த காலத்திலும் சரி, என்னிடமிருந்த சொற்ப அதிகாரத்தையும் நான் நியாயமான வழியில் நிலைநாட்டியவன்.''

உயரமாகவும் ஒல்லியாகவும் இருந்த அந்த மனிதர் வேணுகோபால், தமது நரைத்துப் போன கிராப்புத் தலையை ஒரு முறை தடவி விட்டுக் கொண்டு மேலே பேசலானார்:

''என்னைப் பற்றித் தற்பெருமை பேசுவதாக நீங்கள் நினைக்கலாம். என்ன செய்வது? என்னை விடச் சிறு பிள்ளையான உங்களிடம் சொல்ல வேண்டிய காலம் வந்து விட்டது....'' அவர் குரல் தழுதழுத்தது.

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை; நீங்கள் சொல்லுங்கள்!'' என்று அன்போடு, அனுதாபத்தோடு, ஆர்வத்தோடு கூறினான் முருகையன்.

''சீக்கிரம் முடித்து விடுகிறேன். முப்பது வருஷங்களாகத் திட்டத்தோடு சிக்கனமாக நான் வயிற்றைக்கட்டி வாயைக் கட்டி வாழ்க்கை நடத்தி வருகிறேன். சிறு வயதில் நான் அனுபவித்த வறுமை என் கண் முன்னால் பயங்கரமாக நின்றதால், என்னுடைய கடைசிக் காலத்தில் நான் அதைத் திரும்பவும் அனுபவிக்கக் கூடாதென்று எச்சரிக்கையாக இருந்தேன். இளமையில்தான் வறுமை கொடியது என்று பலர் சொல்வார்கள். ஆனால் இளமையில் அதை எதிர்த்துப் போராட உடலில் வலிமையுண்டு; — பொறுப்புக்கள் அப்போது குறைவு; முதுமையில் அது வரவே கூடாது! வரவே கூடாது!''

வேணுகோபால் தம் கண்களைத் துடைத்துக் கொண்டார். வறுமையின் அநுபவங்கள் முருகையனுக்கும் புதியவை அல்ல. அவர் தமது கடைசிக் காலத்தை நினைத்து அஞ்சிய விதம் அவனது மனத்தைப் பாகாய் உருக வைத்தது.

''முப்பது வருஷங்களாக நான் சொந்த வீட்டில் குடியிருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டுச் சிறிது சிறிதாகப் பணம் சேர்த்தேன். இப்போதுதான் ஒரு சிறிய வீடு கட்டிக் கொள்வதற்கான வசதி கிடைத்திருக்கிறது. வேலையையும் தொடங்கி விட்டேன். அதற்கான சாமான்களை வாங்குவதற்கு உங்கள் கடைக்கு வந்தால் அங்கே கிடைக்க மாட்டேன் என்கிறது. 'சிமெண்ட் ஸ்டாக் இல்லை' என்று வெளியில் எழுதிப் போடுகிறார்கள். எப்போதாவது வந்தால், வருகிற மாயமும் தெரியவில்லை; மறைகிற மாயமும் தெரியவில்லை! சண்டைக் காலத்துப் பழக்கம் சண்டை முடிந்த பிறகும் தீர மாட்டேன் என்கிறது.''

''எங்களுடைய கடையிலா அப்படி நடக்கிறது? இருக்கவே இருக்காது!'' என்றான் முருகையன்.

''பல முறை கால் கடுக்க நடந்து பார்த்து விட்டு உங்களிடம் வந்திருக்கிறேன். நான் படித்தவன்: சட்டம் தெரிந்தவன். என்னுடைய நிலையே இப்படியிருந்தால், இன்னும் அப்பாவிகளான மத்தியதர வர்க்கத்தினரின் கதி என்ன?''

''உங்களுடைய கவலை எனக்குத் தெரிகிறது. ஆனால் நாங்கள் தவறு செய்கிறோம் என்கிறீர்களே, அதைத்தான் என்னால் நம்ப முடியவில்லை. நான்தான் கணக்கு வழக்கைப் பார்க்கிறவன். அதில் அப்படி ஒன்றுமே தெரியவில்லை!''

முருகையன், தான் எதை உண்மையென்று நம்பினானோ அதைத்தான் — அழுத்தமாகக் கூறினான். ஆனால் அவருக்கோ முருகையன் உண்மையை வேண்டுமென்றே மறைத்துப் பேசுகிறான் என்ற சந்தேகம் வந்து விட்டது.

ஆத்திரத்துடன் அவர் எழுந்தார். ''இதோ பாருங்கள்! பேராசை என்பது பயங்கரமான ஒரு தொத்துநோய். உங்களுடைய பேராசை இருக்கிறதே, அது சீக்கிரம் மற்ற மனிதர்களிடமும் பரவத்தான் போகிறது. மனிதன் மேலும் மேலும் பேராசைப்பட்டு மேலும் மேலும் எந்த வழியிலாவது பொருள் தேடி, மேலும் மேலும் அதிகப்

பணம் கொடுத்து, எதையும் சாதித்துக் கொள்ளப் போகிறான். முடிவில், பணத்துக்கே மதிப்பு இல்லாத காலம் வருவதற்கு நீங்கள் வழி செய்து விடுவீர்கள்! சொல்லுங்கள்! பேராசைப்படாதவன் இங்கே வாழ முடியாதா? சத்தியத்துக்கும் தர்மத்துக்கும் கட்டுப்பட்டவன் இங்கே வாழ முடியாதா? ஏமாற விரும்பாதவன் இங்கே வாழ முடியாதா?''

''நிறுத்துங்கள்!'' என்று திருப்பிக் கத்தினான் முருகையன். ''நாங்கள் யாரையும் ஏமாற்றவில்லை. வேண்டுமானால் எங்கள் கணக்கை வந்து பாருங்கள்!''

''நீங்களும் உங்கள் கணக்கும்!...'' என்று வெறுப்போடு கூறினார் வேணுகோபால். பிறகு தடியை ஊன்றிக் கொண்டு திரும்பிப் போகப் பார்த்தார். அவர் தேகம் உச்சி முதல் உள்ளங்கால் வரையில் வெடவெடவென்று நடுங்கிக் கொண்டிருந்தது.

ஏனோ அந்த நடுக்கம் முருகையனின் உள்ளத்தையும் நடுங்க வைத்தது. அது சத்தியத்தின் நடுக்கம், தர்மத்தின் நடுக்கம், நாணயத்தின் நடுக்கம், மனிதத் தன்மையின் நடுக்கம் என்று அவனுடைய மனமே அவனுக்குச் சொல்லியது.

''நீங்கள் என்ன சொல்ல வந்தீர்கள்?'' என்று தடுமாற்றத்தோடு கேட்டான்.

''நான் இனி என்ன சொல்வது? நீர் ஒரு கள்ளச் சந்தைக்காரர்!''

கிழவரின் தடிக்குச்சி முருகையனின் நெஞ்சைச் சுட்டிக் காட்டியது. ''நீர் ஒரு திருடர்!''

பற்களைக் கடித்துக் கொண்டு ஒரு கணம் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளப் பார்த்தான் முருகையன். அவனுடைய நரம்புகளில் மின்சாரம் பாய்ந்தது போன்ற அதிர்ச்சி. வெளியில் சித்திராவும் தாத்தாவும் வெலவெலத்துப் போய் நின்று கொண்டிருந்தார்கள்.

மெதுவாக அவனும் அந்தப் பெரியவருடன் வெளியில் வந்தான். ''வாருங்கள், உங்களுக்கு ஏதும் தீமை நடந்திருந்தால் அதற்குப் பரிகாரம் செய்கிறேன்'' என்று கூறிக்கொண்டே அவர் அருகில் சென்றான்.

''தம்பி! நிர்வாக விஷயம் உங்களுக்குத் தெரியாது தம்பி! பெரியவர் ஊரிலிருந்து வரட்டும்!'' என்றார் தாத்தா.

முருகையன் தாத்தாவை வெறுப்போடு நோக்கி விட்டு, பெரியவரை வற்புறுத்திக் காரில் அழைத்துக் கொண்டு கடைக்குச் சென்றான்.

## அத்தியாயம் முப்பது

# எது உண்மை?

பெரியவர் வேணுகோபாலையும் முருகையனையும் ஒன்றாகக் கண்டவுடன் கடையில் வேலை பார்த்து வந்தவர்கள் திடுக்கிட்டு நின்றார்கள். தங்களால் திருப்பி அனுப்பப்பட்ட வேணுகோபாலுடன் இப்படித் திடீரென்று முருகையன் வந்து நிற்பான் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. 'சிறிய முதலாளி'யான அவனுக்குக் கடையில் ஏகப்பட்ட உபசாரங்கள் நடந்தன.

''ஆமாம், இவருக்கு சிமெண்ட் கிடைக்கவில்லையாமே? மற்ற இரும்புச் சாமான்களும் நியாயமான விலையில் கிடைக்கவில்லையாமே?'' என்று கேட்டுக் கொண்டே, கடை நிர்வாகியின் நாற்காலியில் போய் உட்கார்ந்தான் முருகையன்.

ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். பிறகு கடையை நிர்வகிக்கும் கணக்குப்பிள்ளை முருகையனிடம் நெருங்கி வந்தார். ''அதெல்லாம் ஒன்றுமில்லை; இருக்கிற சாமான்களைக் கொடுக்கிறோம்; இல்லாததை இல்லையென்று சொல்கிறோம்.''

''பத்து நாள் அலைந்த பிறகு நேற்றுச் சாயங்காலம்தான் சிமெண்ட் வந்திருக்கிறதென்று சொன்னார்கள். வாங்க வந்த கூட்டத்தில் நாலு பேருக்குமட்டும் கொடுத்தார்கள். மற்றவர்களை மறுநாள் காலையில் வரச் சொன்னார்கள். காலையில் வந்து பார்த்தால் 'தீர்ந்து விட்டது' என்று போர்டு எழுதிப் போட்டிருக்கிறார்கள்'' என்றார் வேணுகோபால்.

''எவ்வளவு மூட்டைகள் வந்தன?'' என்று கேட்டான் முருகையன்.

பதிலளிக்காமல் கடையை நிர்வகிக்கும் கணக்குப்பிள்ளை முருகையனை உற்

# கிலோ அளவில் வாங்குங்கள்...

வியாபாரி கிலோ அளவில் பொருள்களை விற்பனை செய்கிறார். துரிதமான சேவைக்கும், நேர்மையான வர்த்தகத்திற்கும் முழு அளவைகளில்

**கேட்டு வாங்குங்கள்**

1 வீசைக்குப் பதில் 1 கிலோ என்றும்
½ வீசைக்குப் பதில் 500 கிராம் என்றும்
¼ வீசைக்குப் பதில் 200 கிராம் என்றும்

கேளுங்கள்.
1 வீசை சர்க்கரையின் விலை 1 ரூபாய் என்றால்
1 கிலோவின் விலை 71 ந.பை. ஆகும்.

# மெட்ரிக் எடைகள்

## சுலபமானது ஒரே சீரானது

இந்திய அரசாங்கத்தால் வெளியிடப்பட்டது

றுப் பார்த்தார். அதை அவர் சொல்ல விரும்பவில்லை என்று தெரிந்தது.

''சொல்லுங்கள்! எவ்வளவு மூட்டைகள்?''

''ஐம்பது .... '' என்று இழுத்தார் அவர்.

''பொழுது போகும் சமயத்தில் ஐந்தாறு மூட்டைகள் மட்டும் கொடுத்தீர்கள். பொழுது விடிவதற்குள் அவ்வளவுமா தீர்ந்து விட்டது?'' என்று கேட்டார் வேணுகோபால்.

''ஆமாம்; ஐம்பதையும்தான் விற்று விட்டோம்.''

''முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்காதீர்கள், ஐயா!'' என்று பதறினார் வேணுகோபால்.

''பொறுங்கள்!'' என்று அவரை நிதானமாக இருக்கச் சொல்லி விட்டு, ''அப்படியானால் கணக்கு வைத்திருப்பீர்களே?'' என்று பெட்டியடிக்காரரிடம் கேட்டான் முருகையன்.

ரசீதுப் புத்தகங்களும் கணக்கு நோட்டும் முருகையனிடம் வந்து சேர்ந்தன. இரண்டையும் பரிசோதனை செய்து பார்த்தான் முருகையன். பார்த்து விட்டுத் திருப்தியோடு வேணுகோபாலிடம் நீட்டினான்.

''நீங்களும் பாருங்கள்! ஐம்பது மூட்டைகளையும் யார் யாருக்கு விற்பனை செய்தார்கள் என்பதற்கு இதில் கணக்கு இருக்கிறது. அனாவசியமாக இவர்களைக் குறை சொல்லிக் கொண்டிருப்பதில் பலனில்லை.''

வேணுகோபாலின் முகம் ஏமாற்றத்தைக் காட்டியது. பரிதாபமாக அவர் விழித்துப் பார்த்து விட்டுப் பெருமூச்சு விட்டார்.

''கூட்டத்தில் யார் யார் முந்திக் கொண்டார்களோ, அவர்களுக்குக் கொடுத்திருக்கிறார்கள். தேவைகள் அதிகமாகவும் சரக்குகள் குறைவாகவும் இருக்கும் சமயத்தில் இப்படித்தான் நடக்கும். இதற்கு நீங்கள் எங்களிடம் குறைப்பட்டுக் கொண்டால் என்ன செய்வது?''

''தினமும் வந்து இவர்களிடம் கெஞ்சுகிறேனே. இவர்களுக்கு என்னுடைய நினைவு வரவில்லையா? நான் என் சொந்தத் தேவைக்குத்தானே கேட்கிறேன்?''

''இனிமேல் அடுத்தாற்போல் சரக்கு வந்தால் முதலில் இவரை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்'' என்றான் முருகையன்.

''கட்டாயம் கொடுக்கிறோம்'' என்றார் கணக்குப்பிள்ளை.

அந்தப் பெரியவருக்கு மட்டிலும் சந்தேகம் அறவே தீரவில்லை. அவ்விருந்த கணக்கரின் முகத்தைத் துளைத்தெடுப்பது போல் கூர்மையாக நோக்கினார். அவருடைய முகத்தின் வழியாக அகத்தைக் கிழித்துப் பார்த்தார். அங்கே உண்மையைத் தேட விரும்புகிறவர் போல் பார்த்தார். உண்மை அங்கே இல்லை என்பது எப்படியோ அந்த மனிதருக்குத் தெரிந்து விட்டது.

பெரியவரின் முகத்தில் வேதனை படர்ந்தது. ''நான் நாணயமாகத் தொழில் செய்கிற நல்லவர்களை ஒன்றும் குறை சொல்லவில்லை. அவர்கள் நன்றாக வாழ வேண்டுமென்று இந்த வயதான காலத்தில் வாழ்த்துகிறேன். ஆனால்.... ஆனால்....எவரும் என்னை ஏமாற்றி விடலாம்; என்னைப் போல் இன்னும் பல அப்பாவிகளை ஏமாற்றி விடலாம். இருந்தாலும் அவர்களுடைய நெஞ்சுக்குள்ளே ஒளிந்திருக்கும் போலீஸ்காரரான கடவுளை ஒருநாளும் ஏமாற்ற முடியாது. கடவுளின் தண்டனை பொறுத்துத்தான் கிடைக்கும். ஆனால் அது மிக மிகப்பயங்கரமானதாக இருக்கும். எவனெவன் பேராசைப் பேய் பிடித்துத் திரிகிறானோ அவனெல்லாம் கடைசியில் அநுபவிக்கத்தான் போகிறான். கட்டாயம் அநுபவிக்கத்தான் போகிறான்!...''

கணக்குப் பிள்ளை தெய்வ பக்தி உள்ளவர். பிள்ளைக் குட்டிக்காரர். அவருடைய குடும்பம் பெரியது; வருமானம் சிறியது. அவர் கண்கள் கலங்கி விட்டன.

''ஐயா! நீங்க வயசிலே பெரியவங்க. உங்க வாயாலே இப்படிச் சொல்லாதீங்க. சம்பளம் கொடுக்கிறவங்க எதைச் செய்யச் சொல்றாங்களோ அதைச் செய்யறவங்க நாங்க. பெரிய முதலாளி வந்த பிறகு நீங்களே ஒரு முறை கடைக்கு வந்து அவர்கிட்டே எல்லாம் கேளுங்க!''

முருகையனுக்குக் கணக்கரின் பேச்சுத் தூக்கி வாரிப் போட்டது. ஏதோ உள்ளுக்குள் மறைக்கப்பட்ட உண்மையில்லா விட்டால் எப்படி இந்தப் பேச்சு வெளி வரும்?

''தம்பி! நீங்கள் அதிசயப் படா தீர்கள்'' என்றார் பெரியவர் முருகைய னிடம். ''சிலருக்கு மட்டும் இரண்டு பங்கு பணம் கொடுத்தால் கிடைக்காத சாமான்களும் எவ்வளவு பத்திரமாக வீடு வந்து சேர்கின்றன தெரியுமா? அப் போது மட்டிலும் எங்கிருந்து வந்து விடு மாம்? தேவைக்குக் குறைவாகவே தேவைப்படும் பொருள்களை உற்பத்தி செய்து, சாமான்களுக்குக் கிராக்கி ஏற்படுத்திக் கொள்ளையடிப்பதும் ஒரு தந்திரம் தம்பி!— சரி, நான் வருகிறேன்; நீங்கள் எனக்குக் கொடுத்தாலும் சரி, கொடுக்கா விட்டாலும் சரி...''

கிழவர் 'டக் டக்'கென்று கைத்தடியை ஊன்றிக் கொண்டு வேகமாக நடந்து சென்றார். சிறிய புயல் அடித்த பின்பு ஏற்படும் அமைதி அந்தக் கடைக்குள் நிலவியது. முருகையன் வெகுநேரம் அங்கு மௌனமாக உட்கார்ந்திருந் தான். பிறகு அவனுடைய கரங்கள் அங்கு மேஜை மீதிருந்த காகிதக்கட்டுக் களைப் புரட்டின.

கடிதம் ஒன்றின் தலைப்பில் 'மிகவும் அவசரம்' என்ற சிவப்பெழுத்துக் காணப் பட்டது. அதைச் சிறிது கூர்ந்து கவனித் தான். அரசாங்க அலுவலகம் ஒன்றி லிருந்து அவன் பெயருக்கு வந்திருந்த அவசரக் கடிதம் அது. கடிதம் வந்து இரு தினங்களுக்கு மேலாகியும் அது அப்படியே இருந்தது. பதிலும் இல்லை; நடவடிக்கையும் இல்லை.

''வந்து பார்க்கச் சொல்லி எழுதி யிருக்கிறதே?''

''முதலாளி ஊரிலே இல்லே. அதனால் தான்....''

''அவர் இல்லாவிட்டால் நான் இருக் கிறேனே? என்னிடம் அனுப்பினால் நான் போய்ப் பார்க்கிறேன்!''

''வந்து....வந்து...'' என்று முதலில் தலையைச் சொறிந்த கணக்குப்பிள்ளை, பிறகு, ''முதலாளிதான் இதையெல் லாம் நேரில் கவனிப்பது வழக்கம்; அப்படித்தான் சொல்லியிருக்கிறார்'' என்று தயங்கிக் கொண்டே கூறினார்.

''கடிதம் என் பெயருக்குத்தானே வந்திருக்கிறது?''

''ஆமாம். இருந்தாலும்.....''

'உண்மையான முதலாளி நீங்கள் இல்லை ஐயா! முதல் போடாதவர் எப்படி முதலாளியாக முடியும்?' என்று அவர் வாயைத் திறந்து கேட்கவில்லையே தவிர, தமது மழுப்பல்களின்மூலம் மறை முகமாக வெளியிடத்தான் செய்தார்.

''உடனடியாக ஏதோ விசாரணை என்று போட்டிருக்கிறார்கள். போய்ப் பார்க்க வேண்டியது நமது கடமையல் லவா? சரி, நான் போய்ப் பார்த்து விட்டு வருகிறேன்.''

''வேண்டாம், முதலாளி! நீங்கள் போய்ப் பார்க்க வேண்டாம். பெரிய வர் வந்தவுடனே அவர் போய்ப் பார்க் கட்டும்.'' பரபரப்புத் தென்பட்டது அவர் பேச்சில்.

''இல்லை! இது அவசர வேலை; நான் போகத்தான் போகிறேன்.''

''அவுங்க இப்படித்தான் எதையும் 'அர்ஜண்டு'ன்னு போடுவாங்க. ஆனால் அவுங்களுக்கு மட்டும் 'அர்ஜண்டு'ன்னு ஆறு மாசம் ஆகும். பெரியவர் வந் துடட்டுமுங்க'' என்றான் மற்றொரு வேலையாள்.

''ஆமாங்க. பெரியவருக்குத்தான் இந்த நெளிவு சுளிவெல்லாம் தெரியும். சமயத்துக்குத் தகுந்தாப்பிலே, ஆளுக் குத் தகுந்தாப்பிலே, அவர் நடந்துக் கிட்டு வந்துடுவார்.''

முருகையனுக்கு அப்போதுதான் முதன் முதலாகத் தன் முதலாளிப் பதவியின் பலவீனம் தெரிந்தது. முத லில்லா முதலாளியாக இருப்பது எவ் வளவு மோசமானது! பெயர் வைத்துக் கொண்டு செயலாற்ற முடியாமல் தவிப் பது எவ்வவு இழிவானது! எல்லாம் வீண் பெருமைதான் போலும்.....

என்றாலும், அங்கே நடைபெறும் எல்லாக் காரியங்களுக்கும் அவனே பொறுப்பு என்ற விஷயம் அப்போது அவனுக்குப் புரிந்துவிட்டது. நன்மைகள் நடந்தாலும் அவன் பெயரில்; தீமைகள் நடந்தாலும் அவன் பெயரில்தான்.

மற்றவர்கள் எவ்வளவு சொல்லியும் நிற்காமல் முருகையன் அந்தக் கடி தத்தை எடுத்துக் கொண்டு, அதை அனுப்பியிருந்த அலுவலகத்துக்குக் கிளம்பினான். அதன் அதிகாரியைப் பேட்டி காண்பதற்காகச் சற்று நேரம் காத்திருந்தான். பிறகு அழைப்பு வந்த வு டன் உள்ளே நுழைந்தான்.

அந்த இளம் அதிகாரி அவனைப் பார்த்த பார்வையில் ஏளனம் தாண்டவ மாடியது. (தொடரும்)

# AEI

# ஏ இ ஐ ஸீலிங் மற்றும் டேபிள் விசிறிகள்

## குளிர்ந்த அமைதியான ஆனந்தத்திற்கு

குறைந்த மின்சாரத்தில் மிகுந்த சக்தியுடன் இயங்குமாறு உருவாக்கப்பட்ட ஏ. இ. ஐ. ஸீலிங் மற்றும் டேபிள் விசிறிகள், தேர்ந்தெடுக்கப்பட்ட மூலப்பொருள்களைக் கொண்டு செய்யப்படுகின்றன. துல்லியமான தேர்ச்சியுடன் ஏ. இ. ஐ. விசிறிகள் தயாரிப்பதில் "இந்தியாவிலேயே மிகப் பெரிய அளவில் மின்சாரக் கருவிகள் அளிக்கும்" ஸ்தாபனத்தின் அனுபவமும், தொழில் நுட்பத்திறனும் உதவுகின்றன.



**இது வெறும் பண்டம் வாங்குவதல்ல; முதலீடு செய்வதாகும்**

மைந்தான் ஏ.ஸி.
பக்ரா டி.ஸி. 36", 48", 56" மற்றும் 60"

"டிலக்ஸ்" 16 அங்.
டேபிள் மாடல்

- பிரிந்தெடுக்கக்கூடிய பாது காப்பு மூடி.
- இஷ்டப்படி மாற்றிக்கொள்ளக் கூடியது. ஆடி வீசக்கூடியது.
- துல்லியமான வடிவமும், சம அமைப்பும் உள்ள அலுமினிய விசிறித் தகடுகள்.
- மூன்று வேக அளவுகள்.
- எனுமல் மெருகிடப்பட்ட பல மாதிரிகள்.

AEI/IA-TAM

**அஸோஸியேடெட் எலக்டிரிகல் இண்டஸ்ட்ரீஸ்**
**(இந்தியா) பிரைவேட் லிமிடெட்**

தலைமை காரியாலயம்: க்ரேஸன் ஹவுஸ், 13, ராஜேந்திரநாத் முக்கர்ஜி ரோடு, கல்கத்தா-1.
கிளைகள்: பம்பாய் புது டெல்லி சென்னை பெங்களூர் கோயம்புத்தூர் காகபுரி.

# மணி என்ன?









காட்சி 1

[காலை நேரம். சங்கரன் ஆபீசுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறான். சாருமதி சமையல் வேலைகளைப் பொறுமையாகக் கவனித்துக் கொண்டிருக்கிறாள்.]

சங்க: சாருமதி! ஆபீசுக்கு நேரமாச்சே: சாப்பாட்டுக் கடையைச் சீக்கிரம் திற.

சாரு: ஏன் இப்படி அவசரப்படுகிறீர்கள்? மணி ஒன்பது தானே ஆச்சு....

சங்க: ஒன்பதா? என்ன அவ்வளவு கரெக்டாகச் சொல்றே? சமையலறையில் ஏதாவது கடிகாரம் மாட்டி வைத்திருக்கிறாயா?...

சாரு: கடிகாரம் எதற்கு? அதோ பாருங்கள், தோட்டத்தை. தென்னை மரத்து நிழல் கிணற்றங்கரையில் விழுந்திருக்கா? அப்படீன்னு மணி ஒன்பதுன்னு அர்த்தம். நிழல் அந்த மதில்மேல் விழும் போதுதான் மணி ஒன்பதரை ஆகும்.

சங்க: சரிதான், நீ தென்னை மரத்து நிழலையும், புளிய மரத்து நிழலையும் கணக்கு வைச்சுச் சமையல் செய்தால், நான் சரியான நேரத்துக்குச் சாப்பிட்டு விட்டு ஆபீசுக்குப் போன மாதிரிதான்.

சாரு: என்ன அப்படி சொல்லிட்டீங்க. தினமும் தென்னை மரத்து நிழல்தான் எனக்குக் கடிகாரம். அதுமட்டுமா, இன்னும் சில அடையாளங்கள் இருக்கு. பால்காரன் வந்தான்னு மணி ஆறு. தயிர்க்காரி வந்தால் மணி ஏழரை. மூன்றாவது வீட்டு வழுக்கைத் தலை குண்டு சாமி ஆபீசுக்குப் புறப்பட்டுப் போனால் மணி ஒன்பதே கால்.

பானு: (வந்து கொண்டே) அப்புறம் அம்மா வெந்நீர் அடுப்பை மூட்டினால் மணி ஏழே கால். நம்ம வீட்டுத் தோட்டத்தில் இருந்தபடியே அடுத்த வீட்டு அவரைக்காயைப் பறித்தால் மணி எட்டு. எதிர் வீட்டுச் செளரி இரவல் பேப்பர் கேட்க வந்தால் மணி எட்டு இருபது.....

சங்க: தேவலையே.. அம்மாவும் பெண்ணுமா இந்த உலகத்தையே கடிகாரமாக்கி மணி பார்க்கிறாப் போல் இருக்கே. நானும் தான் தினமும் எத்தனையோ பேரைச் சந்திக்கிறேன். இப்படி ஒரு கணக்கு வைக்கத் தோணலையே. இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் போட்டும் சொந்தமா ஒரு கடிகாரம் வாங்க முடியலே.

சாரு: உங்களுக்குச் சொந்தமாக வாங்கவும் முடியாது. யாராவது இனாமாகக் கொடுத்தால் வைக்கக் காப்பாற்றவும் தெரியாது.

சங்க: ஏன் தெரியாது? கையிலேயும், கழுத்திலேயும் இல்லாத நகையை மாட்டி, ஜாம் ஜாம்னு ஒரு ஓட்டைக் காரில் ஏற்றி உன்னை இனாமாகத் தானே என் தலையில் கட்டி விட்டுப் போனார் உன் அப்பா. உன்னை வைக்க நான் காப்பாற்றவில்லையா?

சாரு: இதோ பாருங்கள். 'இனாம்தாரி'யாக ஒன்றும் எங்கப்பா கை கழுவி விட்டு விடவில்லை. நீங்கள் கேட்ட சட்டைப் பித்தானிலிருந்து சங்கிலி கோர்த்த கைக் கடிகாரம் வரை எல்லாம் சொட்டாக வாங்கிக் கொடுத்துத்தான் அனுப்பினார். நீங்கள் தான் துப்பு இல்லாமல் கைக் கடிகாரத்தை மூன்றாவது நாளே தொலைத்து விட்டு வந்து நின்றீர்கள்.

சங்க: ஓஹோ. உன் அப்பா வாங்கிக் கொடுத்தது கைக்கடிகாரமா? கழுத்துக் கடிகாரம் என்று சொல்லு. அடேயப்பா, மைசூர் காலத்துத் தொப்பி மாதிரி என்னவு பெரிசு. அதைக் கட்டிக் கொண்டு நான் பட்ட அவமானம் கொஞ்சமா? எத்தனை பேர்கள் பார்த்துச் சிரிப்பாய்ச் சிரித்தார்கள். ஒவ்வொரு சிரிப்புக்கும் ஒரு ரூபாய் மான நஷ்டமாக வசூலிப்பதானாலும்கூட மொத்தம் இரண்டாயிரத்துச் சில்லறை ரூபாய் உங்கப்பா கட்ட வேண்டிவரும்.

பானு: இந்தக் கேஸை பத்து வருஷங்களுக்கு முந்திப் போட்டிருந்தால் தாத்தா பணத்தைக் கட்டுவதற்குப் பதில் பல்லையாவது காட்டியிருப்பார். இப்பொழுது அதற்குக் கூட வழியில்லை. முன் பல் நாலும் 'அவுட்'.

சங்க: ஹா! முன் பல் நாலும் விழுந்து விட்டதா, எப்பொழுது?

பானு: என்னப்பா இது? தாத்தாவுக்குப் பல் விழுந்துவிட்டதென்றால் நீங்கள் ஏன் குஷியாய்க் குதிக்கிறீர்கள்?

சங்க: அந்தப் பல்லின் மதிப்பு உனக்கென்னடா தெரியும்? அது அவ்வளவும் தங்கம். நானே அதில் ரெண்டு பல்லை ஒரே குத்தாய்க்

ஜுத்தி உடைத்துக் கொண்டு வரலாமா என்று சில சமயம் நினைப்பேன். போச்சு! பல்லே வித்துப் பணம் பண்ணி யிருப்பார்கள்....

பானு: போனால் போகிறதப்பா. பல்லே வித்த பணம் நமக்கெதற்கு? உங்கள் கையிலே பணம் இருந்தால் பாருங்கள். இல்லா விட்டால் தவணையிலாவது ஒரு கடிகாரம் வாங்கி வந்து விடுங்கள்.

சாரு: 'தவணை' என்றால் என்ன? முதலிலே சின்ன முள், பெரிய முள், அப்புறம் சக்கரம் இப்படி ஒண்ணு ஒண்ணு வாங்கிப் பூட்றதா?

பானு: இல்லேம்மா. கடிகாரத்தைக் கடனுக்கு வாங்கிக் கொண்டு மாதா மாதம் கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் கொடுத்துத் தீர்ப்பதற்குத் தான் தவணை முறைன்னு பேரு. இப்போ பெரும்பாலும் கத்திரிக்காய் வாங்கு றதிலிருந்து காஷ்மீருக்கு உல்லாசப் பிரயாணம் போவது வரை எதற்கெடுத்தாலும் தவணை முறைதான். நீகூட ஏதோ பிரார்த் தனை பண்ணிக் கொண்டு இருப்பதி உண்டிய லில் பணம் போடணும்னு சொல்லிக் கொண் டிருந்தாயே. அதற்குக்கூடத் தவணை முறை இருக்கு. ஒரு கம்பெனிக்காரன் உனக்காக உண்டியலில் பணம் போட்டு விடுவான்.

சாரு: அட கோவிந்தா!

சங்க: இந்தா சாரு! சர்வம் தவணை முறை ஜெகத்! எங்க ஆபீஸ் ஒண்ணு மட்டும் விதி விலக்கு. வேட்டாகப் போனால் எங்க மானேஜருக்குத் தவணை முறையிலே கோபம் வராது. மொத்தமாகத் தான் வரும். சீக்கிரம் இலையைப் போடு.

[போகிறார்கள்.]

காட்சி 2

[அன்று மாலை. சங்கரன் ஆபீஸிலிருந்து திரும்பி வருகிறான்.]

சங்க: சாருமதி! ... சாரு ..... எங்கே ஆளையே காணோம்?

சாரு: (வந்து கொண்டே) என்ன, இன்று சீக்கிரம் வந்து விட்டீர்கள்?

சங்க: இல்லேயே. ஆபீஸ் முடிந்து வழக்கம் போல்தான் வந்திருக்கிறேன்.

சாரு: அப்படின்னு மணி அஞ்சரை ஆகி விட்டதா? அதெப்படி ஆகும், இன்னும் எதிர் வீட்டுக் குழந்தை அழவில்லையே?

சங்க: அழவில்லையா, போய்க் கிள்ளிவிட்டு வா. நல்ல கணக்கு. அழுதால் ஐந்தரை; சிரித்தால் ஏழரை. இன்னும் தும்மலுக்கும் இருமலுக்கும்தான் மணி கணிக்கவில்லைபோல் இருக்கிறது.

சாரு: போதும் கேலி. அதென்ன கையில்?

சங்க: ஆ .... மறந்து விட்டேன். சாரு! இனிமேல் மணி என்னவென்று பார்க்கத் தென்னை மரத்தின் மேல் ஏறவேண்டியதில்லை. ஒரு அலாரம் டைம் பீஸ் வாங்கிக் கொண்டு வந்து விட்டேன்.

சாரு: தேவலையே. காலையில் இட்டம் போட்டு மாலையில் கையோடு கடிகாரத்தை வாங்கி வந்து விட்டீர்களே. சுறுசுறுப்பு கொஞ்சம் அதிகம்தான். அது சரி. மாதக் கடைசியாச்சே. ஏது பணம்?

சங்க: நான் பணம் கொடுத்து இதை வாங்க வில்லை, சாரு! பத்திரம் எழுதிக் கொடுத்து வாங்கி யிருக்கிறேன். மாதம் ஐந்து ரூபாய் வீதம் கட்டணும். எட்டு மாதம் தவணை.

சாரு: ஐயையோ! குடும்பச் செலவில் அந்த ரூபா துண்டு விழுமே. எப்படிச் சரிக் கட்டப் போகிறீர்கள்?

சங்க: அதற்கென்ன, முகத்துக்குப் பூசு கிறயே உப்பு மா—அதை வாங்குவதை நிறுத்திவிட்டால் போச்சு.




ஏ. எஸ். சுந்தரராஜன்



சாரு: ஏன், நீங்க இன்னும் கோமா பவளில் முழுங்குறீங்களே, அந்த டிபன் அயிட்டத்தை நிறுத்திறுல் என்னவாம்?

சங்க: சரி. ஏதோ ஒண்ணு. கடிகாரம் எப்படி?

சாரு: அழகாய்த்தான் இருக்கு. ஆனால் பத்து அடி தூரத்திலிருந்து மணி பார்க்க முடியாது போலிருக்கே. நம்பர் எல்லாம் ரொம்பச் சின்னதாயில்லே? ஒரு பூதக் கண்ணாடியும் வாங்கி வந்து விடுங்கள்.

சங்க: பூதக் கண்ணாடி எதுக்கு? ஒரு சாளேசுரக் கண்ணாடி வாங்கி விடுகிறேன். போட்டுக் கொண்டு பார். நன்றாகத் தெரியும்.

பாலு: (வந்து கொண்டே) அடடே...... கடிகாரம் வைத்துக் கொள்ளும் பாக்கியம் கடைசியில் நம் குடும்பத்துக்கும் கிடைத்து விட்டதா?

சங்க: உனக்காகத்தாண்டா. அலாரம் அடிக்கும் கடிகாரமாய்ப் பார்த்து வாங்கி வந்திருக்கிறேன். அடுத்த மாதம் பரீட்சையில்லே. இனிமேல் நீ எட்டு மணி வரைக்கும் தூங்க முடியாது. கோயில் மணி மாதிரி டாண் டாண்னு அடிக்கும் அலாரம்.

பாலு: (மெதுவாக) நல்ல வேளை. தூங்கு கிறவனைக் கோயில் மாடு மாதிரி முட்டித் தள்ளும் கடிகாரமாகப் பார்த்து வாங்காமல் விட்டீர்களே. (உரக்க) அப்பா! எங்கே அந்த அலாரத்தைக் கொஞ்சம் வையுங்க. எப்படி அடிக்குது பார்ப்போம்.

[சங்கரன் சாவி கொடுத்து முள்ளைத் திருப்புகிறான். எவ்வளவு திருப்பியும் அலாரம் அடிக்கவில்லை.]

பாலு: அம்மா! இந்தக் கடிகாரம் மற்றதைப் போல இல்லே. கொஞ்சம் 'ஹைஹுவா லிட்டி' தான். நம்ப இஷ்டப்படி யெல்லாம் அலாரம் அடிக்காது போலிருக்கு.

சாரு: நம்ம இஷ்டப்படி என்ன, அது இஷ்டப்படி கூட அடிக்காது போலிருக்குடா.

சங்க: என்ன. கேலியா செய்கிறீர்கள்? புது கடிகாரம் அப்படித்தான் இருக்கும். கொஞ்சம் தட்டிக் கிட்டிக் கொடுத்துச் சமாதானப்படுத்தித்தான் வேலை வாங்கணும்.

[குலுக்குகிறான். அலாரம் அடிக்கிறது.]

சங்க: பாருங்கள். என் கடிகாரத்தைப் பழித்த கடர்களே! அலாரம் எப்படி அடிக்கிறது, பாருங்கள்!

பாலு: (காதுகளை மூடிக்கொண்டு) அப்பா! இது அலாரம் டைம்பீஸ் இல்லே. அடாமும் டைம்பீஸ்! அம்மாடி என்ன சத்தம்! காலையிலே எல். ஐ. ஸி. பில்டிங் மாடி உச்சியில் இதைக் கொண்டு போய் வைச்சு அலாரம் அடிக்கும்படி விட்டு விட்டால், சென்னை நகரத்துப் பத்து லட்சம் ஜனங்களையும் படால்னு படுக்கையை விட்டு எழுப்பி விடும் போலிருக்கே.....

சாரு: என்னங்க! அலாரம் அடிச்சது போதும் நிறுத்துங்க. காது வலிக்குது.

[சங்கரன் ஒரு பொத்தானை அழுத்துகிறான். அலாரம் நிற்கவில்லை.]



"அதோ போகிறாரே அவர் என் வீட்டிலிருந்து ஒரு கல் எறியற தூரத்தில்தான் இருக்கிறார்!"

---

சங்க: (பதறி) ஐயையோ... என்ன அலாரம் நிக்க மாட்டேங்குதே....

சாரு: என்ன சண்டித்தனம்! டேய் பாலு! எதிர்வீட்டிலிருக்கும் வாத்தியாரைப் பிரம்பும் கையுமா வரச் சொல்லுடா.

பாலு: போம்மா. இதற்கெல்லாம் அது பயந்துடாது. இங்கே கொடுங்க அப்பா.

[பாடுகிறான்.]

ஆராரோ ஆரிரரோ
அலாரத்தை நிறுத்தாயோ
குழவியாய் நீ இருந்தால்
குரல்வளையை நெரித்திருப்பேன்!

[அலாரம் நிற்கிறது.]

சாரு: என்ன அக்கிரமம்! தாலாட்டு இல்லே கேட்குது. இந்தாங்க. இது கடிகாரமில்லே. ஏதோ குட்டிச்சாத்தான்.

சங்க: குட்டியாவது சாத்தானாவது? மெஷின்லே ஏதோ சின்ன ரிப்பேர். அவ்வளவு தான். அட. கடிகாரம் ஓடாமல் நின்னு போச்சே....

பாலு: அம்மா குட்டிச்சாத்தான்னு சொன்னதாலே கோபமோ என்னவோ..

சங்க: ஏதேது. என்னைக் குழப்பி விடுவீர்கள் போலிருக்கே. சரி. முதலில் இந்தக் கடிகாரத்தை ரிப்பேர் பண்ணிவிட்டுத் தான் மறு வேலை.

[வேகமாகப் போகிறான். தாயும் பிள்ளையும் ஒருவரைப் பார்த்து ஒருவர் சிரித்துக்கொள்கின்றனர்.]

காட்சி 3

[கடிகார ரிப்பேர்க் கடை. சங்கரனுடைய கடிகாரம் தீவிரப் பரிசோதனைக்கு இலக்காகி யிருக்கிறது. சங்கரன், ஆஸ்பத்திரியில் ஆபரேஷன் தியேட்டருக்கு முன்னால் அமர்ந்திருக்கும் நோயாளியின் உறவினர்போல் பதறியபடி காட்சி யளிக்கிறான்.]

கடிகார ரிப்பேர்க்காரர்: ஏன் சார்! இது தவணை முறையிலே வாங்கின கடிகாரமா?

சங்க: ஆமாம்.

க. ரிப்: அப்போ தவணை முறையிலே தான் ஓடும். அதாவது மாசம் அஞ்சு ரூபாய் கட்டுகிறீர்கள் என்றால் மாசம் அஞ்சு மணி நேரம்தான் ஓடும். கவலைப்படாதீர்கள். நான் சரிபாக்கி விடுகிறேன். ஆனால் செலவுதான் கொஞ்சம் அதிகம் ஆகும்....

சங்க: எவ்வளவு ஆகும்?

க. ரிப்: கூலி மட்டும் பதினஞ்சு ரூபாய்.

சங்க: என்னப்பா, நீ கேட்டத் தட்ட இந்தக் கடிகாரத்தின் விலையையே கேட்கிறாய். இதுக்குப் புதுசா வேறு ஒரு கடிகாரமே வாங்கி விடுவேனே....

க. ரிப்: என்ன சார் புதுசு .... இப்போ வரும் கடிகாரங்கள் எதுக்குப் பிரயோசனம்? இதோ பார்த்தீங்க இல்லே. வாங்கி நாலு மணி நேரம் ஆகலே. பல்லே இளிச்சுட்டுப் படுத்துட்டுது. நான் வேலே செய்து தரேன் சார். அப்புறம் பாருங்க. கல்லிலே அடிச்சாலும் சரி; கடலிலே தூக்கிப் போட்டாலும் சரி; மூச்சு விடவாவது நிற்குமா? ஜிரு ஜிருன்னு சும்மா 'ரோல்ஸ் ராய்ஸ்' இன்ஜின் மாதிரி போகும்.

சங்க: இந்தாப்பா. 'ரோல்ஸ் ராய்ஸ்' இன்ஜின் மாதிரி கூட வேண்டாம். சும்மா ரோட்டரி மெஷின் மாதிரி கடகடன்னு ஓட வைக்கக் கொடுத்து விடு. போதும். இந்தா பத்து ரூபாய். வைத்துக் கொள்.

க. ரிப்: சார் .... சார் .... கட்டாது சார்.....

சங்க: உம் .... சும்மா பேரம் பேசக் கூடாது. நாளை சாயந்திரம் வருகிறேன். கடிகாரத்தை ரிப்பேர் பண்ணித் தயாராக வைத்திரு.

[போகிறான்.]

## காட்சி 4

[நான்கு நாட்களுக்குப் பிறகு.—காலை நேரம்.]

சங்க: (படுக்கையிலிருந்த படியே) பானு! மணி என்ன பாரு....

[பானு வெளியில் போய்ச் சற்று நேரம் கழித்து வருகிறான்.]

பானு: அப்பா! மணி ஏழு. ஏழே கால், ஏழரை....

சங்க: என்னடா உளறுகிறாய்?

பானு: இல்லேப்பா. தெருவில் போன ஒருத்தரைக் கேட்டேன். மணி ஏழுன்னு சொன்னார். எதிர்வீட்டுக் கடிகாரத்திலே பார்த்தேன். ஏழேகால். மணிக்கூண்டு கடிகாரத்திலே, மணி ஏழரை.

சங்க (எரிச்சலுடன்): ஏன், நம்ப வீட்டில் ஒரு கடிகாரம் இருப்பது உன் கண்ணில் படவில்லையா?

பானு: நம்ப கடிகாரம் ரொம்ப வேகமாக ஓடுது அப்பா! அதிலே இப்போ மணி பன்னிரண்டு இருபத்தி ஏழு.

சங்க: போடா முட்டாள். அதிலே உனக்கு மணி பார்க்கத் தெரியவில்லை என்று சொல்லு.

சாரு (வந்துகொண்டே): அதென்ன கூத்து? உங்கள் கடிகாரத்தில் மணி பார்க்க எத்தனை வருஷம் படித்துப் பட்டம் வாங்கியிருக்க வேண்டுமாம்?

பானு: சரிதான். அப்பா சீக்கிரம் ஒரு 'டுடோரியல்' காலேஜ் ஆரம்பித்தாலும் ஆச்சரியப்பட வேண்டியதில்லே.

சங்க: சும்மா இருடா [illegible]ண்டு. ஒரு சின்னக் கணக்குத் தெரிந்தால் போதும். இதோ பார் பெரிய முள் பன்னிரண்டில் இருக்கு; சின்ன முள் ஆறில் இருக்கு. இரண்டையும் கூட்டு. பதினெட்டு ஆயிற்றா? அதில் மூன்றைக் கழித்து இரண்டால் வகு. என்ன வருது?

பானு: மயக்கம் வருது!

சங்க: விளையாடாதே. இரண்டால் வகுத்தால் ஏழரை வருதா? அதுதாண்டா. இப்போது மணி ஏழரை.

பானு: கணித மேதை ராமானுஜம் இருந்திருந்தால் கூட இந்தக் கணக்கைப் போடத் திணறித்தான் போவார். அடேடே, கடிகாரம் மறுபடியும் நின்று போய்விட்டது போலிருக்கு அப்பா

சாரு: சரிதான். நீங்க இந்தக் கடிகாரத்தை வாங்கின ராசி 'ஸ்ட்ரைக் ராசி'போலிருக்கு. அதுதான் அடிக்கடி நின்று போகுது.

சங்க: அட, ஆண்டவா. ரிப்பேர் செலவுக்காகக் கைப் பணம் பத்து ரூபாயும் தொலைத்து விட்டேனே.

[பானு கடிகாரத்தைத் தரையில் கவிழ்த்து வைக்கிறான்.]

பானு: ஆஹா.... ஓடுது.... இது ஆமை பிராண்டு கடிகாரம் அப்பா. கவிழ்த்து வைச்சாலும் ஓடுது பாருங்க.

சாரு: படுக்க வைச்சுட்டியா? மேலே ஒரு கம்பளியையும் போர்த்தி வை. பாவம், குளிரப் போகுது. நல்ல கடிகாரம் வாங்கினீங்க போங்க. தலையணை போட்டுப் படுக்க வைச்சாத்தான் ஓடுது. தாலாட்டுப் பாடினால் தான் அலாரத்தை நிறுத்துது. மணி பார்க்கவும் ஆயிரத்தெட்டு கணக்கு. இனி மேலும் இது வீட்டிலேயிருந்தால் நம் எல்லாருக்கும் பைத்தியம் பிடிச்சாலும் பிடிச்சுடும். தூக்கி எறியுங்க குப்பைத்தொட்டியிலே. ஐயையோ, தென்னை மரத்து நிழல் மதில் மேல் விழுந்துட்டுதே. மணி ஒன்பதரை. ஆபீசுக்கு நேரமாச்சே கிளம்புங்க. (போகிறாள்)

பானு: அடடே.... எதிர் வீட்டுப் பானு அக்கா அழகு பார்க்கக் கண்ணாடி முன் உட்கார்ந்து விட்டாளே. மணி ஒன்பது முப்பத்தைந்து. எனக்குக் கூடப் பள்ளிக்கூடத்துக்கு நேரமாச்சு. அப்பா! அடி வேணுக்கு மாதம் அஞ்சு ரூபாய் கொடுத்துடுங்களேன். சும்மா கிரிக்கெட் காமெண்ட்ரி மாதிரி நிமிஷத்துக்கு நிமிஷம் மணி பார்த்துச் சொல்லிக் கொண்டேயிருக்கிறேன். சொந்தமாகக் கடிகாரம் வைத்துக் கொள்ளும் வம்பெல்லாம் எதற்கு உங்களுக்கு?

[சங்கரன் முறைக்கவே, பானு மெள்ள நழுவுகிறான். சங்கரன் வீசி எறிந்த கடிகாரம் குப்பைக் கூடையில் போய் விழுகிறது.]



# உங்கள் வீட்டுக்கும் ஆபீஸுக்கும் உகந்தவை

# கீரா

# ஸ்டீல் பீரோக்கள்

வீட்டிலும் சரி, ஆபீஸிலும் சரி, கீரா ஸ்டீல் பீரோக்கள் உபயோகமானவை, அந்தஸ்துக்கு எடுத்துக்காட்டானவை! அவை வசதியானவை, உங்களது விலை உயர்ந்த பண்டங்களையும், முக்கிய தஸ்தாவேஜுகளையும் வைத்துப் பாதுகாக்க மிகவும் பத்திரமானவை. கீராவின் ஸ்டீல் பீரோக்கள் 3 சைஸ்களில் கிடைக்கின்றன:

யுடிலிடி ... 78" x 36" x 19"
பாபுலர் ... 65" x 33" x 19"
பட்ஜெட் ... 50" x 30" x 17"

**அமைப்பின் தனிச்சிறப்புக்கள்:** கீரா ஸ்டீல் பீரோக்கள், துருப்பிடியாத, பழுதடையாத, உயர் ரக ஸ்டீலினால் பிரத்தியேக முறையில் தயாரிக்கப்படுகின்றன. மூன்று விதங்களில் பூட்டக்கூடியது இவற்றின் சிறப்பு அம்சம். இவற்றின் தட்டுக்களை, நீங்கள் விரும்பியபடி மேலும் கீழும் பொருத்திக் கொள்ளலாம். இவை "ஓவன்-பேக்டு" எனாமல் அழியாத மெருகுடன் விளங்குவன!




கீரா ஸ்டீல் பீரோ... மதிப்புள்ள பொருள்களுக்கு மாண்புமிக்க காவலன்!

கீரா ஸ்டீல் ஒர்க்ஸ் பிரைவேட் லிட்.
கோட்பந்தர் ரோடு, சாந்தா க்ரூஸ், பம்பாய்-54

*அங்கீகாரம் செய்யப்பட்ட டீலர்களும் ஸ்டாக்கிஸ்டுகளும்:*

சென்னை: வில்லியம் ஜாக்ஸ் அண்டு கோ., லிமிடெட்
மஹாத் இம்போர்ட்ஸ் & கோ., பிரைவேட் லிட்.
இந்தியன் ரேடியோ ஹவுஸ்
ஆர்னல் அண்டு கோ.,
கோயமுத்தூர், ஈரோடு, சேலம்: ராயல் டிரேடிங் கோ.
எர்ணாகுளம், திருச்சூர்:
'சாரோஸன்' சி. பி. ஜோஸப்பன் & சன்ஸ்
ஆலப்புழை, கோட்டயம்: வாசன் & கோ.

கும்பகோணம், மதுரை, திருச்சிராப்பள்ளி:
ஸ்ரீ கணேஷ் ஸ்டோர்ஸ்
விசாகப்பட்டினம்: டாமினியன் ஏஜன்ஸிஸ்
விஜயவாடா, ராஜமகேந்திரபுரம்:
ஸ்ரீ ராமா கார்ப்பொரேஷன்
திருநெல்வேலி, நாகர்கோயில்:
ஏ.ஆர். ஏ. செண்பக நாடார்
பி. வி. பி. பாலசுப்ரமணிய நாடார் & கோ.

*மற்றும்*

பெங்களூர், கள்ளிக்கோட்டை, மங்களூர், மைசூர், பாலக்காடு, கொல்லம் முதலிய இடங்களிலும் உள்ளனர்

# பித்துக்குளி

'லட்சுமிப் பாட்டி தன்னை ஏன் அழைக்க வேண்டும்?' என்ற கேள்வி தோத்தாத்திரியின் மனத்தில் தோன்றிச் சிறிது நேரம் அலைக்கழித்தது.

'நம்ம பையன் அசமஞ்சம் வெங்கடாத்திரி ஏதாவது விஷமம் பண்ணியிருப்பான். அவனுக்கு லட்சுமி மகள் சீதாவிடம் ரொம்பப் பிரீதி! சீதாவிடம் ஏதாவது வம்பு செய்திருப்பானோ? காரணம் இல்லாமல் லட்சுமி அழைத்திருக்க மாட்டாளே! ஏதோ காரணம் இருக்கு...! போய்க் கேட்டுட்டா போவுது... ஏ! ராமா! ஒரு ஜடம் எனக்கு இப்படி மகனாகப் பிறக்கணுமா?' என்று மனசுக்குள் குமைந்து கொண்டே தோத்தாத்திரி லட்சுமிப் பாட்டியின் வீட்டுக்குள் நுழைந்தார்.

''வாங்கோ மாமா! உட்காருங்கோ! இதோ, வந்துட்டேன்....'' என்று அகமும் முகமும் மலரத் தோத்தாத்திரியை வரவேற்ற லட்சுமிப் பாட்டி அடுக்களைப் பக்கம் திரும்பி, ''சீதா, அந்தக் கடிதத்தைக் கொண்டாடி!'' என்று கட்டளையிட்டு விட்டு, அவரை விசுப் பலகையின் மேல் அமரும்படி கையசைத்துவிட்டு, அவர் எதிரில் தரையில் அமர்ந்தாள்.

அவளே பேசினாள்:

''மாமா! விஷயம் முற்றிப் போறதுக்கு முன்னே உங்களுக்குச் சொல்லிப்பிடறேன். நீங்கள்தான் என் மகள் சீதாவுக்கு எந்தவிதமான பங்கமும் நேராமல் காப்பாத்தணும்.''

''லட்சுமி நீ என்ன சொல்றே?'' பதற்றத்துடன் அழைத்த காரணத்தை அறியும் ஆவலில் கேட்டார் தோத்தாத்திரி.

''ஊரும் உலகமும் உங்கள் மகனைப் பித்துக்குளின்னு சொல்றதுகள்; நீங்களும் அவனை அசடு என்கிறீர்கள்! நானும் வெங்கிடாத்திரியை ஒரு அசமஞ்சப் பிறவின்னுதான் நினைச்சுண்டிருந்தேன். ஆனால் அவன் செய்திருக்கிற வேலை இருக்கே, ஒரு பித்துக்குளி செய்யற வேலையில்லே! என் மகள் சீதாவுக்குக் காதல் கடிதம் எழுதியிருக்கான்! பெருமாள் கோயில் பிராகாரத்திலே ஒளிஞ்சிண்டிருந்து, இவள் வலம் செய்துண்டு வீட்டுக்குத் திரும்பறபோது, கையைப் பிடிச்சுக் கண்ணிலே ஒத்திண்டு, இந்தக் கடிதத்தைக் கொடுத்து விட்டு ஓடி விட்டானாம். இதை நீங்கள் நம்புகிறீர்களா?'' என்று பேச்சை முடிக்காத முன்பே, அந்தக் கடிதத்தைக் கொண்டு வந்து தன் தாயார் லட்சுமியிடம் கொடுத்து விட்டு அறைக்குள் சென்று மறைந்தாள் சீதா.

''இந்தாங்கோ, மாமா! கடிதத்தை வாசிச்சுப் பாருங்கோ....'' என்று சொல்லியபடி லட்சுமி நீட்டிய கரத்திலிருந்து கடிதத்தை எட்டி வாங்கிக் கொண்டார் தோத்தாத்திரி. கடிதத்தை வாங்கும்போது அவர் மனமும், கையும் நடுங்கின. 'காதல் கடிதம் என்றால் எப்படி இருக்கும்?' என்று அறியும் ஆவலும் அவர் மனத்தின் அடித்தளத்திலிருந்து எழாமல் இல்லை.

ஆவல், அச்சம், நாணம் பீதி எல்லாம் ஒன்றோடொன்று அவர் மனத்தில் பின்தொடரக் கடிதத்தைப் பிரித்தார். இரண்டு மூன்று வரிகளே இருக்கும் என்று எண்ணிய அவர் மனம் ஏமாற்றமடைந்தது; மூன்று பக்கங்கள் கொண்ட ஒரு



காதல் கடிதத்தைப் படிக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் — சங்கடத்தில் தள்ளிவிட்டு விட்டதற்குத் தம்மையே நொந்துகொண்டு படிக்கத் தொடங்கினார். அவர் மனம் வழி கண்கள் ஓடின. கடிதத்தின் ஆரம்பமே ரம்மியமாகத்தான் இருந்தது. மேலே தொடர்ந்தார்:

''சீதா!

லோக வாழ்க்கை பூரணத்துவம் பெறணும்னு, ஆண் பெண் என்ற ஜன்மங்கள், சதிபதி என்ற உறவில் பிணைப்புண்டு வாழணும்! இந்த உலகத்திலே சதிபதியாக வாழ்கிறவர்கள். வாழ்ந்தவர்கள் வாழ்க்கையெல்லாம் பூரணத்துவம் பெற்றதில்லேன்னுதான் தோன்றுகிறது!

இந்தக் கசப்பான வாழ்க்கையிலிருந்து ஒதுங்கி, ஞானிகள் என்று சொல்லிக் கொண்டு திரிகிறார்களே, அவர்கள் நினைக்கிற தனித்துவ வாழ்க்கையில்தான் பூரணத்துவம் நிறைந்திருக்கிறதா? பூரணம் பெற முடியாத பாதி வாழ்வை எப்படிப் பூரணத்துவம் பெற்றதுன்னு சொல்ல முடியும்? இதுவும் தப்பு!

தாடி, மீசை, சடைமுடி, காவி, கமண்டலத்தோடு—மனைவி, மக்களை, உறவினர்களை உலகத்தை உதறித் தள்ளி விட்டு, பந்த பாசத்தை வெறுத்துவிட்ட நினைப்பில், காட்டிலே பற்றற்ற துறவிகள் என்று பெயர் பண்ணிக் கொண்டு வாழ்கிறார்களே. அவர்களும் தனித்துவ வாழ்க்கையில்தான் பூரணத்துவம் நிறைஞ்சிருக்குதுன்னு சொல்கிறார்கள். இவர்களுடைய வாழ்க்கையும் பாதி பூரணத்துவம் பெற்றதுதான்.

மனத்தைக் கட்டுப்படுத்தி, ஸ்ரீ ராமபிரானின் திருநாமத்தைத் தியானம் பண்ணிக் கொண்டு, எந்த உயிர்க்கும் தீங்கு நினைக்காமல் அறம் செய்து கொண்டு வாழ்கிற வாழ்க்கையில்தான் மனிதப் பிறவி எடுத்த பெரிய பயன் உலக வாழ்க்கையின் மூலம் பூரணத்துவம் நிறைஞ்சிருக்கு! இதை யாரும் நம்பலே! நான் நம்பறேன்! அதனாலேதான் நான் அவர்களுக்கெல்லாம் 'பித்துக்குளி'யாகத் தோன்றுகிறேன்!

சதிபதி வாழ்க்கைக்குக் காதல் அவசியம்! இந்த லோகத்திலே காதல்னு வெறும் உடலுறவையும், பணக் குவியலையும் பார்த்து மயங்கிச் சில நிமிட நேரங்களில் மனித வெறியைத் தணிக்கிறதுதான்னு நினைக்கிறார்கள். இதுவா காதல்?......இது காமம்.

காதல்னு ஆண், பெண் என்ற இரண்டு ஆத்ம நெஞ்சங்களின் உயிர்த் தொடர்பு! இன்ப வேதனைத் துடிப்பு! ஒருமுக நினைப்பின் இணைப்பு! பந்த பாசங்களின் தவிர்ப்பு! தெய்வீகமனத்தின் பிரதிபிம்பம்! இதுதான் காதல்.

சீதா! உன் மேல் எனக்கு ரொம்ப நாட்களாகக் காதல்! இந்த ஊரே என்னைக் கேலி பண்ணினாலும். நீ ஒருத்திதான் எனக்கு இரக்கம் காட்டுகிற மாதிரி பார்க்கிறதாலே மனத்தைச் சந்தோஷப்படுத்திக்கிறேன். அதனாலேதான் வாழுறேன். என்னைக் கட்டிக் கொண்டால் எப்படி நம்மைக் காப்பாத்துவான்னு நினைக்காதே! நம்மையெல்லாம் எப்படிக் காப்பாத்தணும்; நாமெல்லாம் எப்படி வாழணும் என்கிறதெல்லாம் நம்மைப் படைச்சவனுக்குத் தெரியும். நீ கவலைப்படாதே!

இந்த ராத்திரி சுவாமிக்குத் திருமஞ்சனம் சாத்தறப்போ, நம்ம கல்யாணத்தை முடிச்சுடணும்! நீ சம்மதிச்சா ஒரு வார்த்தை என் அப்பாவையும், அம்மாவையும் கேட்டு அவர்கள் சம்மதத்தையும் வாங்கிடறேன். அவர்கள் சம்மதிக்கலேன்னு நம்ம கல்யாணம் நின்னுடாது! இந்த ராத்திரியே நடக்கும்.

பெருமானைச் சேவிக்க வரும் போது நீ எனக்குப் பதில் சொல்லணும். நான் சாயந்திரம் பெருமான் சந்நிதியிலே உனக்காகக் காத்துக் கொண்டிருப்பேன். அன்புள்ள,

வெங்கடாத்திரி''

கடிதத்தைப் படித்து முடித்த தோத்தாத்திரியின் கண்களிலிருந்து கனல் பறந்தது; மான உணர்ச்சி உடலையும், நெஞ்சையும் பிடுங்கித் தின்றது. தலையில் கையை வைத்துக் கொண்டு, குனிந்து தரையை உற்றுப் பார்த்துக் கொண்டு மனத்தை அலைய விட்டார். கடிதம் காற்றில் ஆடியது.

சீதா வீட்டைக் கூட்ட ஆரம்பித்தாள்.

''என்ன மாமா! அப்படியே மலைத்துப் போய் விட்டீர்கள்?'' லட்சுமியின் குரல் தோத்தாத்திரியை உலுக்கி விட்டது.

லட்சுமி தொடர்ந்து பேசினாள்: ''எனக்கு வெங்கடாத்திரி மேலே கோபம் இல்லே, மாமா! வருத்தமும் இல்லே. சீதாவுக்கும்



அவனை மணந்துகொள்ளப் பூரண சம்மதம் தான்னு நினைக்கிறேன். இது எனக்குத் தெரியாது போய்விட்டது. தெரிந்திருந்தால் சீதாவுக்குச் சேஷிப் பாட்டியின் பேரனை நிச்சயம் பண்ணியிருக்க மாட்டேன். அந்த நிச்சயம் பண்ணலேன்னு சீதாவை வெங்கிடாத்திரிக்குத் தாரை வார்த்துக் கொடுத்து விடுவேன். சீதாவை வெங்கிடாத்திரி இந்த ராத்திரியே கல்யாணம் செய்துக்குவான் போல இருக்கு. அது நேராமல் பார்த்துக்க வேணும்.''

''ஆகட்டும்; லட்சுமி! நான் அவனைக் கண்டிக்கிறேன்.''

''மாமா! மன்னிச்சுக்குங்கோ! அவரைக் கண்டிக்காதீர்கள். அவருக்கு அன்பு காட்டுகிறவர்கள் யார் இருக்கிறார்கள்? அவர் மனசையும், அறிவையும் புரிந்து கொண்டவர்கள் யார் இருக்கிறார்கள்? அவருடைய கள்ளமில்லா உள்ளத்தின் பேரில் என் மனசைப் பறிகொடுத்து விட்டேன். அவரை மனத்தில் கொண்டு அவருக்குச் சேவை செய்கிற பாக்கியம் கிடைக்குமான்னு எதிர்பார்க்கிறேன். நான் அவரைத்தான் மணந்து கொள்வேன்'' என்று திடீரென்று ஆவேசம் வந்தவள் மாதிரி பேசினாள் சீதா.

தோத்தாத்திரி துணுக்குற்றார். ''பார்த்தீர்களா, மாமா! இது மாதிரிதான் அடிக்கடி பேசுகிறாள். நிச்சயம் பண்ணின இடம் என்னவாகிறது? நம்ம மானம் எங்கே போகிறது?'' என்று தன் தலையில் அடித்துக் கொண்டாள் லட்சுமி.

''சீதா! திருமணம் என்கிறது சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகிற ஒன்று! உனக்குக் கணவனாக வரச் சேஷிப் பாட்டியின் பேரனுக்குத்தான் தகுதி: அதனாலே உன்னை அவனுக்குத் தாரை வார்த்துக் கொடுக்க நிச்சயம் பண்ணியாகி விட்டது. நிச்சயம் செய்த ஒன்றை மாற்றமுடியாது. வேண்டாம் இந்தப் பிடிவாதம்'' என்றார் தோத்தாத்திரி.

''உங்கள் நிச்சயத்தை உடைப்பிலே கொண்டு போய்ப் போடுங்கள். எனக்குச் சொர்க்கத்தில் நிச்சயம் பண்ணின வரன் சேஷிப் பாட்டியின் பேரனல்ல! எனக்கு நன்றாகத் தெரிகிறது. நீங்களே பாருங்க'' என்று பொரிந்து தள்ளிவிட்டு விருட்டென்று உள்ளே சென்றாள் சீதா.

''கேட்டீங்களா, மாமா! எப்படியாவது சேஷிப் பாட்டியின் பேரனுக்கும் சீதாவுக்கும் திருமணம் முடிகிற மட்டும் நீங்கள் உங்கள் மகனைக் கவனிச்சிண்டிருங்க.''

''ஆகட்டும், லட்சுமி!'' என்று சொல்லி விட்டு விடு திரும்பினார் தோத்தாத்திரி.

சங்கரா முடியபடி இரண்டு கரங்களையும் சிரம் மேல் குவித்துப் பக்தி சிரத்தையோடு பாடிக் கொண்டிருந்த மகனைப் பிடித்து உலுக்கினார் தந்தை.



தூக்கக் கலக்கத்திலிருந்து விழித்தவன் போல், கனவுலகத்திலிருந்து 'தொபுகடீர்' என்று விழுந்து விட்டவன் மாதிரி கண்களைத் திறந்தான் பித்துக்குளி. சிரம் மேல் குவிந்த கரத்தைத் தாழ்த்திக் கொண்டான்.

''என்னப்பா! அழைத்தீர்களா?'' அசடு வழிய நாணித் திண்ணையிலிருந்து குதித்து எழுந்து நின்றான் வெங்கிடாத்திரி.

''வெங்கிட்டு! என்னடா இதெல்லாம்? பித்துக்குளியாட்டம் கத்திண்டு.'' பரிதவிப்போடு பாசம் பொங்கும் குரலில் கேட்டுக்கொண்டே அவனைக் கையைப் பிடித்துக் கொண்டு, 'உள்ளே வாடா'' என்றார்.

உருவத்தோடு செல்லும் நிழல் போல் ரேழியைக் கடந்து அவரைப் பின் தொடர்ந்தான் வெங்கிடாத்திரி.

''வெங்கிட்டு! நீ பித்துக்குளி இல்லே! மகா புருஷன்! ஞானி! பேராதமா? ஆனால் உன்னை என்னாலேயும் புரிஞ்சிக்க முடியல்லே; இறந்து போன உன் அம்மாவாலேயும் புரிஞ்

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும் புதுமையுடனும் இருங்கள்



உன்னதமான காஷ்மீர் பொக்கேயின் தரம், ஒரு அழகுசாதன டால்க்... ஒரு குழந்தைக்கான பவுடர் இவ்விரண்டையும் அளிக்கிறது.

காஷ்மீர் பொக்கே டால்க்கின் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தை நீங்கள் உணரும்பொழுது ஒரு பூச்செண்டிற்குள் இருப்பது போலவே தோன்றும். உடல் முழுவதும் தடவிக் கொண்டு அதன் ஊற்றுப்பெருக்கென எழும் புதிய நறுமணத்தில் திளைத்து மகிழுங்கள்



குழந்தையை இதமுடனும் சுகமுடனும் வைத்திருங்கள். காஷ்மீர் பொக்கே, எந்த ஒரு விசேஷ குழந்தைக்கான பவுடரைப் போலவே, மிருதுவும் பட்டுப்போன்றதுமானது. நீங்கள் இருவருமே உபயோகிக்கக்கூடிய அவ்வளவு சௌகரியமான ஒரே பவுடர்!




# காஷ்மீர் பொக்கே

டால்கம் பவுடர்—ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ளது!

சிக்க முடியல்லே; லோகத்துக்கும் உணர முடியல்லே! உன் மனம் போனபடி வாழ்ந்துட்டுப் போ. என்னை மட்டும் உன் தகப்பன் என்ற உறவால் தலை குனிய வைக்காதே!'' என்று பாசத்தின் பிடியில் சிக்கித் துக்கத்தால் தொண்டை அடைக்கச் சொன்னார்.

''எதையும் விவரமாகச் சொன்னால்...''

''சீதாவை இந்த ராத்திரி அழைத்துக் கொண்டு போகப் போறியாமே? அவள் தகப்பன் அன்பு தெரியாமல் வாழ்ந்தவள்..... லட்சுமிப் பாட்டிதான் அவளுக்கு உயிர். அவளை எங்கே அழைத்துக் கொண்டு போகப் போறே?'' என்று கேட்டார்.

''ஓ! அதுவா? சுவாமி சந்நிதிக்கு!'' என்று சொல்லியபடி வெட்கத்தால் முகத்தை மூடிக் கொண்டான் பித்துக்குளி.

''ஏன்?....''

''இதுகூடத் தெரியாதா? நான் அவளைக் கல்யாணம் பண்ணிக்கப் போகிறேன்'' என்று குழந்தைத்தன சுபாவத்தோடு கள்ளமில்லா உள்ளம் பொங்கும் சிரிப்பை உதிர்த்து விட்டு, பித்துக்குளிக்கே இயல்பான நடையில் தந்தையின் பதிலுக்குக்கூடக் காத்திராமல் பெருமாள் கோயிலை நோக்கிப் பறந்தான்.

''மாமா! என் ஆசையிலே மண் விழுந்து விட்டது மாமா! பகவான் என்னையும், சீதாவையும் சோதனை பண்ணிட்டார் மாமா!'' என்று அரற்றியபடி, கண்கள் குளமாக வீடே அதிர்ந்து போகும்படி ஒப்பாரி பாடிக் கொண்டு, பெரிய சரீரத்தைச் சுமந்தபடி தோத்தாத்திரியின் ரேழியைக் கடந்து வேகமாக வந்தாள் லட்சுமி.

''லட்சுமி, என்ன நடந்தது?''

''சீதாவுக்கு நிச்சயம் பண்ணிய சேஷிப் பாட்டியின் பேரன் ரயில்லே மாட்டிண்டு இறந்து விட்டானாம். அவர்கள் சொல்லி அனுப்பினார்கள். பகவான் என்னைச் சோதனை பண்றார், மாமா! நான் போய் அவள் இருக்கக் கூடாதா?''

''ஏன் ரயில்லே மாட்டிண்டானாம்? தற்கொலையா?''

''ஆமாம், மாமா! தற்கொலைதான்!''

''ஏன் தற்கொலை செய்து கொள்ளணும்?''

''உங்க மகனுக்கும் சீதாவுக்கும் முடிச்சுப் போட்டு வைத்து யாரோ கற்பனை பண்ணித் தூற்றியிருக்கிறார்கள். கற்பு தவறி விட்ட பெண்ணைக் கட்டிக்க முடியாதுன்னான் அந்தப் பித்துக்குளி. அவன் தகப்பனார், தாயார், பாட்டி எல்லாரும் எவ்வளவோ சொல்லியும் அவன் கேட்காமல் பொன்னேரிக் கரை ரயில் பாலத்தின் அடியில் தலையைக் கொடுத்து விட்டானாம்!''

''ஐயையோ என்ன அநியாயம்!... ராம...ராம்!'' என்று சொல்லியபடி காதுகளைப் பொத்திக் கொண்டார்.

''மாமா! வருத்தப்படாதீங்கோ! வெங்கடாத்திரிக்குன்னு சீதா பிறந்திருக்கிறாள். அவன் எப்படி அவளை மணந்து கொள்வான்?'' வரன் போன துக்கத்தை மாற்றி மனத்தைத் தேற்றிக் கொள்ள ஆரம்பித்தாள் லட்சுமி.

''லட்சுமி! சீதாவை வெங்கடாத்திரிக்கா கொடுக்கப் போகிறே? அவன் பித்துக்குளி! அவனை நம்பிச் சீதாவைக் கொடுத்துவிடாதே.



'' நம் இரவுப் பாராக்காரனும் எல்லாவற்றையும் விரட்டிவிட முடிகிறது— அவனுக்கு வரும் தூக்கத்தைத் தவிர!''

அதை விடச் சீதாவை ஒரு பாழும் கிணற்றில் தள்ளினாலும் நான் சம்மதிப்பேன்.''

''மாமா! மாமா! உங்களால் வெங்கடாத்திரியைப் புரிஞ்சுக்க முடியல்லே. சீதா மேலே அவனுக்கு உயிர் மாமா. கொள்ளை ஆசை மாமா. எனக்குத் தெரியும். அவன் சீதாவைக் கண்கலங்க விடாமல் பார்த்துக் கொள்வான். இப்படியே பித்துக்குளியாகவே இருக்க மாட்டான், பாருங்களேன்! அவன் ஞானி மாமா. மாமா! அவனும், அவளும் விரும்பியபடியே முகூர்த்தத்தை நடத்தி விடுவோம்'' என்று தாய்மை உணர்வு பொங்க அவரிடம் வேண்டினாள் லட்சுமி.

முகத்தைச் சுளித்துப் புருவங்களை நெறித்து உதடுகளைக் குவித்துக் கைகளால் தாடியை நிமிண்டிக் கொண்டிருந்தார் தோத்தாத்திரி. குடும்பத்தின் எல்லையில் அவர் மனம் தத்தளித்து நின்றது. விடை தெரியாமல், பதில் உரைக்க வார்த்தைகள் பிடிபடாமல் மனத்தை அலையவிட்டார். தூணைப் பிடித்துக் கொண்டு பெருமூச்சு விட்டார்.

இருவரிடையே அமைதி நிலவியது.

திடீரென்று கேட்ட வெங்கடாத்திரியின் குரல் இருவரையும் திடுக்கிட வைத்தது.

''மாமி! என்னை மன்னித்து விடுங்கள் மாமி! அப்பா! நான் அபசாரம் செய்து விட்டேன், அப்பா! நீங்கள் பேசினதை யெல்லாம் ரேழியிலே நின்னு கேட்டேன். சீதா வேறு ஒருத்தனுக்கு நிச்சயிக்கப்பட்டுட்டான்னு எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் அவள் மேல் எனக்கு ஆசை விழுந்திருக்காது; கடிதமும் எழுதியிருக்க மாட்டேன்.

''சீதா இப்போது வேறு ஒருத்தனின் மனைவி. சேஷிப் பாட்டி பேரனின் மனைவி! மாங்கல்யதாரணம் செய்தால்தான் அவள் மனைவி என்கிறதில்லே. நிச்சயம் பண்ணினாலே, அவள் அவன் மனைவி என்கிற ஸ்தானத்தை ஏற்றுக் கொள்கிறாள். ஏற்றுக்கணும்.

''இந்த உலகத்திலே ஒருத்தனுக்கு ஒருத்தி தான் மனைவியாக இருக்கணும்; ஒருத்திக்கு ஒருத்தன்தான் கணவனாக இருக்கணும். இது தான் மநுதர்மம்! என்னால் இந்த மநுதர்மத்தை மீற முடியல்லே! வேறு ஒருத்தன் மனைவி மேலே—சீதா மேலே பிரியப்பட்டேன் பாரு, அது துரோகம்; பெரிய பாவம்! அதனால் நான் பிரம்மச்சரிய தர்மத்திலிருந்து தவறி விழுந்து, சம்சார சாகரத்திலே மூழ்கிய இரு கல்தனுமி விட்டேன்! ஒரு பெண்ணைத் தொட்டுத் தாலி கட்டி, அவளோடு இன்பம் அனுபவித்தால் தான் பிரும்மச்சாரி இருக்கன்

துறவி விடுகிறான் என்கிறதில்லே! ஒரு பெண்ணை மனத்தாலே நினைத்தாலே பிரம்மச்சரிய நிலையிலிருந்து மாறிவிட்டதாகத் தான் அர்த்தம்; அவள் கற்பு நிலை தவறி விட்டாள்னுதான் அர்த்தம்.

"சீதாவை நான் ஏற்றுக் கொள்ளத் தகுதி இல்லாதவன் அவளும் என்னை ஏற்றுக் கொள்வது தப்பு; பெரிய பாவம்! நான் மனத்தளவில் மனைவியை இழந்தவன்; அவளும் மனத்தளவில் கணவனை இழந்த விதவை! எங்களுக்கு வேறு கல்யாணம் வேண்டாம். நான் வேறு கல்யாணம் செய்து கொண்டால் தெய்வ நெறியிலிருந்து – மநு சாஸ்திரத்திலிருந்து தவறிவிட்டவனாக ஆவேன். சீதாவுக்கும் வேறு இடத்திலே மணம் முடிக்க வைத்தீர்களானாலும் சேஷிப் பாட்டியின் பேரனுக்கும், பெண் குல தர்மத்துக்கும்–கற்பு என்ற புனிதப் பெயருக்குமாக துரோகம் செய்த பாவத்தைத் தேடிக் கொண்டவராவீர்கள். மாமி! அப்பா! நான் இனி இந்த ஊரிலேயே இருந்தால் சீதா கெட்டு விடுவாள். நானும் கெட்டுக் குட்டிச்சுவராயிடுவேன். அதனாலே நான் இந்த ஊரை விட்டு க்ஷேத்திராடனம் செய்யப் போகிறேன். என்னை ஆசிர்வதித்து வழியனுப்புங்கள்....."

இவ்வாறு கூறி வெங்கடாத்திரி குனிந்த தலை நிமிராமல் இருவரையும் வணங்கி எழுந்தான். எழுந்து நின்று, உடலில் படிந்த புழுதியைத் தட்டிவிட்டுப் பாசத்தையும் நேசத்தையும் உதறித் தள்ளிவிட்டு பிரும்மச்சரிய நிலையிலிருந்து தவறிவிட்ட பாவத்துக்கு வருந்தி, உஞ்சவிருத்திப் பாத்திரத்தைக் கையில் ஏந்தியபடி உருக்கத்துடன் பாடிக் கொண்டு வீதி வழியே கால் போனபடி மிக அமைதியாக நடந்தான் பித்துக்குளி.

தந்தையும், மாமியும், மரமாய், கல்லாய் ஜடமாய் நின்றார்கள்

பித்துக்குளியின் பாட்டு வீட்டினுள்ளேயிருந்த சீதாவை வீதிக்கு இழுத்து வந்தது. நிச்சயிக்கப்பட்ட வரன் தவறியதைப் பற்றி சந்தோஷப்பட்டு, தனக்குச் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்பட்ட கணவன் பித்துக்குளிதான் என்று நிச்சயம் பண்ணிக் கொண்டு, அவனோடு எப்படி வாழலாம், அவனை மனிதனாக ஆக்குவது எப்படி என்றெல்லாம் கற்பனை செய்து கொண்டிருந்த சீதாவைப் பித்துக்குளியின் பாடல் பிரமிக்க வைத்துவிட்டது.

இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்த நிலா வெளிச்சத்தில், பாதி கண்களை இமைகளால் மூடியும், மூடாமலும், மெய்ம்மறந்த நிலையில் தான் ஏதோ ஒரு பெரிய பாவத்தைச் செய்து விட்டு அதற்காக வருந்தும் பாவத்தில், அந்த அக்ரகாரத்து வீதியில் நடந்தான் பித்துக்குளி.

இந்தக் காட்சியைக் கண்ட அக்கிரகாரத்துக் குடும்பங்கள், தங்கள் தங்கள் நெஞ்சங்களில் ஆச்சரியக் குறியைப் போட்டுக் கொண்டு வியந்தன.

சீதாவின் வீட்டைக் கடந்தான் பித்துக்குளி. சரேலென்று வீட்டிலிருந்து தெருவுக்குப் பாய்ந்து, பித்துக்குளி முன்னால் போய் அவன் காலடிகளில் விழுந்தாள் சீதா.

துணுக்குற்றான் பித்துக்குளி. பாட்டு நின்றது; உஞ்சவிருத்திப் பாத்திரத்தில் தானம் போடுவதும் நின்றது!

சற்று முன்பு வியந்த அக்கிரகாரத்துக் குடும்பங்கள் இக்காட்சியைக் கண்டதும் 'கொல்' லென்று சிரித்தன. ஏதோ தெருக்கூத்து–நாடகம் பார்ப்பது போல் பார்த்தன.

"சுவாமி! நானும் உங்களோட வந்து விடுகிறேன்" என்றாள் சீதா.

"சீதா! என்னோடு நீ வருவதானாலும் நீ ஒரு விதவை என்ற எண்ணத்தோடு, சேஷிப்பாட்டியின் பேரனை உன் கணவனை இழந்த துக்கத்தோடு, என் சிஷ்யை என்ற உணர்வோடு, ஸ்ரீராமபிரானைத் தியானம் பண்ணிக்கொண்டு வரணும்! முடியுமா உன்னால்?....." பித்துக்குளியின் குரலில் தெளிவு இருந்தது.

சீதா மௌனத்தின் சமாதி நிலையை அடைந்தாள்.

"சீதா! உன்னாலே என்னோடு வர முடியாது. என்னைப் பற்றி நீ மறந்துவிடு; மறக்கணும்! அடுத்த பிறவியிலே உனக்கு நம் பிக்ஷையிருந்தால் இருவரும் ஒன்றாக இருப்போம். பகவத் கீதையைப் பாராயணம் பண்ணு. ஸ்ரீ ராமபிரான் உனக்கு அருள் பாலிப்பார்" என்று தவமுனி போல் சொல்லி விட்டு வேகமாக மனத் திண்மையோடு நடந்தான் பித்துக்குளி.

கணவனைத் துறந்த துக்கத்தால் புடவைத் தலைப்பால் தன் வாயைப் பொத்திக் கொண்டாள் சீதா.

சீதாவின் கணவன் யார்? சேஷிப் பாட்டியின் பேரனா? பித்துக்குளியா?

சீதாவின் கண்களிலிருந்து அவன் மறைந்தான்! ஆனால் அவள் மனத்தில்.....?

# 'ஸேப்டி டிரைவ்' கொண்டு அபாயமின்றி ஓட்டுங்கள்

சியெட் டயர்களின் பிரத்தியேக மான மெத்தை போன்ற இயங்கும் தன்மை மோட்டார் ஓட்டுவதை அதிக சுக மாகவும் அபாயமின்றியும் செய்கிறது





“ஸைப்ஸ்”—டிரெட்டில் காணப்படும் சிறிய வட்டமான குழிகள்—மிக நன்கு ரோடைப் பிடித்துக் கொள்வதால் அதிகப்படியான பாதுகாப்பை அளிக்கின்றன. இந்தப் “பாதுகாப்பு வளையங்கள்” சியெட்டின் தனிப்பட்ட ஆழ்ந்த டிரெட் அமைப்புடன் இணைந்து பரிபூரணமாய் ஓட்டுவதற்கான தன்னம்பிக்கையைத் தருகின்றன.

# சியெட் டயர்ஸ்
## ஆப் இந்தியா லிட்.

# சிரிப்பும் அழுகையும்

சோபாவில் நன்றாகச் சாய்ந்து கொண்டு புதிதாகச் சுவரில் இடம் பெற்றிருக்கும் ஓவியத்தை ஸ்ரீமதி வாஞ்சி உற்று உற்றுப் பார்த்தாள். எத்தனை தரம் எப்படிப் பார்த்தாலும் அதில் எந்த விதமான கலை அழகும் புலப்படவில்லை.

நாலு வயசுக் குழந்தை கரியால் பூதம் வரைந்தாற் போல், அலட்சியமான வளை கோடுகளால் ஆன தலை. இரண்டு பெரிய கண்கள். பெரிய மூக்கு வாய். ஒரு பாதி முகம் நிழலடித்துக் கிடக்கிறது. இன்னொரு பாதியில் வெளிச்சம். வெளிச்சமான பக்கத்துக்குரிய பாதிக் கண், பாதி உதடு, எல்லாம் ஏதோ பைத்தியத்தைக் கண்டு நகைக்கும் கேலிச் சிரிப்பில் மலர்ந்திருக்கின்றன. இன்னொரு பாதியில் உள்ள கண்ணில் கண்ணீர்த் துளி சொட்டிக் கொண்டிருக்கிறது. பூதம் போல் ஒரு படம்.

அழகிய கடற்கரைக் காட்சிகள், மலர்க் குவியல்கள், மனம் கவரும் எழில் கொண்ட மங்கையரின் கோலங்கள் ஆகிய ஓவியங்களை விட, இதில் என்ன அழகு இருக்கிறது? இதற்கு விலையோ ஆயிரக் கணக்கில்!

குஸுமாவின் கலை ஆர்வம் திடீரென்று பொங்க ஆரம்பித்ததும், மேநாடு சென்றிருக்கும் தன் தந்தையிடம், "பிக்காஸோவின் ஓர் உயர்ந்த ஓவியம் வாங்கி அனுப்ப வேண்டும்" என்று கட்டளை இட்டாள். வாஞ்சி இதை வாங்கி அனுப்பியிருக்கிறார்.

உடல் குறையாத பருமனுடன் நகைக் கடை, புடைவைக் கடை, சங்கீதக் கச்சேரி என்று கூடி அவ்வப்போதைய மோஸ்தர்களைப் பற்றிப் பேசுவதும், மக்களையோ, கட்டியவரையோ குறித்துப் பெருமை அடித்துக் கொள்ளுவதுமாகப் பொழுதைக் கழிக்கும் ஸ்ரீமதி வாஞ்சியைப் போன்ற நடுத்தர வயதுப் பெரிய இடத்துப் பெண்மணிகள் பலர் அந்தப் படத்தைப் பார்த்ததும் அதிசயத்தைக் காட்டாமலில்லை.

"இதற்கு விலை என்ன தெரியுமோ? குஸும் 'பிக்காஸோ பெயிண்டிங்' கேட்டாள் என்று அவள் அப்பா வாங்கி அனுப்பியிருக்கிறார். கலையென்றால் உயிரைக் கொடுத்து விடுகிறாள் வரவர. இப்போதுகூட மகிளா சங்கத்துக் கலைப் பொருட் காட்சிக்காக அலையப் போயிருக்கிறாள். என்ன செய்வது?" என்று பெருமையோடு ஒரே மகளைக் குறித்து அங்கலாய்த்துக் கொண்டாள் ஸ்ரீமதி வாஞ்சி.

"எங்க சுந்தர்கூட இப்படித்தான் அமெரிக்கா போய் விட்டு வந்த போது 'பிக்காஸோ பெயிண்டிங்'காகவே வீடு முழுதும் நிரப்ப வாங்கி வந்து விட்டான்" என்று அவர்களில் ஒருத்தி பெருமையடித்துக் கொண்டாள்.

"என்றாலும் அவன் பெயிண்டிங் என்றால் அதுதான் கலை. என்ன அற்புதம்!" என்று ஒருத்தி பாராட்டினாள்.

அற்புதம் தெரிந்தால்தான் பாராட்ட வேண்டுமா என்ன? தனக்குப் புரிகிறதோ புரியவில்லையோ, பாராட்டுவதில் தவறில்லையே? பெரிய தொழிலதிபர். மேநாட்டுப் பிரயாணத்தின் போது. ஒரே அருமை மகளுக்கு அந்தப் படத்தை வாங்கிக் கொடுத்திருக்கிறார் அதில் கலை அம்சம் இல்லாமல் எப்படி இருக்க முடியும்?

குஸுமாவின் அத்தனை தோழிகளும், ஜீன்ஸ் அணிந்த நாகரிகக்காரி நளினாவிலிருந்து கைத்தறிச் சேலை உடுத்தும் கல்யாணி வரை வந்தார்கள். 'ஆகா! இதுதான் பிக்காஸோ பெயிண்டிங்கா! என்ன ஸ்ட்ரோக்ஸ் போ! வொண்



சே. மித்ரா

டர்ஃபுல்!'' என்றனர். ''உன்மீது பொறுமை குணாம். எங்கண்ணா கூடத்தான் காண்டி னெண்ட் சுற்றிவிட்டு வந்தான். ஒரே மெஷினரி மயம். இது போல் ஒரு ஆர்ட் பீஸ் கிடை யாது!'' என்று ஒருத்தி பெரு மூச்சு விட்டாள்.

எல்லாரும் 'வொண்டர்புல்' என்கிறார்கள். ஆனால் ஒருவராவது உண்மையைச் சொல்ல வில்லை. அப்பாவுக்கும் கலைக்கும் எத்தனை தூரம் என்பதைக் குணாமா அறிவாள். 'பிக்காஸோவின் அன்னைமய ஓவியம்' என்று குறிப் பிட்டு அவன் கேட்டிருந்தான். அது வந்து விட்டது. கலை கிலை என்பதெல்லாம் அவனுக் கும் கொஞ்ச நாட்களுக்கு முன்பு வரையிலும் அர்த்தமில்லாத சொற்களாகத்தான் இருந்





ஜோசியர்: இரு! இரு! உன்னை ஒரு கை பார்த்துக்கிறேன்!
பழக்காரன்: அதிகமாகப் பேசினே, உன் தோலை உரிச்சுடுவேன்!

---

தன்; அதாவது நிரஞ்சனனைப் பார்க்கும் வரையிலும்.

கோடீசுவர ஆலை முதலாளி குருதாஸின் செல்வ மகன் நிரஞ்சனன். பத்து வருஷங்கள் மேல்நாட்டிலிருந்து கல்வி பயின்று வந்திருந்த அவனைத் தொழிலதிபர் தந்த விருந்தொன்றில் பார்க்கும் சந்தர்ப்பம் குஸுமாவுக்குக் கிடைத்தது. நல்ல உயரம். மென்மையும் பணிவும் அடக்கமும் கூடிய உருவம். ஆழ்ந்த அமைதியான கண்களும், துடிப்பான இதழ்களும், நீண்ட கைகளும் உடைய அவன் செல்வ மகள் குஸுமாவின் கருத்திலே கண்டதுமே புகுந்து விட்டான். குருதாஸ் மகனை அறிமுகம் செய்து வைக்கையில், அவனுக்குக் கலைகளில் ஈடுபாடு அதிகம் என்றும், கலைப் பொருள்களையெல்லாம் பழையவை, புதியவை என்று சேர்ப்பதே பொழுதுபோக்கு என்றும் தெரிவித்து வைத்தார்.

அப்போதுதான், ஓவியம், சிற்பம், மேல் நாடு, கீழ் நாடு என்று மண்டைக்குள் புரியாத விஷயங்களைத் திணித்துக் கொள்ள முற்பட்டாள் குஸுமா. வீட்டிலேயே ஒரு கலைப் புரட்சியை உண்டாக்கி வைத்தாள்.

உள்ளே பாசி பிடித்துக் கிடந்த தாமிரச் செம்பு, யாளி விளக்கு, வெண்கலச் செப்புக்கள், மரப்பாச்சிகள், மாக்கல் சாமான்கள் இவைகளுக்கெல்லாம் யோகம் அடிக்கலாயிற்று. போது விடிந்தால் தன் அலங்காரத்தில் முன் எப்போதும் இல்லாத சிரத்தையுடன் கவனம் வேறு செலுத்த வேண்டியிருந்தது. எனவே, இப்படி ஒரு விளம்பரம் கொடுத்தாள். தினப் பத்திரிகை ஒன்றில்:

கலையார்வம் மிகுந்த பெரிய இடத்துப் பெண் ஒருத்திக்குக் கலைப் பணியில் தினந்தோறும் நான்கு மணி நேரம் உதவி செய்யக் கூடியவளாக ஓர் இளம் பெண் தேவை. எஸ். எஸ். எல். சி. படித்திருந்து கலையில் ஈடுபாடு உள்ளவளாக இருந்தால், விண்ணப்பம் செய்து கொள்ளலாம். சம்பளம் மாதம் அறுபது ரூபாய்.

கல்யாணச் சந்தையில் நிற்கும் மாப்பிள்ளைகளுக்கு விலை கொடுக்க முடியாமல் திண்டாடும் பெற்றோர்களிடம் எஸ். எஸ். எல். சி. படித்து விட்டுக் காலம் கழிக்கும் பெண்களுக்குப் பஞ்சமா, என்ன?

தந்தையோ ஓய்வுபெற்ற தலைமைக் குமாஸ்தா. ஒரு தமக்கைக்குக் கல்யாணம் செய்த இறுக்கமே இன்னும் நல்ல மூச்சுவிடத் தளர்த்து கொடுக்கவில்லை. மேலே இரண்டு பையன்கள், கடைக்குட்டியும் மூன்றாவது பெண்ணுமாக ஒரு நான்கு வயதுச் சிறுமி.

விஜயாவுக்கு இந்த விளம்பரம் உடனே வேலையை ஒப்புக்கொள்ள ஓட வேண்டும் என்ற பரபரப்பைத் தந்ததில் ஆச்சரியமில்லை. எஸ். எஸ். எல். சி.யை முடித்து விட்டு நான்கு வருஷங்களாக, உபயோகமுள்ளதும் இல்லாததுமான மணி — பிளாஸ்டிக் நார், பிரம்பு, குரோஷே என்று பலவித வேலைகளில் பொழுது போக்கியிருக்கும் அநுபவம் போதாதா? இவையெல்லாம் கலைகள்தாமே? ஏன், சமையல் செய்வதும், அழகாக, மடிப்பாகச் சேலை உடுத்துவதும் கூடச் சொல்லப் போனால் கலைதான். நான்கு மணி நேர வேலை. அது ஒரு கஷ்டமான வேலை இல்லை.

விஜயா தெம்புடன் கிளம்பி விட்டாள், விண்ணப்பத்துக்குப் பதில் அனுப்பிய கையோடு.

மாநிறமானாலும் சிரித்த முகம். வட்டக் கண்கள். கருகமணி மாலையும் சிவப்பு நட்சத்திரங்களும், கண்ணாடி வளையல்களுமே ஆபரணங்கள். கையிலே, கறுப்புப் பிளாஸ்டிக் மணிகளில் சிவப்பு நட்சத்திரம் போட்ட பை அலங்காரமாகத் தொங்கியது.

குஸுமாவுக்குப் பார்த்த உடனே விஜயாவைப் பிடித்து விட்டது. கலை என்றும் தன்னை மிஞ்சுபவளாக இருக்கக் கூடாதே? எனவே, அந்த முன் ஹாலில் மாட்டியுள்ள ஓவியத்தைக் காட்டி, "இது யார் வரைந்தது தெரியுமா?" என்று ஒரு கேள்வியைப் போட்டாள்.

விஜயா விழித்தாள். பூதம் போல் இருக்கிறது. ஒரு வேளை இதற்குச் சரியாகப் பதில் கூறாத போனால் வேலை இல்லையோ என்ற அச்சம் பரவியது முகத்தில். "வந்து...வந்து...."

அவள் திணறியதுமே குஸுமாவின் கோவைச் சாய இதழ்களில் புன்னகை மலர்ந்தது. "பரவாயில்லை. உனக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்? இதன் விலை ஆயிரக்கணக்கில் ஆயிற்றே? பிக்காஸோ என்ற தலைசிறந்த ஓவியனைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறாயா? அவனுடைய அற்புதக் கலை இது."

அற்புதமா? இது அற்புதமா?

விஜயாவுக்கு இந்த அற்புதத்தின் உயிர் எங்கிருக்கிறது என்று புரியவில்லை. ஆனாலும்.. பரவாயில்லை என்றாளே?

'அவ்வளவாகக் கலை அறிவு இல்லாது போனாலும் பரவாயில்லை. கற்றுக் கொண்டு விடுவாய், பழக்கத்தில். வரும் மாதம் மகிளா சங்கத்தின் ஆதரவில் நடக்கவிருக்கும் ஒரு பெரிய கலைப் பொருள்களின் காட்சிக்கு நான் பழம் பொருள்களும், புது கலைத் துணுக்குகளும் சேர்த்துக் கொண்டிருக்கிறேன். இவற்றையெல்லாம் ஒழுங்காக வைத்து, அழகாகப் பாதுகாக்க எனக்கு நீ உதவ வேண்டும்.




சட்டை, வேட்டி, சேலை, ரவிக்கை, துண்டு, சிறுவரின் உடைகள் ... நம் வீட்டுத் துணிகள் எல்லாவற்றுக்கும் ஏற்ற சலவை ... வீட்டிலேயே ஸர்ப் சலவை ... வெகு இலகுவாக வெள்ளைவெளேரென்று துப்புரவாக்கும் சலவை! எல்லாம் ஸர்ப் செயல், அதன் அளவுகடந்த ஆற்றல்! இன்றே செய்வீர் ஸர்ப் சலவை ... இல்லத்திற்கான இணையற்ற சலவை!

**ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை!**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

SU. 24-X32 TM

# ஒவ்வொரு வருக்கும் போதுமான உணவு



உணவு தானியங்கள் உற்பத்தியை 7.6 கோடி டன்னிலிருந்து 10 கோடி டன்னுக அதிகரிப்பது மூன்ருவது திட்டத்தின் குறிக்கோள். இதனுல் ஒரு நபரின் சராசரி தின உணவு 16 அவுன்ஸிலிருந்து 17.5 அவுன்ஸாக உயரும்.

திட்டத்தின் குறிக்கோள்களை அடைய உதவுவோம்

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் | நாட்டினருக்கெல்லாம் நல் வாழ்வு

DA-61/745

காலையில் இரண்டு மணி நேரம், மாலையில் இரண்டு மணி நேரம். காலையில் எட்டிலிருந்து பத்து வரையிலும், மாலையில் மூன்றிலிருந்து ஐந்து மணி வரையிலும் இருக்க வேண்டும்.''

''புரிகிறது மிஸ் குஸுமா. எனக்கும் சந்தோஷமான வேலைதான்.''

''இன்றிலிருந்தே ஏற்றுக் கொள்ள வேண்டும். இன்று மாலை, கலைக் காட்சி சம்பந்தமாகப் பேச, மிஸ்டர் நிரஞ்சனன் வருவார். சின்னத் தேநீர் உபசாரம்தான். என்றாலும், இந்த அறையை வேறுவிதமாக அலங்கரிக்க வேண்டும்.....''

''இன்றே வேலையை ஒப்புக் கொள்ளத்தான் வந்திருக்கிறேன்.''

கம்பளங்களை மாற்றி, உட்காரும் ஆசனங்களை வேறுவிதமாகப் போட்டு, சுவர்ப் படங்களைப் பார்த்துப் பார்த்து மாட்டி, தாமரைப் பூக் தட்டுக்கு மெருகுபோட்டு உதவுவதுதான் அன்றைய வேலை.

பிக்காஸோ படம், அபொல்லோ சிலை உருவம், தாமிரத் தாம்பாளம், பிளாஸ்டிக் ரோஜாச் செடி என்று ஒரு கதம்பக் கலையறையை நிர்மாணித்த பெருமையில், குஸுமா எட்ட நின்று பார்த்தாள்.

ஹூம், ஐந்து மணிக்கு நிரஞ்சனன் வந்து விடுவாரே? அவள் அலங்காரம் செய்து கொள்வது அடுத்த கட்டமாயிற்றே?

விஜயாவுக்கு விடை கொடுத்து விட்டு ஒப்பனை செய்து கொள்ள அறைக்குள் நுழைந்து கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

தன்னோடு ஒத்த வயசுதான். செல்வம் குவிந்த சூழ்நிலையில்,இதெல்லாம் ஒருபொழுது போக்குப் போலும்! இதெல்லாம் ஒரு வேலை போலும்! விஜயாவுக்குச் சிரிப்பு வந்தது. அவள் பங்களாவை விட்டு வெளி வருமுன் வாயிலில் பெரிய மோட்டார் வண்டி வந்து நின்றது. அதிலிருந்து உயரமாக ஓர் ஆண் அழகன்.......

பகல் தூக்கம் போட்டு விட்டு மேல் மாடி அறையில் காப்பியருந்திக் கொண்டிருந்த ஸ்ரீமதி வாஞ்சி காரைக் கண்டு இறங்கி வருமுன், நிரஞ்சனன் வராந்தாவில் நின்ற விஜயாவைக் கண்டு வணங்கினான்.

''மிஸ் குஸுமா இருக்கிறார்களா?'' என்று கேட்டான்.

''வரச் சொல்லு. உள்ளே வந்து உட்காரச் சொல்லு!'' என்று பரபரத்து விஜயாவுக்குக் கட்டளையிட்ட ஸ்ரீமதி வாஞ்சி மகளிடம் தெரிவிக்க ஓடினாள்.

''ஐந்து மணிக்குத்தானே வருவார் என்று சொன்னான்? மூன்றரை மணிக்கே அவர் வந்து நிற்கிறாரே? குஸுமா! நிரஞ்சனன் வந்திருக்கிறாரடி.....!''

''அதற்குள்ளா? தலையலங்காரம் அரை குறையில் நிற்கிறது. முகத்தில் எண்ணெய் வழியும் பசை. இன்னும் அரை மணி ஆகாமல் எப்படிப் போய் நிற்க முடியும்?''

''உட்காரச் சொல்லம்மா. இதோ வந்து விட்டேன்!'' ஒரே அவசரம்.

விஜயா நெஞ்சு 'திடுக் திடுக்' கென்று காரணமில்லாமல் துடிக்க, சோபாவைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.



சிஷ்யன்: ஒரு சின்ன சந்தேகம். எல்லோரும் முதலில் கூஜா தூக்கித் தான் பிறகு பெரிய வித்வானாக வந்திருக்கிறார்கள் என்பது நிச்சயமா உங்களுக்குத் தெரியுமோ?

வந்தவன் அறை முழுதும் ஒரு நோட்டம் விட்டு விட்டு, புன்னகை செய்து கொண்டான். ''நீங்கள் குஸுமாவின் சகோதரியா?''

விஜயா ஒரு கணம் திக்குமுக்காடிப் போனாள். ''ஓ. இல்லை.....நான்.... நான்... இங்கே மிஸ் குஸுமாவிடம் உதவியாக வந்திருக்கிறேன். கலைக் காட்சிப் பொருள்களைச் சேகரிப்பதாகச் சொன்னார்கள்.''

''ஓகோ...?'' மறுபடியும் ஒரு புன்னகை ''உங்களுக்கும் கலை கிலை என்றெல்லாம் பைத்தியம் உண்டு போல் இருக்கிறது!''

''.......அப்படியொன்றுமில்லை....''

இவனும் அந்தப் படத்தைக் காட்டிக் கேள்வி கேட்பது போல் புரியாத கலையைப் பற்றிப் பேசினால் என்ன செய்வது என்று விஜயாவுக்குப் பயம். முதலிலேயே தெரியாது என்று சொல்லி விட்டாள்.

இதற்குள் ஸ்ரீமதி வாஞ்சி அவசரமாகத் தூங்கி வழிந்த முகத்தை ஒழுங்கு செய்து கொண்டு ஓடோடி வந்து விட்டாள்.

''மன்னிக்க வேண்டும். இதோ இப்போது வந்து விடுவாள் குஸுமா'' என்று வரவேற்றபடியே உட்கார்ந்தாள்.

''இல்லை, ஐந்து மணிக்கு என்னை அழைத்திருந்தாள் குஸுமா; தவிர்க்க முடியாத சந்தர்ப்பம் ஒன்று குறுக்கிடுகிறது. ஊர் தெரியாத அயல்நாட்டு நண்பன் ஒருவன் வருகிறான். அவனை வரவேற்க நான் நாலரை மணிக்குச் செல்ல வேண்டும். சொல்லிப் போகவே வந்தேன். மன்னிக்க வேண்டும்...''

குஸுமா வரும் வரையிலும்கூட அவனால் காத்திருக்க முடியவில்லை. போய் விட்டான்.

விஜயாவுக்கு இப்போது வேலை பழக்கமாகி விட்டது. குஸுமா சேகரித்த கலைப் பொருள்களில், விஜயாவின் பொக்கிஷங்களும் இடம் பெற்றன. அவள் போட்ட பிளாஸ்டிக் பையும் பாட்டி காலத்து நெல் மணித் தாம்பாளமும் கலைப் பொருள்கள் என்று அங்கீகரித்துக் குஸுமா காட்சிக் கூடத்தில் இடமளிக்க ஏற்பாடு செய்தாள்.

நிரஞ்சனனிடமிருந்த அபூர்வப் பொருள்களைப் பெற, குஸுமா அவனைத் தேடி அடிக்

கடி போகநேர்ந்தது. தான் சேகரித்த அரிய பொருள் களைக் காண அவளையும் அடிக்கடி அழைக்கவேண்டி வந்தது. அவள் வரப்போகி றாள் என்றால் வீடு அமர்க் களப்பட்டது. இந்தமேஜை மேல் பூக்கிண்ணம் அழகாக இருக்கிறதா, அல்லது இந்த மெழுகுப் பொம்மையே கவர்ச்சியாக இருக்கிறதா? அந்தப் புத்தர் சிலைக்குப் பதில் நெட்டி தாஜ்மகாலை வைத்தால் அழகாயிராது. புதுமை வேண்டுமே? இந்த கைய பிரச்னைகளை அவன் சமாளிக்க முடியாமல் திண் டாடுகையில் விஜயாவுக் கும் திண்டாட்டமாகத் தான் இருந்தது. எத்தனை தரம் மாற்றி வைப்பது? நல்ல கலைப் பைத்தியம்.



நடிகர்: நடிப்புங்கறது நம்ப ரத்தத்திலேயே ஊறிப் போச்சு!

நண்பர்: அப்போ நீங்க ரத்த சோகைக்கு ஏதாவது சிகிச்சை செய்துகொள் ளுங்களேன்.

அன்று நிரஞ்சனன் வந்து தேநீர் அருந்திய போது, குஸுமா மேஜை அலங்காரம் பற்றித் துளைத்து எடுக்கையில், அருகே விஜயாவும் இருந்தாள். திடீரென்று நிரஞ்சனன் ஒரு கேள்வியைப் போட்டான்.

''மிஸ் குஸுமா! உங்களிடம் வரும்போ தெல்லாம் நான் கேட்க வேண்டும் என்று நினைக்கிறேன். இந்த ஓவியத்தில் எனக்கு ஒன்றும் புரியவில்லையே?''

கலீர் என்று குஸுமா சிரிக்க ஆரம்பித்து விட்டாள்.

''மிஸ்டர் நிரஞ்சனன்! நீங்கள் இத்தனை வேடிக்கைக்காரர் என்று நான் நினைக்கவே யில்லை.......''

''வேடிக்கையா வான்தவமாகக் கேட் கிறேன் நீங்களே சொல்லுங்கள். மிஸ் விஜயா இந்தப் படத்தின் உயர்வு எங்கே இருக்கிறது? குழந்தை கிறுக்கினாற் போலத் தானே இருக்கிறது?''

''போதும், போதும் மிஸ்டர் நிரஞ்சனன்! எனக்கு நீங்கள் இவ்வளவு நன்றாக நடிப்பீர்கள் என்று இத்தனை நாட்கள் தெரியவில்லை. உண் மையில் எப்படித்தான் குழந்தை போல் தெரி யாதவராகப் பாவனை செய்கிறீர்கள். அற் புதம்....!''

''பார்த்தீர்களா? நான் நிஜம் சொன்ன தும் நீங்கள் பொய் என்கிறீர்கள்!''

குஸுமாவா ஒப்புக் கொள்வாள்?

''உங்களை நம்புவதற்கே இல்லை. உயரிய கலைப் பொக்கிஷங்களை வைத்துக் கொண்டு ஒன்றுமில்லை என்கிறீர்கள். உங்கள் உதவி இல்லாமல் என் கலைக் காட்சி முயற்சி எப்படி யிருந்திருக்குமோ?''

இந்த மாதிரியான சந்திப்புக்களும் பேச்சுக் களும் அடிக்கடி நிகழும். விஜயா எல்லா வற்றையும் பார்த்துக் கொண்டு இட்ட வேலையை நிறைவேற்றுவாள்.

நகரிலுள்ள கலை சம்பந்தமான நிகழ்ச்சிகள் ஒன்று தவறாமல் விஜயம் செய்யும் பிரமுகர்கள் எல்லோரும் மதினா சங்கக் கலைக் காட் சிக்கும் வந்திருந்தார்கள். ஸ்ரீமதி வாஞ்சிக்குப் பெருமை பிடிபடவில்லை. முன்னாள் நீதிபதி ஒருவர் பெண்களின் கலைத் திற மைகளைப் பாதுகாத்து அவ்வப்போது இத்தகைய காட்சிகள் மூலம் உற்சாக மளிக்காத போனால், சமு தாயத்துக்கே அதனால் நஷ்டம் ஏற்படலாம் என். பதைப் பல எடுத்துக்காட் டுக்களுடன் விளக்கி விட்டு, இந்த வகையில் அரும் பாடு பட்டு ஒரு பொருட்காட் சியை ஏற்பாடு செய்ததற்கு மதினா சங்கத்துக்கும், குறிப்பாகக் குஸுமாவுக் கும் பாராட்டுக்களை வழங்கினர்.

காட்சியைத் திறந்து வைத்த திரைப்பட நடிகர் ஒருவர், பேசாமலே, சிறந்த கலைத் துணுக்குகளுக்கு உரியவர்களுக்குப் பரிசுகளை வழங்கினர். நன்றியுரையில் குஸுமா அவை யடக்கமாக, காட்சியின் வெற்றிக்குக் கார ணம் நிரஞ்சனனே என்றும், அவர் அளித்த ஊக்கமும் ஆர்வமுமே தன்னை இவ்விதம் ஈடு பட வைத்ததென்றும் கரகோஷங்களுக்கு இடையே தெரிவித்துக் கொண்டாள்.

நிரஞ்சனன் முன் வரிசையில் உட்கார்ந் திருந்தான். அத்தனை பெண்களின் பார்வை யும் அவன் மீது ஊன்றின. கன்னிப் பெண்கள் பெருமூச்செறிந்தார்கள். இளமை, பணம், அந்தஸ்து, கலையார்வம், நட்பு, இது எவ்வளவு தூரம் கொண்டு விடும் என்பதை யார்தாம் ஊகிக்க முடியாது?

சிலைக் காட்சி முடிந்து ஒரு வாரம் ஆயிற்று.

ஸ்ரீமதி வாஞ்சிக்குக் குடைய ஆரம்பித்தது. குஸுமாவின் திடீர்க் கலைப் புரட்சி எப்படி வந்தது என்பது தாயுள்ளத்துக்குத் தெரி யாதா? அந்தப் பிள்ளையாண்டானுக்கும் இஷ்டம் என்றுதான் தோன்றுகிறது. இல்லா விட்டால் ஓடி ஓடி ஏன் வருகிறான்? குஸுமா வும் கல்லூரி விட்டு இரண்டு வருஷங்க ளாகிறது. முடிந்தால் பழம் நழுவிப் பாலில் விழுந்தாற் போல. இனியும் தான் தலையிடா மல் இந்த நாடகத்தைப் பார்த்துக் கொண் டிருப்பதா?

ஸ்ரீமதி வாஞ்சி இத்தகைய யோசனையில் ஈடுபட்டிருக்கையில் குஸுமா அலங்கரித்துக் கொண்டு மாடியிலிருந்து இறங்கி வந்தாள்.

மேகவண்ணப் பட்டில் சித்திரப் பூங்காத் தலைப்போடு கூடிய சேலை. படகு போல் சுழுத்து விரிந்த செம்பிழம்புச் சோளி. உச்சி யில் முடிந்த கொண்டையில் ஒரு ரத்தச் சிவப்பு ரோஜா. செவிகளில் 'ஸ்ட்ராபெர்ரி'ப் பழங்களைப் போன்ற கெம்புக் காதணிகள். கையிலே சிவப்பு மணிகளாலான அறுகோண அழகுப் பை........

'மதினா சங்கத்துக்கா குஸுமா? விஜயா ஏன் வரவில்லை?''

''அவள் கூட்டிக் கும்பிட்டு லீவு கேட்டாள். எவனோ பெண் பார்க்க வருகிறான் போல்

இருக்கிறது. ஒரே வெட்கம். இனி ஒரு வேளை வேலைக்கு வரமாட்டாளோ என்னவோ?''

''அப்படியா சமாசாரம்?''

''நான் வரேம்மா. டாடா.....!''

குஸுமா வண்டியை ஓட்டிக் கொண்டு போவதைக் கண்டு ஸ்ரீமதி வாஞ்சி உள்ளூற நகைத்துக் கொண்டாள். மஹிளா சங்கத்துக்கு இப்படி அலங்காரமா? நிரஞ்சனைத் தான் பார்க்கப் போவாள்!

வண்டியை நெருக்கடி மிகுந்த சாலையில் ஓட்டிச் செல்லும்போது குஸுமாவுக்கு மனசில் ஒரே பரபரப்பு.

எத்தனையோ சந்தர்ப்பங்கள். நெருங்கி நெருங்கிப் பேச வருகிறார். ஆனால், நெருப்பு சுடும் என்று ஒதுங்குவது போல், மனசைப் புரிந்து கொண்டும் பேச்சைத் தொடாமலே கூசிப் போவது ஏன்?

''கலையை ரசிக்கத் தெரிந்தவர்கள் எல்லோரும் பாக்கியசாலிகள். இல்லையா மிஸ்டர் நிரஞ்சன்!'' என்றாள் ஒரு நாள்

''நீங்கள் அதிர்ஷ்டக்காரர்!'' என்ற பதில் வந்தது.

''நீங்கள் மட்டும்.....?'' என்று அவள் கொஞ்சினாள்.

''உங்கள் வாயால் இந்தப் பாராட்டைக் கேட்க சந்தோஷம், குஸுமா.''

''கலையோடு, காதலும் சேர்ந்தால் அதை விட'' என்று அவளே விஷயத்தைத் தொட்டும்கூட, ''ஆமாம்....ஆமாம்....'' என்று சிரித்தார். இது எந்த ரகமான பதில்

அவள் அழகி. அந்தஸ்துள்ளவள். அவனுக்காக எதையும் செய்யத் தயாராக இருக்கிறாள். இதற்கு மேல் ஒரு பெண் தன்னை எப்படி வெளியிட்டுக் கொள்வாள்? இன்று சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொண்டு நழுவவிடக் கூடாது. பெண்மையின் சாகஸங்கள் அனைத்தும்கூட, இந்த ஒரு முனையில் வந்து நிற்கக் கூடிய வேகத்துடன் அவள் நிரஞ்சனைப் பார்க்க வரும் போது —

என்ன ஏமாற்றம்! ஊரில் இல்லையாம்! வீட்டில் யாருமே இல்லையாமே?... இதை அவளிடம் கூடவா சொல்லக் கூடாது? தெற்கே கோயில்களைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்று போய் விட்டாரா?

நாலைந்து நாட்களில் குஸுமாவுக்கு அலுத்துப் போயிற்று. கலைப்பொருள்கள் இடம் மாறவில்லை; பெருகேறவில்லை. விஜயா நின்று விட்டாள், ஒரு கடிதம் அனுப்பிவிட்டு.

திடீரென்று அந்த வாரம் அவளுடைய தந்தை பறந்து வந்தார். குஸுமாவைக் கண்டதும் குறும்புச் சிரிப்பு மிளிர்ந்தது.

பிறகு விறுவிறுப்பாகக் காரியங்கள் நடந்தன. ஜோசியர் வந்தார். சிறிது நேரத்தில் நிரஞ்சனுடைய தகப்பனார் குருதாஸின் வீட்டில் டெலிபோன் மணி அடித்தது. அவரைக் காண வரலாமா என்று கேட்டுக் கொண்டார் வாஞ்சி.

பதில் கிடைத்ததும் வாஞ்சி தம்பதி, கூடை கூடையாகப் பழங்களுடனும், வெற்றிலைப் பாக்கு மங்கலப் பொருள்களுடனும் சென்றார்கள். குஸுமாவுக்குப் புரியாதா?

இருக்கட்டும்; ஊருக்குப் போனால் சொல்லிக் கொண்டு போகக் கூடாது: கர்வம்

அப்பாவும் அம்மாவும் தலையிட்டு விட்டார்கள். இனி நிரஞ்சனன் அவளுக்கே உரியவனாகும் நாள்.....பொய்க் கோபம், உல்லாசப் பாட்டு எல்லாவற்றையும் அந்தச் சுவரில் உள்ள முகம்தான் பார்க்கிறது!

வண்டி விரைவில் திரும்புகிறது.

அதற்குள்ளாகவா? அப்பா என்ன இத்தனை கோபத்துடன் இறங்கி வருகிறார்?

''அவமானம்! அசட்டுத்தனம்! உன் பேச்சைக் கேட்டு....''

''நான் கண்டேனா? அவன் புத்தி அவ்வளவு தானா? பாதாம்கீரை விட்டுக் காடிக் கஞ்சிக்கு ஓடுறாப் போல, நம்ம மகள் குஸுமா எங்கே, ஒரு குன்றிமணி பொன்னுக்கு வழியில்லாத வேலைக்காரிப் பெண் எங்கே? கன்னி, நம்ம உப்பைத் தின்னுட்டு நமக்கே துரோகம் செய்ததே? மயக்கி மயக்கிப் பேசும் பேச்சு!''

''விட்டுத் தள்ளு குப்பை! நீங்க முட்டாள் ஆனபின் பிறத்தியாரைத் திட்டி என்ன பிரயோசனம்? அவன் இஷ்டம் அந்தப் பெண்ணைப் பண்ணிக்கிறேன்னான். ஒரு மனுஷருக்குத் தெரியாமல் திருச்செந்தூரிலே நேத்துத்தான் கல்யாணம். எனக்கு நிக்க நேரமில்லேன்னு சந்தனப் பேலாவை நீட்டுகிறார். அவரே அறியலே. விட்டுத் தள்ளு! நம்ம குஸுமாவுக்கு இதைவிட உயர்ந்தவன் வருவான்.''

விஜயாவையா கல்யாணம் செய்து கொண்டான்? அவளுக்காகவா இங்கு வந்ததும்கூட? குஸுமாவினால் நம்பமுடியவில்லை.

சை! எப்படியெல்லாம் ஏமாந்து போனாள். கலையாம்! சிலையாம்! பைத்தியக்காரத்தனம்!

சுவரிலிருந்து பூத உருவம் போல் நோக்கும் படத்தில் அவள் கடுமை பாய்கிறது.

தரித்திரப் படம். ஆயிரம் ரூபாய்க்கு மேல் விலை. பைத்தியக்காரன். இது கலையாம்! சரியில்லாத பாசாங்கு.... மூலையில் வீசியெறியும் ஆவேசத்துடன் நெருங்குகையிலே, பாதி முகம் கேலிச் சிரிப்புச் சிரிக்கிறது.

வெறும் பாசாங்குதான். நான் சொல்லவில்லை? உண்மையை மறைக்கும் பாசாங்கு. ஒருவரை யொருவர் ஏமாற்றுவது போல. உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளவில்லை? திடுக்கிட்டாற் போல நிற்கிறாள். கலைஞன் ஒளிந்திருக்கிறானா? இன்னொரு பாதி அழுகிறது.

ஐயோ, பாவம்! உனக்காக நான் வருந்துகிறேன். உண்மையைத் தெரிந்து கொள்ளவே வேண்டாம் என்று பொய்யைப் பற்றிக் கொண்டு ஏமாற்றமடைந்து துன்புறுகிறாயே? பாவம்....

புது ஞானம் பெற்றாற் போல் குஸுமா படத்தையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited. at the Kalki Press. Kilpauk. Madras-10.
Managing Editor. T. Sadasivam

உங்கள் குழந்தைகளுக்கு

# இருமல், ஜலதோஷம் இருந்தால்





# ஸிரோலின் 'ரோஷ்'

## கொடுத்து பூர்ண நிவாரணம் பெறச் செய்யுங்கள்




உங்கள் குழந்தைகளுக்கு இருமல் அல்லது ஜலதோஷமிருந்தால் அசட்டையாய் இருக்காதீர்கள்—ஸிரோலின் கொடுத்து அபாயமின்றி துரிதமாக பூர்ண நிவாரணம் பெறச் செய்யுங்கள். அதன் இனிய ருசியை உங்கள் குழந்தைகள் பெரிதும் விரும்புவார்கள். ஸிரோலின் உங்களுக்கும் மிகச் சிறந்தது! அது உங்கள் இருமலை நிறுத்துவதோடு மட்டுமல்லாமல், இருமலை உண்டுபண்ணும் கிருமிகளைக் கொல்லவும் செய்கிறது. ஸிரோலின் தொண்டைப் புண்களுக்கு சமனமூட்டுகிறது, கபம் மற்றும் சளியைப் போக்குகிறது. அது எவ்வளவு கடுமையான இருமலிருந்தும் அபாயமின்றி துரிதமாக நிவாரணமளிக்கிறது.

உங்கள் வீட்டில் எப்பொழுதும் **ஸிரோலின்** வைத்திருங்கள்

'ரோஷ்' தயாரிப்பு

சோல் டிஸ்டிரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

நம் சாவித்திரியிடமிருந்து மலரும் இரகசியம்

எனது மேனியெழிலுக்கு ஆதாரமானது லக்ஸ்!

'அழகுவில்லைகளாம்,
அதுபோலே
அழகுவண்ணங்களாம்!

என்கிறார் அழகுக் கலைச்செல்வி
சாவித்திரி




சினிமா நட்சத்திரங்களின் தூய, மென்மையுள்ள அழகுசாதன சோப்.

LTS. 113-X29 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.